மகா வித்துவான்

# மீனாட்சிசுந்தரனாரின் பிள்ளைத் தமிழும் கோவையும்



டாக்டர்

## இராம. சௌந்திரவல்லி

முதல் பதிப்பு : ஜுலை 1992

விலை ரூ. 40-00

நூலின் தலைப்பு : மகாவித்துவான் மீனாட்சிசுந்தரனாரின்
பிள்ளைத் தமிழும் கோவையும்

ஆசிரியர் : முனைவர் இராம. சௌந்திரவல்லி,
எம். ஏ., பி. எச்,டி.

தாள் : 14 கிலோ சேசாயி வெள்ளை

நூலின் அளவு : "8½ × 5½"

பக்கங்கள் : 276+10+2 = 288

எண்ணிக்கை : 1000 பிரதிகள்

அச்சகம் : விஜயா பிரிண்டர்ஸ்,
மதுரை-1.



திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின்
நிதி உதவியுடன் வெளியிடப்பட்டது

# வாழ்த்துரை

டாக்டர் தி. முருகரத்தனம்,
தலைவர், தமிழ்ப்பள்ளி,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021

தமிழிலக்கிய வரலாற்றில் சங்க காலத்தை அறிந்த அளவிலும், சோழப் பேரரசர் காலத்தை அறிந்த அளவிலும் நாம் கி. பி. 19-ஆம் நூற்றாண்டை அறிந்ததாகக் கூற முடியாது. 19-ஆம் நூற்றாண்டிற்கு ஒரு சிறப்புண்டு. அது தான் புதுக் காலத்தை ஈன்றெடுத்தது என்று கூறலாம். நீண்ட இடைக்காலம் அப்போது மெல்ல மறைந்து புதுக் கோலம் பூண்டது. ஆனால் இவை திடீர் புரட்சி அல்ல.

இடைக்காலமும் புதுக்காலமும் ஒன்றை ஒன்று தாக்கி இருக்க எதிர்பார்க்கலாம். தாக்கம் இல்லாதது ஒரு விந்தை பத்தொன்பதாம் நூற்றாண்டின் மாபெரும் புலவர்—ஏழைரைக் கம்பர் — என்றெல்லாம் போற்றப்பட்ட மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அத்தகைய தாக்கம் பெறாத வரோ என எண்ணத் தோன்றுகிறது. புதுக்காலத்தின் முன்னோடி வேதநாயகம் பிள்ளையை அறிந்து போற்றியவர் பிள்ளை. இது ஒரு புதிர். அவர் கல்வி முறை, அவர்சார்ந் திருந்த மடங்களின் போக்கு ஆராய்ச்சிக்கு உரியன. தமிழை ஓகோ என்றுயர்த்திய மொழி நூலறிஞர் கால்டுவெல்லுக்குச் சென்ற நூற்றாண்டில் தொல்காப்பியம் முறையாக அறிமுகப் படுத்தப்படவில்லை! அது என்ன விந்தை? மகாவித்துவான் மீனாட்சி சுந்தரனார் இடைக்காலத்தின் கடைப் பிரதிநிதி யாக இருப்பாரோ? இந்தக் காலத்தை முறையாக அறிந்து கொள்ள இந்த ஆய்வேடு பயன்படும் என நம்பலாம்.

இதனை அரிதின் முயன்று உருவாக்கிய இராம. சௌந்திரவல்லி மேலும் தன் சொந்த முயற்சியால் அச்சேற்றித் தமிழ் உலகிற்குத் தந்திருக்கிறார்கள். ஆய்வேடு பரணுக்குரியதல்ல. ஆய்வாளர்கள் பலர் கைக்குரியதாக வேண்டும். அதுவே ஆராய்ச்சியின் வளர்ச்சிக்கு உதவும்.

ஆசிரியர் முனைவர் இராம. சௌந்திரவல்லி பாராட்டுக்கும் உரியவர்; வாழ்த்துக்கும் உரியவர்.

தி. முருகரத்தனம்

# என்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் சிற்றிலக்கியப் புலம் என்பது பரந்துபட்ட ஒன்று, மரபிலக்கிய வரிசையில் விளங்குகின்ற இச்சிற்றிலக்கியங்களின் பல்வேறு கூறுபாடுகள் இன்னும் மிகுதியாக ஆய்வு செய்யப்பட வேண்டியவை என்பதில் ஐயமில்லை. ஆராய்ச்சி மாணவர்களுக்கு இது மிகப்பெரிய களமாக விளங்குகின்றது.

19-ஆம் நூற்றாண்டுப் புலவர் வரிசையில் தகுதியான இடம் பெற்று, தன் புலமைத் திறத்தால் திருவாவடுதுறை ஆதீனத்தில் தமிழ்ப் பணியும், சமயப் பணியும் ஒருங்கே ஆற்றியவர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை. ''மகாவித்துவான் மீனாட்சி சுந்தரனாரின் பிள்ளைத் தமிழும் கோவையும்'' என்னும் இந்நூல் அவர்தம் படைப்புக்களுள் பிள்ளைத் தமிழையும் கோவை நூல்களையும் மையப்படுத்தி ஆக்கம் செய்யப்பெற்றுள்ளது. வருங் கால இலக்கிய ஆராய்ச்சி மாணவர்களுக்கும், 19-ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்று ஆய்வுக்கும் இந்நூல் துணை நிற்க வேண்டும் என்பது என் அவா.

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறையில் முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பட்ட இவ்வாய்வு நூலை, நான் ஆய்வு செய்த காலத்தில் வழிகாட்டியாக இருந்து நெறிப்படுத்திய காலம் சென்ற பேராசிரியர் முனைவர் திரு. நா. செயராமன் அவர்களின் ஆன்மாவிற்குக் காணிக்கை ஆக்குகின்றேன்.

இந்நூல் வெளியீட்டிற்காக நிதி உதவி அளித்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு என் மனம் நிறைந்த நன்றியைச் சமர்ப்பிக்கின்றேன். இந்நூல் வெளியீட்டிற்கு ஆக்கமும், ஊக்கமும் கொடுத்த பாளையங்கோட்டை கம்பன் கழகப் புரவலர், உயர்திரு எம். எஸ். சுந்தரம் பிள்ளை அவர்களுக்கு நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலின் தகுதியை மேம்படுத்தும் வண்ணம் அணிந்துரை வழங்கிச் சிறப்பித்துள்ள தமிழண்ணல், முனைவர் திரு. இராம. பெரியகருப்பன் அவர்களுக்கும் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்துள்ள பேராசிரியர் முனைவர் திரு. தி. முருகரத்தனம் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றி என்றும் உரியது,

இந்நூலைச் சீரிய முறையில் அச்சிட்டு அழகிய வண்ண அட்டையுடன் பதிப்பித்த மதுரை விஜயா பிரிண்டர்ஸ், உரிமையாளர் திரு. ஆர். சொக்கலிங்கம் அவர்களுக்கு நன்றி உடையேன்.

இந்நூல் வெளியீட்டிற்குப் பல்வேறு நிலையிலும் துணை செய்த சகோதரர் திரு. ஆர். இரவிச்சந்திரன், மதுரை அவர்களுக்கும் என்றும் நன்றி உடையேன். இந்நூல் வெளியீட்டு காலத்தில் எனக்கு ஊக்கம் கொடுத்துத் துணைநின்ற சகோதரர் திரு. கே. டி. கணேசன் மண்டல அலுவலகம், மதுரை வங்கி, மதுரை, அவர்களுக்கும், அன்னார் குடும்பத்தார்க்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

இராம. சௌந்திரவல்லி

குற்றாலம்,

# உள்ளுரை

,தமிழண்ணல்'
முனைவர் இராம. பெரியகருப்பன்
முன்னாள் தமிழ்த் துறைத் தலைவர்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை-21.

'ஏரகம்'
4/384 சதாசிவ நகர்
வண்டியூர்ச் சாலை
மதுரை-625 020
20—7—1992

# அணிந்துரை

**மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை** பத்தொன்பதாம் நூற்றாண்டை அலங்கரித்த மாபெரும் புலவர்களில் ஒருவர். அருவிபோல் பாமழை பொழிந்த அப் பேராசானின் கவித்திறத்தைக் கேள்விப்படும்போது நம் வியப்பு பலமடங்காகிறது. நல்லாசிரியர் விருதுபெறும் இன்றைய ஆசிரியப் பெருமக்கள் இவர்தம் வாழ்க்கை வரலாற்றை ஊன்றிக் கற்க வேண்டும். சாதி சமயம் பாராமலும் பொருளை எதிர்பாராமலும் இவர் தம் மாணாக் கர்க்குக் கற்பித்தலே கடமையென வாழ்ந்தனர். அதன் பயன் வீண்போகவில்லை. இவர்தம் மாணாக்கர்களுள் ஒருவராகிய **உ. வே. சாமிநாதையர்** தமிழ் உலகிற்குச் செய்த பெரும்பணி அனைத்தும், ஒருவகையில், இம் மகாவித்துவா னின் கொடை என்று கூறினால் மிகையாகாது. தமிழ்த் தாத்தா உ. வே. சா. அவர்கள் தம் ஆசிரியரைப்பற்றி மனமுருகி எழுதும் வாசகங்களைப் பயில்வார், 'அவரால்இவர் பெற்ற சிறப்பையும் இவரால் அவர் பெற்ற புகழையும்' எண்ணி வியப்பர். இவர்களது ஆசிரிய மாணவ உறவு, கபிலர் பாரி நட்புப்போல, தமிழ் வரலாற்றில் நிலைபெற்ற நன்மதிப்பிற்குரியதாகிவிட்டது;

இத்தகைய பெரும்புலவரைப் பற்றி ஆய்வுமேற்கொண்ட பேராசிரியர், **இராம. சௌந்திரவல்லி,** அவரது பிரபந்த நூல்களில் தம் கருத்தைச் செலுத்தியுள்ளார். மகா வித்துவானின் புலமை தலபுராணம் பாடுவதிலும் சிறு பிரபந்தங்களைப் புனைவதிலும் ஈடுபட்டுப் பட்டைதீட்டிய வயிரமாயிற்று. சிறிதும் பிழைபாடின்றி, மனப்பாடம் செய்த பாடலை ஒப்பிப்பதுபோலப் புதுப் பாடல்களைப் பாடும், பேராற்றல் இவரிடமிருந்தது. உரைநடை தலையெடுத்த காலத்துத்தோன்றிய இவர், கவிபாடுவதிலேயே கருத்தா யிருந்ததை ஆய்வாளர் எடுத்துக் காட்டுகிறார். இவர்தம் பிரபந்த நூல்களில் தலைமை வாய்ந்த பிள்ளைத்தமிழ் நூல்களையும் கோவை நூல்களையும் பேராசிரியர் இராம. சௌந்திரவல்லி இவ்ஆய்வேட்டில் தம் ஆய்வுப்பொருளாக எடுத்துக்கொண்டுள்ளார்.

இவ்ஆய்வேடு ஒரு முழுமையான பார்வையுடனும் பகுப்புச் செம்மையுடனும் எழுதப்பட்டுள்ளது. பிள்ளைத்தமிழ் கோவை நூல்கள் பற்றிய வரலாற்றுவழி வரன்முறையிலான இலக்கணம் இவ்வாய்வில் நன்கு தரப்பட்டுள்ளது. மகா வித்துவான் இவ்விரண்டு சிற்றிலக்கியங்களிலும் புகுத்தியுள்ள புதுமைகளும் கற்பனைவளங்களும் சமய சாத்திரநுட்பங்களும் இந்நூலுள் திறம்பட விளக்கப்பட்டுள்ளன. 'அதீதக் கற்பனை' பிரபந்தங்களும், பத்திமைப் பாடல்களும் மொழிபெயர்ப்புக் காப்பியங்களும் தொடங்கிய போதே புகுந்துவிட்டது. அதன் பெருவளர்ச்சியை குமர குருபரரின் சிற்றிலக்கியங்களிற் காணலாம். ஆயினும் அது மேலும் வளர்ந்து விண்ணையும் மண்ணையும் இணைக்கும் கற்பனைகளாகியதை மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் காண்கின்றோம்.

பேராசிரியர் **இராம. சௌந்திரவல்லி** செவ்விய மொழிநடையில் இவ் ஆய்வுரையை வழங்கியுள்ளார். தாம் எடுத்துக்கொண்ட எப்பொருளேயும் நன்கு விரிவாகவும் ஆழ மாகவும் கற்று, பிறகு அதன்வழி இன்றியமையாக் கருத்துக்களைத் தொகுத்து, நல்ல பகுப்பு முறையடிப்படை யில் அவற்றை நிரலே தரும் போது, படிப்பவர்க்குச் சுவை யாகவும் விறுவிறுப்பாகவும் அஃதமைகிறது. அதாவது, சிற்றிலக்கியம் பற்றிய ஆய்வேடு என்பதனால் ஏற்படக்கூடிய சோர்வை, இவரது பகுப்பும் நடையும் உணர்வும் நீக்கி விடுகின்றன. இவ்வாய்வேட்டைப் படித்து முடிக்கும்போது, மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையைப் பற்றிய ஓர் உயர்ந்த மதிப்பு நம்மனத்துள் நிறைகிறது. இவ்வகையில் ஆய்வாளர் வெற்றிபெறுகிறார். மகாவித்துவான் நூல்கள் பலவற்றுக்கு உரை இல்லை, அவரோ நெருடல் மிகச் செறிவாகப் பாடுபவர். மக்களிடம் அவர் பாடல்கள் மிகுதியும் பரவாமைக்கு இக்கடினப்பாடே காரணமாகும். இருந்தும் அவரது பதினொரு நூல்களை ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு, முயன்று கற்று, ஆய்வேட்டை வழங்கியிருக்கும் திருமதி முனைவர் **இராம. சௌந்திரவல்லி** நம் பாராட்டுக் குரியவராகிறார்.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை வான்முகில் போல் கவிவளம் வழங்கினாலும். வாழ்க்கையில் 'வறுமையில் செம்மையே' கண்டவர். அவர்தம் மாணாக்கர்களால் அவர் புகழ் உலகிற்கு விளங்கலாயிற்று. அதுபோல் இவ்வாய் வேட்டினாலும் அப்புலவர் மாமணியின் பெரும்புலமைத் திறம் உலகிற்கு எடுத்துக்காட்டப்படுகிறது. ஆய்வாளர் இத்தகைய ஆய்வுரைகளை மேன்மேலும் தமிழுலகிற்கு வழங்கவேண்டுமென வாழ்த்துவோமாக! மகாவித்துவானின் ஆசியும் அருளும் இவ்வாய்வாளருக்கு என்றென்றும் உண்டு

## சுருக்கக் குறியீட்டு விளக்கங்கள்

| | | |
|---|---|---|
| அகிலாண்ட. | — | அகிலாண்ட நாயகி பிள்ளைத்தமிழ் |
| பெருந்திரு. | — | பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழ் |
| காந்தி. | — | காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் |
| திருவெண். | — | திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ் |
| முருகர். | — | திருவிடைக்கழிமுருகர் பிள்ளைத்தமிழ் |
| அம்பல. | — | அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ் |
| மங்கள. | — | மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ் |
| சேக்கிழார். | — | ஸ்ரீ சேக்கிழார் பிள்ளைத்தமிழ் |
| குளத்தூர். | — | குளத்தூர்க்கோவை |
| வியாசை. | — | வியாசைக்கோவை |
| சீகாழி. | — | சீகாழிக்கோவை |
| தால். | — | தாலப்பருவம் |
| செங். | — | செங்கீரைப்பருவம் |
| சப். | — | சப்பாணிப்பருவம் |
| முத். | — | முத்தப்பருவம் |
| பொன். | — | பொன்னூசல்பருவம் |
| தொல். எழுத்து | — | தொல்காப்பியம், எழுத்ததிகாரம் |

| | | |
|---|---|---|
| தொல். பொருள் அகத். | — | தொல்காப்பியம்: பொருளதிகாரம், அகத்திணையியல் |
| தொல். பொருள். புறத் | — | தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல். |
| தொல். பொருள். உவம. | — | தொல்காப்பியம், பொருளதிகாரம், உவமவியல |
| பிங்கல. | — | பிங்கலந்தை |
| பன். | — | பன்னிரு பாட்டியல் |
| வெண். | — | வெண்பாப் பாட்டியல் |
| நவ. | — | நவநீதப் பாட்டியல் |
| சிதம். | — | சிதம்பரப் பாட்டியல் |
| இலக். | — | இலக்கணவிளக்கப் பாட்டியல் |
| நம்பி. | — | நம்பியகப்பொருள் |
| தண்டி. பொருள், | — | தண்டியலங்காரம், பொருளணியியல், |
| அகம். | — | அகநானூறு |
| திருக். | — | திருக்கோவையார் |
| மு. வ. | — | மு. வரதராசன் |
| உ. ஆ. | — | உரை ஆசிரியர் |
| ப. ஆ. | — | பதிப்பாசிரியர் |
| ப. | — | பக்கம் |
| பக். | — | பக்கங்கள் |
| மு. நூல் | — | முன்கூறப்பட்ட நூல் |
| P. | — | Page |
| PP. | — | Pages |
| Ibid. | — | Ibidem |

# I. முன்னுரை

## ஆய்வு நோக்கம்

'மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் பிள்ளைத் தமிழ் நூல்களும் கோவை நூல்களும்' என்னும் இவ்வாய்வு, 19.ஆம் நூற்றாண்டுக் கவிஞராகிய மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் இலக்கியப் படைப்புக்களுள் பிள்ளைத்தமிழ் நூல்களையும், கோவை நூல்களையும் திறனாய்ந்து, மதிப்பீடு செய்வதை நோக்கமாகக் கொண்டுள்ளது.

## ஆய்வு மூலங்கள்

மீனாட்சிசுந்தரனாரின் பிரபந்தங்களுள் பிள்ளைத்தமிழ் நூல் களும், கோவை நூல்களும் இவ்வாய்வுக்குரிய முதன்மை மூலங் களாகின்றன. அவை:

1. திருவானைக்கா அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ்
2. திருத்தவத்துறைப் பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத் தமிழ்
3. உறையூர் ஸ்ரீகாந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்
4. திருப்பெருமணநல்லூர்த் திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ்
5. திருவிடைக்கழி முருகர் பிள்ளைத்தமிழ்
6. திருவாவடுதுறை ஸ்ரீ அம்பலவாணதேசிகர் பிள்ளைத் தமிழ்
7. திருக்குடந்தை ஸ்ரீமங்களாம்பிகைபிள்ளைத்தமிழ்
8. ஸ்ரீசேக்கிழார் பிள்ளைத்தமிழ்
9. குளத்தூர்க்கோவை
10. வியாசைக்கோவை
11. சீகாழிக்கோவை

'ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பிரபந்தத் திரட்டு' என்னும் நூலின் இரண்டாம் பதிப்பு உ. வே. சாமிநாதையரால், 1926–ஆம் ஆண்டு வெளிடப்பட்டுள்ளது. அந்நூலே இவ்வாய்வுக்கு முதன்மை மூலமாகப் பயன்படுத்தப்படுகின்றது.

ஆசிரியர் எழுதிய பிள்ளைத்தமிழ் நூல்களுள் பிரம்மவித்தியா நாயகி பிள்ளைத்தமிழும், கண்ணபுரம் பாகம்பிரியாள் பிள்ளைத் தமிழும் கிடைக்காதகாரணத்தால் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட வில்லை.

வியாசைக்கோவையின் முதல் நூறு பாடல்கள் மட்டுமே இவரால் எழுதப்பட்டவை. எனவே அவை மட்டுமே ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

இவ்வாய்வுக்குப் பின்வரும் நூல்கள் துணைமை மூலங்களாகக் கொள்ளப்படுகின்றன.

1. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் — முதல் பாகம், இரண்டாம் பாகம்.
2. சிற்றிலக்கியங்கள், பத்தொன்பதாம் நூற்றாண்டு இலக்கி யங்கள் பற்றிய நூல்கள், திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள் கட்டுரைகள், சொற்பொழிவுகள்.
3. இலக்கிய உத்திகள் பற்றிய நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள்.
4. சைவ சித்தாந்த சாத்திரங்கள், சைவ சமயத் தொடர்பான நூல்கள், சைவ சித்தாந்தம் பற்றிய திறனாய்வு நூல்கள், சொற்பொழிவுகள், கட்டுரைகள்.

## ஆய்வு எல்லை

மீனாட்சிசுந்தரனார் எழுதிய பிரபந்தங்கள் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அந்தாதி | — 14 | 6. | தூது | — 2 |
| 2. | பிள்ளைத்தமிழ் | — 10 | 7. | உலா | — 1 |
| 3. | மாலை | — 7 | 8. | குறவஞ்சி | — 1 |
| 4. | கோவை | — 3 | 9. | சிலேடை வெண்பா | -- 1 |
| 5. | கலம்பகம் | — 2 | 10. | பதிகம் | — 4 |

இவற்றுள், ஆய்வேட்டின் பக்க வரையறையைக் கருதி எட்டுப் பிள்ளைத்தமிழ் நூல்களும், மூன்று கோவை நூல்களும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன. ஆசிரியரின் படைப்புக் களுள் சேக்கிழார் பிள்ளைத்தமிழ் தவிர ஏனைய நூல்களுக்கு விளக்கவுரை கிடையாது. அம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ், சீகாழிக்கோவை இரண்டிற்கும் குறிப்புரைகள் மட்டும் கிடைக் கின்றன. எனவே, இவர்தம் பாடல்களின் கடின நடை காரண மாகவும், ஆய்வுக்குட்பட்ட நூல்களில் பாடல்களின் மொத்த எண்ணிக்கை 1920ஆக அமைதலாலும், ஆய்வு எல்லை பிள்ளைத் தமிழ் நூல்களும், கோவை நூல்களும் என வரையறுக்கப்படுகின்றது.

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வில் பகுப்புமுறை (Analytical), விளக்கமுறை (descriptive), திறனாய்வுமுறை (critical) ஆகிய அணுகுமுறைகள் பின்பற்றப்படுகின்றன.

முதலில் ஆசிரியரின் வாழ்க்கை வரலாறு விளக்கப்படுகின்றது. அடுத்து, பாட்டியல் நூல்கள் பிள்ளைத்தமிழ், கோவை நூல் களுக்குக் கூறும் இலக்கண வரையறைகள் பகுத்துக் கூறப்படு கின்றன. பின்னர் ஆசிரியரின் படைப்புக்கள் எந்த அளவிற்கு அவ் விலக்கணங்களை ஒட்டியும், மீறியும் படைக்கப்பட்டுள்ளன என்பது திறனாய்வு முறையில் ஆராயப்படுகின்றது.

இலக்கியத்திற்குரிய கற்பனை, வருணனை, அணிகள், மொழி நடை ஆகிய கூறுகள் விளக்கமுறையிலும், திறனாய்வு முறையிலும் ஆராயப்படுகின்றன.

ஆசிரியரின் படைப்புக்களுள் காணப்படும் சமய உணர்வு, சைவ சித்தாந்தக் கருத்துக்கள், புராணச் செய்திகள் ஆகியவை விளக்கமுறையிலும் திறனாய்வு முறையிலும் ஆய்வு செய்யப்படு கின்றன.

## ஆய்வு முன்னோடிகள்

இவ்வாய்வுக்குரிய முன்னோடிகளாகப் பின்வரும் ஆய்வுகள் அமைகின்றன.

ப. ஆறுமுகம், 'மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யின் புராண நூல்கள்' என்னும் தலைப்பில் ஆய்வு செய்துள்ளார்.[1] ஆசிரியரின் தலபுராணங்கள் அனைத்தும் இவ்வாய்வில் இடம் பெறு கின்றன. தலபுராண வளர்ச்சியும், மீனாட்சிசுந்தரனாரின் தலபுராண நூல்களின் அமைப்பும், இலக்கியத் திறனும் இவ்வாய்வில் பேசப் படுகின்றன.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் முதுகலைப் பட்டத்திற் காக ஆசிரியரின் சில பிள்ளைத்தமிழ் நூல்களில் ஆய்வேடுகள் அளிக்கப்பட்டுள்ளன.[2]

வி. சதாசிவம், 'Tamil Poetry of the Nineteenth Century எனும் தலைப்பில் ஆய்வு செய்துள்ளார்.[3] இவ்வாய்வு பத்தொன்ப தாம் நூற்றாண்டின் புலவர் பெருமக்களைப் பற்றியதாக அமைந் துள்ளது.

இவை தவிரப், பிள்ளைத்தமிழ், கோவை இலக்கியங்கள் பற்றிய ஆய்வேடுகளும் காணப்படுகின்றன. எஸ். வளவன், 'பிள்ளைத்தமிழ் தோற்றமும் வளர்ச்சியும்' என்னும் தலைப்பில் ஆய்வு செய்துள்ளார்.[4] வி. ஆர். மகாலிங்கம் 'குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ்'[5] பற்றியும், அ. வேங்கடசாமி, 'பிள்ளைத்தமிழும் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழும்' என்னும் தலைப்பிலும்,[6] எ. அன்னக்கிளி, 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் வருணனைப் பகுப்பாய்வு, எனவும் [7]ஊரப்பன்,' கோவை இலக்கிய வளர்ச்சியும் மதிப்பீடும்— சிறப்பாகத் தஞ்சவாணன்கோவை' என்னும் தலைப் பிலும்[8] ஆய்வேடுகள் அளித்துள்ளனர்.

## ஆய்வுப் பகுப்பு

இவ்வாய்வு ஏழு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை:

1. முன்னுரை
2. மீனாட்சிசுந்தரனாரின் வாழ்க்கை வரலாறும் படைப்புக் களும்
3. பிள்ளைத்தமிழ் நூல்களின் அமைப்பு
4. கோவை நூல்களின் அமைப்பு
5. இலக்கியக் கூறுகள்
   - 5.1. அணிநலன்
   - 5.2. கற்பனை வளம்
   - 5.3. மொழிநடை
6. சமயக் கருத்துக்கள்
7. முடிவுரை

## 1. முன்னுரை

முன்னுரை எனும் இயலில் ஆய்வு நோக்கம், ஆய்வு மூலங்கள், ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறை, ஆய்வு முன்னோடிகள், ஆய்வுப்பகுப்பு, முடிவுரை, பின்னிணைப்புக்கள், மேற்கோள் விளக்கம் ஆகிய செய்திகள் விளக்கப்படுகின்றன.

## 2. மீனாட்சி சுந்தரனாரின் வாழ்க்கை வரலாறும் படைப்புக்களும்

இவ்வியலில் மீனாட்சிசுந்தரனாரின் வாழ்க்கை வரலாறு தொகுத்தளிக்கப்படுகிறது. 19-ஆம் நூற்றாண்டுக்காலப் பின்னணி, இலக்கிய வரலாறு, அக்காலத்தில் வாழ்ந்த புலவர் பெருமக்கள்

என்பன பேசப்படுகின்றன. ஆசிரியர் சார்ந்திருந்த திருவாவடுதுறை ஆதீன வரலாறும், தொண்டுகளும் கூறப்படுகின்றன. வறுமையும் புலமையும் பெற்று வாழ்ந்த மீனாட்சிசுந்தரனாரின் வாழ்க்கை அக் காலச் சூழலோடு இணைத்து விளக்கப்படுகின்றது. அவர்தம் படைப்புக்கள் காலவரிசைப்படி தொகுத்துத் தரப்படுகின்றன.

## 3. பிள்ளைத்தமிழ் நூல்களின் அமைப்பு

இவ்வியலில் பாட்டியல் நூல்கள் பிள்ளைத்தமிழுக்குக் கூறும் இலக்கணங்கள் தொகுக்கப்பட்டுத் தமக்குள் ஒப்பிடப்படுகின்றன. பிள்ளைத் தமிழ் இலக்கியத் தோற்றமும், முதல் பிள்ளைத்தமிழும் பேசப்படுகின்றன. மீனாட்சிசுந்தரனாரின் பிள்ளைத்தமிழ் நூல்களின் முறையான அறிமுகத்திற்குப்பின், பாயிரம், காப்பு ஆகியவற்றின் அமைப்பு, ஆசிரியர் கையாண்டுள்ள புதுமையான நெறிகள் என்பவை ஆராயப்படுகின்றன. ஏனைய பருவங்களில் அமைந்துள்ள பருவப் பொருண்மை, பருவத் தலைப்புக்களுக்கு இயைபுடையன வாக உள்ளனவா என்று ஆராயப்படுகின்றன. இது தொடர்பான பட்டியல் ஒன்றும் இவ்வியலின் பின் பகுதியில் இணைக்கப்படு கின்றது. தலபுராணத்திலும் இவர் அமைத்துள்ள பிள்ளைத்தமிழ் இலக்கிய நெறி பேசப்படுகின்றது.

## 4. கோவை இலக்கியங்களின் அமைப்பு

இவ்வியல் இறையனாரகப்பொருள், நம்பியகப்பொருள் ஆகிய இலக்கண நூல்களின் அகப்பொருள் கருத்துக்களையும், கோவை இலக்கியத்திற்குப் பாட்டியல் கூறும் இலக்கணங்களையும் தொகுத் தாய்கிறது. மீனாட்சி சுந்தரனாரின் கோவை நூல்களில் அமைந் துள்ள அகத்துறைக் கூற்றுக்கள் எந்த இலக்கணத்தை மிகுதியும் பின்பற்றியுள்ளன என்பதும், அவர் நூல்களில் காணப்படும் மிகைத் துறைகள் எங்கிருந்து பெறப்பட்டவை என்பதும் ஆராயப்படுகின்றன.

கோவை நூல்களின் அகத்திணை மரபுகள் தனித்தனியாகப் பேசப்படுகின்றன. இறுதியில் மூன்று கோவை நூல்களிலும் காணப் படும் சில பொதுநெறிமுறைகளும், சிறப்பு நெறிமுறைகளும் ஒப்பிட்டு விளக்கப்படுகின்றன.

## 5. இலக்கியக் கூறுகள்

இவ்வியலில் மீனாட்சிசுந்தரனாரின் பிள்ளைத்தமிழ், கோவை நூல்களின் இலக்கியக் கூறுகள் 1. அணிநலன், 2. கற்பனை வளம். 3. மொழிநடை என்னும் தலைப்புக்களில் ஆராயப்படு கின்றன.

அணிநலன் என்ற தலைப்பில் அணிநலனால் இலக்கியம் பெறும் பயன் பேசப்படுகின்றது. மீனாட்சிசுந்தரனார் பாடல்களில் பொருந்தியுள்ள அணிகள் எடுத்துக்காட்டுகளுடன் பகுத்துக் கூறப் படுகின்றன. அவ்வணிகள் பொருட்புலப்பாட்டிற்கும், வருணனை கட்கும், புலமைத்திறம் உணர்த்துதற்கும் பயன்பட்டுள்ள நெறிமுறை பற்றி ஆராயப்படுகின்றது. ஆசிரியரின் சமய உணர்வு, இயற்கை ஈடுபாடு போன்றவையும் புலப்படுத்தப்படுகின்றன.

இலக்கியங்களில் அமையக்கூடிய கற்பனைகள் இருவகைப் படுத்தப்பட்டு இத்தலைப்பில் விளக்கப்படுகின்றன. மீனாட்சி சுந்தரனாரின் கற்பனைத்திறம் தக்க சான்றுகளுடன் நிறுவப்படு கின்றது.

ஆசிரியரின் மொழிநடைச் சிறப்பு தற்கால நடையியல் ஆய்வுக் கேற்ப ஆராயப்படுகின்றது. மீனாட்சிசுந்தரனார் பாடல்களில் ஒலி யமைப்பு, சொற்தேர்வு, தொடரமைப்பு, யாப்பு எனும் இவை எத்தகு இடம்பெற்றுள்ளன என்பதும், இவர் பாடல்கள் கடின நடையுடையவை என்பதற்கான காரணங்களும் ஆராயப்படுகின்றன.

## 6. சமயக் கருத்துக்கள்

சைவ சமயத்தைச் சார்ந்த மீனாட்சிசுந்தரனார் தம் சமய உணர்விற்கு ஏற்பப் பிள்ளைத்தமிழ், கோவை நூல்களில் எந்த அளவிற்குச் சமயக் கருத்துக்களைப் பயன்படுத்தியுள்ளார் என்பது இவ்வியலில் பேசப்படுகின்றது. சைவ சித்தாந்தக் கருத்துக்களில் எவை எவை இவரால் குறிப்பிடப்படுகின்றன என்பது சித்தாந்த நூல்களோடு ஒப்பிட்டு ஆராயப்படுகின்றது. இவர் கையாண்டுள்ள புராணக்கதைகள், அடியவர் வரலாறு ஆகியவை தொகுத்துத் தரப்படுகின்றன.

## 7. முடிவுரை

இவ்வாய்வின் முடிவுகள் இவ்வியலில் தொகுத்துத் தரப்படு கின்றன. மீனாட்சிசுந்தரனாரின் புலமைத் திறன் மதிப்பீடு செய்யப் படுகின்றது. இவ்வாய்வின் வழிநின்று ஆசிரியரின் பிற படைப்புக்கள் எவ்வாறு ஆய்வு செய்யப்படலாம் என்பதும் கூறப்படுகின்றது.

## பின்னிணைப்புக்கள்

இவ்வியலில் பின்னிணைப்புக்களாகச் சில செய்திகள் தரப்படு படுகின்றன.

1. திருவாவடுதுறை ஆதீன அகச்சந்தான குரவர்கள், புறச்சந்தான குரவர்கள், குருமகாசந்நிதானங்கள்.

2. சீகாழி — பன்னிரு பெயர்க்காரணம்.
3. இருவகைக் கற்பனைகளும் அமைந்த பாடல்களின் புள்ளி விபரம்.
4. இறைவனின் இருபத்தைந்து வடிவங்களும், முப்பத்தாறு தத்துவங்களும்.

### மேற்கோள் விளக்கம்

இவ்வாய்வுடன் தொடர்புடைய பிற இலக்கியப் பாடல்களும், இலக்கண நூற்பாக்களும், சான்றோர் கருத்துக்களும் ஆங்காங்கே மேற்கோளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. மீனாட்சிசுந்தரனாரின் பாடல் வரிகளும் தேவையான இடங்களில் மேற்கோளாக அமைகின்றன.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களை இவ்வாய்வு மீனாட்சிசுந்தரனார் என்று குறித்துச் செல்கிறது.

## குறிப்புக்கள்

1. ப. ஆறுமுகம், மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் புராண நூல்கள், பிஎச். டி. ஆய்வேடு, வெங்கடேசுவரன் பல்கலைக்கழகம், 1983.
2. Reg. No. 5093, திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ், 1979.
   Reg. No. 4781 திருவானைக்கா அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ், 1979.
   Reg No. 5088, காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் 1979.
   Reg. No. 4771, பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழ், 1979.
3. V. Sadhasivam, Tamil Poetry of the Nineteenth Century, Thesis submitted for the M. Litt. Degree, Annamalai University, 1948.
4. எஸ். வளவன், பிள்ளைத்தமிழ் தோற்றமும் வளர்ச்சியும், எம். லிட். ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம்.
5. வி. ஆர். மகாலிங்கம். குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், எம். லிட். ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம் 1956
6. அ. வேங்கடசாமி, பிள்ளைத்தமிழும் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழும், எம். ஃபில். ஆய்வேடு.
7. எ. அன்னக்கிளி, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் வருணனைப் பகுப்பாய்வு, எம். ஃபில். ஆய்வேடு, கேரளப் பல்கலைக்கழகம்.
8. ஊரப்பன், கோவை இலக்கியங்களின் வளர்ச்சியும் மதிப்பீடும் சிறப்பாகத் தஞ்சைவாணன் கோவை. சென்னைப் பல்கலைக்கழகம், 1982.

# 2. மீனாட்சிசுந்தரனாரின் வரலாறும் படைப்புக்களும்

## 2. 0 முன்னுரை

தமிழகத்தில் வேற்றுச் சமயங்களின் நுழைவு சமயப் பூசல்களுக்குக் காரணமாயிற்று. எனினும், இப்பூசல்களால் தமிழ்இலக்கிய உலகம் வளர்ச்சியடைந்தது. பன்னிரு திருமுறை ஆசிரியர்களால் தொடங்கி வைக்கப்பெற்ற சைவசமய எழுச்சி கி. பி. 14— ஆம் நூற்றாண்டில் சிறப்பான நிலையை அடைந்தது. இக்கால கட்டத்தில் சைவ மடங்களின் உதவியினால் சைவ இலக்கியங்களும், தத்துவ நூல்களும் பலவாறாகப் பெருகின. இவற்றுள் தலபுராணங்கள், பிரபந்தங்கள் போன்றவற்றின் வளர்ச்சி குறிப்பிடத்தக்கது.

## 2. 1 சைவ மடங்கள்

2. 1. 1 சைவ மடங்கள் சமயத்தையும், தமிழ் இலக்கியங்களையும் ஒருங்கிணைத்து வளர்த்தன. எனவே மக்களிடையே இம் மடங்கள் நன்மதிப்பைப் பெற்று விளங்கின. ‘‘ மடங்களின் சம்பிரதாயங்கள், நடை முறைகள், சிஷ்ய பரம்பரைகள். சிவபூசாக்கிரமங்கள் முதலியன சமயத்தின் அடிப்படையில் தமிழ்ப் பண்பாட்டை விளக்குவன. இம் மடங்களில் நிகழும் குருபூசைகள் ... போன்றவை மக்களிடையே குருபக்தி, தெய்வ நம்பிக்கை, எஜமான விசுவாசம், கலையுணர்ச்சி முதலிய நற்பண்புகளை வளர்த்தன’’ [1] என்று இம்மடங்களின் சமுதாயப்பணி பாராட்டப்படுகிறது.

2. 1. 2 சூழலுக்கும், வருவாய்க்கும் ஏற்ப வளர்ச்சியடைந்த இம் மடங்களுள் திருவாவடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம், திருப்பனந்தாள் காசிமடம் என்பவை குறிப்பிடத்தக்கன. திருவாவடுதுறை ஆதீனத் தலைமைப் புலவர் மீனாட்சிசுந்தரனார் பற்றி இவ்வாய்வு செல்கின்றமையின் அம்மடம் பற்றிய செய்திகளைக் காணலாம்.

### 2.1.2.1 திருவாவடுதுறை ஆதீனம்

2.1.2.1.1 தஞ்சை மாவட்டத்தில், தேவாரம் பெற்ற சிறப்புடைய தலங்களுள் ஒன்று ஆடுதுறை. இங்கு திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீ நமச்சிவாய தேசிக மூர்த்திகளால் தோற்றுவிக்கப்பட்டது.

கொள்ளும் இவ்வாதீனத்தார் அகச்சந்தான குரவர்கள், புறச்சந்தான குரவர்கள், அபிடேக பரம்பரையினர் என மூவகையாகக் கூறப்படுகின்றனர் (காண்க: பின்னிணைப்பு எண். 1).

2.1.2.1.2 புறச்சந்தானத்தார் வரிசையில் இறுதியாக உள்ள "ஸ்ரீ நமச்சிவாய தேசிகர் தமது ஆசிரியராகிய ஸ்ரீ சித்தர் சிவப்பிரகாச தேசிகர் திருவாவடுதுறையில் வகுத்த அறையிலே அவராணைப்படி எழுந்தருளியிருந்து சிவஞானபோத உபதேச சித்தாந்த சைவ பரம்பரை நிலவுலகத்திலே நின்று நிலவுமாறு ஆதீனத்தை நிலை நிறுத்தினார்"[2] என்பர்.

2.1.2.1.3 ஸ்ரீ மெய்கண்டாரின் காலம் கி. பி. 1223 எனவும், ஆதீனத்தைத் தோற்றுவித்த ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளின் காலம் கி. பி. 1433 எனவும் த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை குறிப்பிடுகிறார். எனவே திருவாவடுதுறையின் சமய இயக்கம் ஏறத்தாழ கி. பி. 15-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தொடங்கிவிட்டது எனலாம்.

2.1.2.1.4 கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி என வழங்கப் பெறும் இவ்வாதீனம் தமிழ் இலக்கண, இலக்கியங்கள் பல வளர்தற்குக் காரணமாயிற்று. காலப் போக்கில் சைவசமய நூல்களைக் கற்றலும் கற்பித்தலுமே இதன் தலைமைப் பணியாயிற்று.

2.1.2.1.5 இவ்வாதீனம் ஆண்டுதோறும் திருமந்திர மாநாட்டை நடத்தி வருகிறது. திருமந்திர உரைநூல், மலர்கள் போன்றவை வெளியிடப்படுகின்றன. திருவெண்ணெய் நல்லூரில் சிவஞானபோத மாநாடும் பிறவிடங்களில் திருமுறை மாநாடும் நடத்தப்படுகின்றன.

## 2.2 18, 19—ஆம் நூற்றாண்டுப் பின்னணி

2.2.1 18—ஆம் நூற்றாண்டில் தோன்றிய இலக்கியங்கள் பெரும்பாலும் பிரபந்தங்களாகவும் தலபுராணங்களாகவுமே அமைந்துள்ளன. திரிகூடராசப்பக் கவிராயர், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், சீர்காழி அருணாசலக் கவிராயர், சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர் போன்ற கவிராயர்கள் இந்நூற்றாண்டில் வாழ்ந்தனர்.

2.2.2 அதை ஒட்டிய 19-ஆம் நூற்றாண்டில் மாபெருங் கவிஞராகத் திகழ்ந்தவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை.

19—ஆம் நூற்றாண்டு, இலக்கிய உலகில் ஒரு புதிய திருப்பத்தைப் பெற்றது. சிற்றிலக்கியங்களும், தல புராணங்களும் இந்நூற்றாண்டிலும் தோன்றின எனினும், வேறுபல புதிய இலக்கியத்

துறைகளும் தோன்றி வளரலாயின. ஆங்கிலேயரின் ஆதிக்கம், மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தது.

சேதுபதி மன்னர்கள் தமிழ்வளர்த்த காலத்தில், இந்து, இஸ்லாமிய, கிறித்தவப் புலவர்களும் தமிழ் வளர்ச்சிக்குக் காரண மாயினர். மேலை நாட்டவர் வரவால் தரங்கம்பாடி, அம்பலக்காடு போன்ற இடங்களில் அச்சுக் கூடங்கள் நிறுவப்பட்டன.

19–ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் சிறுகாப்பியங்கள், நாடகம், உரை நடை போன்றவை தோன்றின. பிற்பகுதியில் தல புராணங்கள், தோத்திரப் பாடல்கள், மொழிபெயர்ப்பு, சோதிடம், அகராதிகள், ஆராய்ச்சி நூல்கள் போன்றவை தோன்றின. தொல்பொருள் ஆய்வு, கல்வெட்டு ஆராய்ச்சி போன்ற புதிய துறைகளும் தோற்றம் பெற்றன. அச்சுக் கூடங்கள் நிறுவப்பெற்றதன் காரணமாகச் சுவடிகள்பல நூல்வடிவம் பெற்றன.

## 2. 2. 2. 1 பெரும் புலவர்கள்

கவிராயர் மலிந்த இக்காலத்தை, ''இராமலிங்கர், ஆறுமுக நாவலர், மீனாட்சிசுந்தரம் பிள்ளை நூற்றாண்டு''[3] என்றே மது.ச. விமலானந்தம் குறிப்பிடுகின்றார். ஏனெனில் புலவர் கூட்டம் மிகுந்த் பத்தொன்பதாம் நூற்றாண்டில் குறிப்பிடத்தக்க பெருஞ்சிறப்புப் பெற்றவர்கள் இம்மூவருமே யாவர்.

### 2. 2. 2. 1. 1 மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை

''மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை பத்தொன்பதாம் நூற்றாண்டில் பெருமளவில் பாக்களியற்றிப் பெருமை பெற்றவர்... இவர் நாளொன்றுக்கு முந்நூறு பாட்டுப்பாடும் பாவன்மை பெற்றிருந்தார் ... கவிமழை பொழிந்து, புவிபுகழ வாழ்ந்த தோடன்றித் தமிழ்ப் பேரறிஞர்களை உருவாக்கித் தமிழை உய்யச் செய்த பெருமை இவருக்குண்டு.''[4] சமய மாறுபாடு உரைநடைக்கு உயிரூட்டிய இக்காலத்தில் மீனாட்சிசுந்தரனாரின் படைப்புக்களை நோக்க, இவரை உரைநடை ஈர்க்கவில்லை எனத் தெரிகிறது.

### 2. 2. 2. 1. 2 இராமலிங்க அடிகள்

இராமலிங்க அடிகள் சுத்த சமரச சன்மார்க்க நெறியில் தன் சமயக் கருத்துக்களைப் பரப்பினார். இறைமை உணர்வு நிறைந்த பாடல்களைப் பாடினார். இவரது திருவருட்பாப் பெருந் திரட்டு சைவத்திருமுறைகளுக்கு ஒப்பாக விளங்குகிறது. எளிமை நிறைந்த சமயப் பாடல்களே இராமலிங்கரின் படைப்புக்களாக விளங்கின.

### 2. 2. 2. 1. 3 ஆறுமுக நாவலர்

அதே காலத்தவரான ஆறுமுக நாவலர் உரைநடை வழிச் சமயம் வளர்த்தவர். சைவ சமயச் சொற்பொழிவுகள் பல ஆற்றியவர். பொருளாதாரச் சீர்கேட்டை வாய்ப்பாகப்பயன் படுத்திக் கொண்டு கிறித்தவ சமயம் இவர் காலத்தில் வளரத் தொடங்கியது. ஆறுமுக நாவலர் கிறித்துவ மத ஆதிக்கத்தைக் களையப் பல முயற்சிகள் மேற்கொண்டார். ''ஆறுமுக நாவலருக்குக் கிறித்தவர்களோடு இருந்த தொடர்பு ஓரளவுக்குத் திருநாவுக்கரசருக்குச் சமணர்களோடு இருந்த தொடர்பை ஒத்துள்ளது,''[5] என்பர்.

சமயப் பணி தவிர, ஆங்கில உரைநடை அமைப்பைக் கையாண்டார்; மணிப்பிரவாளத்தை விடுத்துத் தமிழிலேயே முழுதும் எழுதினார். 'பழங்கால உரைநடையை மாற்றியமைத்துப் புதிய உரைநடைக்குக் கால்கோள் செய்தவர்,''[6] எனப் பாராட்டப்படுபவர்.

இவர் நன்னூலுக்குச் செய்த காண்டிகை உரை பேரறிஞர் போற்றும் சிறப்புப் பெற்றது.

திருவாவடுதுறை ஆதீனகர்த்தராக விளங்கிய ஸ்ரீ—ல—ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக மூர்த்திகளால் '' நாவலர்'' என்ற சிறப்புப் பட்டம் பெற்றார்.

மிகச் சிறந்த பதிப்பாசிரியராக விளங்கியவர். திருக்குறள், பரிமேலழகர் உரை இவரால் தவறின்றிப் பதிப்பிக்கப்பட்டது.

இலக்கண, வினாவிடை, வசன கண்டன நூல்களை இயற்றினார்.

இம்முப்பெரும் புலவர்களையும் ஒருங்கிணைத்துப் பார்க்கும் பொழுது மூவரின் தனித்தன்மைகளும் புலனாகின்றன. '' நாவலர் பெருங் கல்வியாளராக விளங்கியவர். இராமலிங்க சுவாமிகள் பெருங் கவிஞராக விளங்கியவர். பிள்ளையவர்கள் கல்வியிலும் கவித்வத் திலும் சிறந்து விளங்கியவர்கள்''[7] எனப் பாராட்டப்படுகின்றனர்.

## 2.3 மீனாட்சிசுந்தரனாரின் வரலாறு

### 2. 3.1 பிறப்பு

மதுரையில் சைவ வேளாளரும் நெய்தல் வாயுடையான் கோத்திரத்தினருமாகிய குடும்பத்தில், பவ வருஷம் பங்குனி மாதம் 26–ஆம் தேதி (6. 4. 1815) அன்று மீனாட்சிசுந்தரனார் பிறந்தார். இவரது தந்தையார் பெயர் சிதம்பரம் பிள்ளை; தாயார் பெயர்

அன்னத்தாச்சி. இவரது தந்தையார் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் பணிபுரிந்து வந்தார். அத்தெய்வத்தின் பெயரையே தன் மைந்தருக்கு இட்டார்.

## 2.3.2 இளமை

2. 3. 2. 1 மீனாட்சிசுந்தரனார் தம் பரம்பரைச் சிறப்பாலும், தந்தையின் வளர்ப்பாலும் மிகச் சிறந்த கல்வியறிவும் நினைவாற்றலும் படைப்பாற்றலும் கொண்டு விளங்கினார். மிகச்சிறு வயதிலேயே பாப்புனையும் ஆற்றல் பெற்றார். இவர் சோமரசம் பேட்டையில் வாழ்ந்து வரும்போது இவரது பதினைந்தாம் வயதில் இவர் தந்தையார் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

2.3.2.2 தம் புலமைத்திறனால் மீனாட்சிசுந்தரனார் பல செல்வந்தர்களின் ஆதரவைப் பெற்றார். காவேரி ஆச்சி என்னும் பெண்மணியை மணந்து கொண்டார். கல்வியறிவைப் பெருக்கிக் கொள்வதற்காகத் திரிசிரபுரத்தை அடைந்து வாழ்ந்து வந்தார்.

2. 3. 2. 3 திரிசிரபுரத்தில் இவரை ஆதரித்தோர் பழனியாண்டியா பிள்ளை, லட்சுமண பிள்ளை, ஆண்டார் தெரு சிதம்பரம் பிள்ளை, சிரஸ்தேதார் செல்லப்ப முதலியார், உறையூர் அருணாசல முதலியார், உறையூர்த் தியாகராச முதலியார், உறையூர் சம்புலிங்க முதலியார் ஆகியோராவர். [8]

## 2.3.3. கல்வி

2.3,3.1 திருவாவடுதுறை ஆதீன மடத்தைச் சார்ந்த வேலாயுத முனிவரிடம் கல்வி கற்றார். திரிசிரபுரத்துத் தெருவில் பிச்சை எடுத்துத் திரிந்த பரதேசி ஒருவரிடம் தண்டியலங்காரம் பாடங் கேட்டார். கச்சியப்ப முனிவரின் பாடல்களில் தமக்கிருந்த ஐயப் பாட்டினைத் திருவாவடுதுறை சென்று, அப்பொழுது ஆதீன கர்த்தராக விளங்கிய வேளூர் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரிடம் பாடங் கேட்டு நீக்கிக் கொண்டார்.

2. 3. 3. 2. இவரை ஆதரித்த லட்சுமணப் பிள்ளையின் வழக்கொன்றை நடத்துவதற்காகச் சென்னை சென்றார். அங்குக் காஞ்சீபுரம் சபாபதி முதலியார், திருவம்பலத்தின்னமுதம் பிள்ளை, எழும்பூர்த் திருவேங்கடாசல முதலியார் போன்றோரிடம் பாடங் கேட்டார். அப்பொழுது இவருடன் பயின்றவர்கள் தாண்டவராயத் தம்பிரான், அஷ்டாவதானம் சபாபதி முதலியார் ஆகியோராவர்

2. 3. 3, 3 மழலை மகாலிங்கையரின் அன்பினைப் பெற்று அவரிடமும் பாடங் கேட்டார். திருவாவடுதுறை சென்று அம்பலவாண

தேசிகரிடம் பல இடர்ப்பாடுகளுக்கிடையே கம்பரந்தாதியைப் பாடங் கேட்டார்.

2. 3, 3. 4 கீழ்வேளூர்ச் சுப்பிரமணிய தேசிகர் என்பவரிடம் இலக்கண விளக்கத்தைப் பாடங் கேட்டார். அவ்வாறு கேட்பதற்காக, தேசிகருக்கு மாதம் ஒன்றுக்கு இருபது ரூபாயும் கொடுத்து, அவரது குடும்பத்தை ஆறு மாதத்திற்குக் காக்கும் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார். இதற்காகத் தம்மிடம் பொருளில்லாமையால் தாம் காந்திமதியம்மை பிள்ளைத் தமிழை அரங்கேற்றியமைக்காகப் பெற்ற பரிசாகிய கடுக்கனை விற்றுப் பயன்படுத்தினார் என்ற செய்தி, கல்விமீது இவர் கொண்ட காதலைக் காட்டுகிறது.

## 2. 3. 4 படைப்புக்கள்

பெரும் பேரறிஞராய் விளங்கிய மீனாட்சிசுந்தரனாரின் படைப்புக்கள் காலவரிசைப்படி கீழே தரப்படுகின்றன.

1. இளமைப் பருவத்தில் முதன்முதலாகத் திட்டைக்குடிப் பதிகம் பாடினார்.

2. ஊற்றத்தூருக்குச் சென்ற பொழுது திருவூறைப் பதிற்றுப் பத்தந்தாதி பாடினார்.

3. பூவாளூரில் சேஷையர், சாமிநாதையர் ஆகியோர் வேண்டுகோளுக்கிணங்கி மயில் ராவணன் சரித்திரம் பாடினார். இது 100 பாடல்கள் கொண்டது.

4. தமது 21-வது வயதில், பட்டீச்சுரத்தில் தங்கிய பொழுது, பழசைப் பதிற்றுப் பத்தந்தாதி பாடினார்.

5. வேளூர் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரிடம் தன் ஐயப்பாடுகளைத் தீர்த்துக் கொண்டபின். திரிபு, யமகம், அந்தாதி ஆகியவற்றின் போக்கை அறிந்து கொண்டார். பின்னரே திருப்பைஞ்ஞீலித் திரிபந்தாதி, திருவானைக்காத் திரிபந்தாதி, திருச்சிராமலை யமக அந்தாதி ஆகியவற்றைப் பாடினார்.

6. அகிலாண்ட நாயகி மாலை இயற்றினார்.

7. லட்சுமணப் பிள்ளையின் வேண்டுகோளின்படி அகிலாண்ட நாயகி பிள்ளைத்தமிழ் பாடினார். இதுவே இவர் இயற்றிய முதல் பிள்ளைத் தமிழாகும்.

8. சைவ சாத்திரங்கள் நன்கறிந்தபின், வித்துவான் தியாகராச செட்டியார் போன்றோரின் வேண்டுதலினால் பூவாளூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி எழுதினார்.

9. திருத்தவத்துறை (லால்குடி) சென்றபொழுது அன்பர்கள் வேண்டுகோளுக்காகப் பெருத்திருப் பிராட்டியார் பிள்ளைத்தமிழ் பாடினார்.

10. திருவாரூர்த் தியாகராசப் பெருமான் மீது, தன் 30வது வயதில் தியாகராச லீலை எழுதினார்.. இந்நூல் முழுமை பெற வில்லை.

11. பங்களூர் தேவராசப் பிள்ளை என்பவர் பால் கொண்ட அன்பின் காரணமாகக் குசேலோபாக்யானம், சூதசங்கிதை என்னும் இரு நூல்களை இயற்றித் தேவராசப் பிள்ளையின் பெயரால் பதிப் பித்துக் கொள்ளுமாறு கொடுத்துவிட்டார்.

12, உறையூர்ப்புராணத்தை இயற்றி அரங்கேற்றிய பொழுது, பல வித்துவான்களும், பிரபுக்களும், இணைந்து இவருக்கு 'வித்துவான்' என்னும் பட்டத்தை வழங்கிச் சிறப்புச் செய்தனர்,

13. உறையூர் ஸ்ரீ காந்திமதியம்மை மீது ஒரு பிள்ளைத் தமிழ் இயற்றினார்.

14. எறும்பீச்சரம் வெண்பா அந்தாதி, தண்டபாணி பதிற்றுப் பத்தந்தாதி, திருக்கற்குடிமாலை முதலியன வரிசையாகப் பாடப்பட்டன.

15. இரத்தினகிரி எனப்படும் வாட்போக்கி எனும் தலத்தைக் கொண்டு, வாட்போக்கிக் கலம்பகம் எனும் நூல் பாடினார். இதுவே இவரது முதல் கலம்பகம் ஆகும்.

16. மாயூரம் முன்சீப் வேதநாயகம் பிள்ளைமீது குளத்தூர்க் கோவை என்னும் ஐந்திணைக்கோவை இலக்கியம் ஒன்றை 1853ல் இயற்றினார்.

17. சென்னையில், திருமயிலையில் வியாசர்பாடி விநாயக முதலியாரால் சித்திரச் சத்திரம் என்னும் சத்திரம் ஒன்று கட்டப் பட்டிருந்தது. அதனைப் புகழ்ந்து சித்திரச் சத்திரப் புகழ்ச்சி மாலை இயற்றினார். அவ்விநாயக முதலியாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு ஐந்திணைக் கோவை ஒன்றை வியாசக்கோவை எனும் பெயரில் பாடினார். இந்நூலில் முதல் நூறு பாடல்கள் மட்டும் இவரால் பாடப்பட்டன. 'இவருடைய கட்டளைப்படி அக்கோவையின் எஞ்சிய பகுதி சி. தியாகராச செட்டியாரால் இயற்றப்பட்டது.'[9] பின்னர் விநாயக முதலியார் வேண்டுகோட்படி திருமயிலைப் புராணம் பாடினார். இந்நூல் முற்றுப் பெறவில்லை.

18. தொட்டிக்கலை கேசவ முதலியார் பரம்பரையினராகிய கிருஷ்ணசாமி முதலியாரின் வேண்டுகோட்படி சிதம்பரேசர் மாலை இயற்றினார்.

19. சீகாழிக் கனவான்களின் ஆதரவினால் சீகாழிக் கோவை இயற்றினார்.

20. தில்லை நடராசர்மீது திருத்தில்லை யமக அந்தாதி பாடினார்.

21. ஆச்சாபுரம் என்ற பெருமண நல்லூரிலிருந்த சிவலோகத் தியாக முதலியாரின் வேண்டுகோட்படி, திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ் பாடினார். இது மணவைப் பிள்ளைத்தமிழ் எனப்படும்.

22. திருஞான சம்பந்த தேசிகரது குரு பூஜையில் ஆதீனத் தலைவரின் பெயரில் சச்சிதானந்த தேசிகர் மாலை இயற்றினார்.

23. ஆதீன வித்துவானாக ஆனபின்னர், அம்பலவாண தேசிகர் மீது கலம்பகம் ஒன்றியற்றினார். இந்நூலின் சிறப்புணர்ந்த தேசிகர் 'மகாவித்துவான்' என்ற பட்டத்தை இவருக்களித்துச் சிறப்புச் செய்தார்.

24, ரௌத்திரி வருடம் திருவிடைக்கழி முருகர் பிள்ளைத் தமிழ் பாடினார். இதனை ஆக்குவித்தோர் கார்காத்த வேளாளப் பிரபுவாகிய சுப்பராய பிள்ளையாவார். அவரது தூண்டுதலால் திருவிடைக்கழிக் குறவஞ்சி ஒன்றும் பாடினார். அந்நூல் இப்பொழுது கிடைக்கவில்லை.

25. பின்னர் ஆற்றூர்ப் புராணம், விளத்தொட்டிப் புராணம், திருவாவொளிபுற்றூர் புராணம் பாடினார்.

26. அம்பலவாண தேசிகர் மீது பிள்ளைத்தமிழ் இயற்றினார்.

27. துன்மதி வருடம் தருமபுர ஆதீனத் தலைவர் ஸ்ரீ சச்சிதானந்த தேசிகர் விருப்பப்படி திருக்குறுக்கைப் புராணம் இயற்றினார்.

28. துந்துபி ஆண்டு (1862) மதுரைக்கு இவர் சென்றிருந்த போது திருஞானசம்பந்த மூர்த்தி பதிற்றுப் பத்தந்தாதியும், திருஞான சம்பந்தர் ஆனந்தக் களிப்பும் பாடினார்.

29. திருவாவடுதுறை ஆதீன ஞானாசிரியர்களின் வரலாற்றைத் திருவளர்கைலைச் சிலம்பு என்னும் தலைப்பில் அகவல் இலக்கியமாகப் படைத்தார். அது குருபரம்பரை அகவல் எனப்படும்.

30. திருவாவடுதுறை ஆதீனத்துக் காறுபாறும் வித்துவானு மாகிய கனகசபைத் தம்பிரான் விருப்பத்தின்படி மண்ணிப் படிக்கரைப் புராணம் பாடினார். இந்நூல் 1864–ல் அரங்கேற்றப்பட்டது.

31. கோயிலூர் வேதாந்த மடத்துத் தலைவராக இருந்த ஸ்ரீ சிதம்பர ஐயாவின் விருப்பப்படி கோயிலூர்ப் புராணம் பாடினார்.

32. வழுவூருக்கு அருகேயுள்ள பாலையூர் இறைவன் மீது பாலைவனப் பதிற்றுப் பத்தந்தாதி பாடினார்.

33. கும்பகோணம் தாசில்தாராக இருந்த சிவகுருநாத பிள்ளையின் விருப்பப்படி கும்பகோணப் புராணம் பாடினார்.

34. கனகசபைப் பிள்ளை என்பவரின் வேண்டுகோளுக்காக ஸ்ரீ மங்களாம்பிகை பிள்ளைத் தமிழும், அம்பலவாண செட்டியாரின் விருப்பத்திற்காகத் திருக்குடந்தைத் திரிபந்தாதியும் பாடினார்.

35. சூரை மாநகர்ப் புராணம், கண்டதேவிப் புராணம், திருத்துருத்திப் புராணம் ஆகிய தல புராணங்களை இயற்றினார்.

36. சில தம்பிரான்களின் வேண்டுதல்படி திருவாவடுதுறை யமக அந்தாதி பாடினார்.

37. புதுச்சேரியில் தம்மை ஆதரித்த தானப்பாசாரி மீது தசவிடுதூது பாடினார்.

38. புழுகுப் பூனை இறைவனை வழிபட்டுப் பேறுபெற்ற தனியூர் என்னும் தலத்தின் புராணத்தைப் பாடினார். மாயூரப் புராணம் இயற்றினார். ஸ்ரீ காசி ரகசியம், வீரவனப் புராணம் போன்றவை பாடினரர்.

39. நாட்டுக்கோட்டை நகரத்தார் விருப்பத்தின்படி கண்ணபுரம் பாகம்பிரியாள் பிள்ளைத் தமிழ் பாடினார். இந்நூல் இப்பொழுது கிடைக்கவில்லை.

40. திருவெண்காட்டுப் பிரபுவாகிய நடராசப் பிள்ளை என்பவருடைய வேண்டுகோளின்படி இவர் ஸ்ரீ பிரம்ம வித்தியா நாயகி பிள்ளைத் தமிழ் பாடினார். இந்நூல் கிடைக்கவில்லை.

41. வன்தொண்டச் செட்டியாரின் வேண்டுகோட்படி சேக்கிழார் பிள்ளைத்தமிழ் இயற்றினார்.

42. மேற்கூறிய இலக்கியப் படைப்புக்கள் தவிர எண்ணற்ற தனிப் பாடல்கள் வெவ்வேறு சூழ்நிலையில் எழுதியுள்ளார். வேதநாயகம் பிள்ளையின் நீதி நூலுக்கும், கோபால கிருஷ்ண பாரதியாரின் நந்தனார் சரித்திரக் கீர்த்தனைக்கும், ஆறுமுக நாவலரின் நூற் பதிப்புக்களுக்கும் சிறப்புப் பாயிரம் எழுதிக் கொடுத்தார்.

43. எல்லப்ப நாவலர் என்பவரால் எழுதப்பட்ட செவ்வந்திப் புராணத்தை 1851-ஆம் ஆண்டில் பதிப்பித்தார்.

### 2.3.5. ஆசிரியப் பணி

2.3.5.1 ''பிள்ளையவர்கள் தாம் இருந்த விடங்களையே கலா சாலைகளாக்கித், தம் கல்வி நிரம்பிய கவிகளால் தமிழ்நாட்டுப் பிரதேசங்களை நிரப்பி, பிரபுக்களாலும் ஆதீனங்களாலும் ஆதரிக்கப் பெற்று, இல்லறத்தே கடைபோக நின்றவர், ஒரு வித்வத் பரம் பரைக்குத் தலைவராய் விளங்கியவர் ...... சாந்துணையும் கற்று, சாந்துணையும் பாடி, சாந்துணையும் தாம் கற்ற கல்வியைத் தக்கார்க்குப் போதித்தருளியவர் இக்கலாவிற்பன்னர்.''[10]

2.3.5.2 மிகச் சிறந்த ஆசிரியர்களிடம் கல்விகற்ற இவர், பல பேரறிஞர்கள் உருவாவதற்குக் காரணமாக விளங்கினார். ஆசிரியர்-மாணவர் என்ற உறவின் தூய்மைக்கும், பக்தி உணர்விற்கும் காரணமாக விளங்கியவர். கற்பித்தலைத் தம் தொழிலாகக் கொள்ளாமல் பொழுது போக்காகக் கொண்டவர். சாப்பிடும் பொழுதும், எண்ணெய் தேய்த்துக் கொள்ளும் பொழுதும்கூடப் பாடஞ் சொல்லும் ஆற்றலும் ஆர்வமும் உடையவர் என்று உ. வே. சாமிநாதையர் குறிப்பிடுகின்றார்.

2.3.5.2,1 இவர் திரிசிர புரத்தில் இருந்த பொழுது இவரிடம் பாடங் கேட்டவர்களில் முக்கியமானவர் தி. சுப்புராயசெட்டியார், இவரை, சிரஸ்தெதார் செல்லப்பா முதலியாரிடம் ஏற்றுக் கொண்ட சவாலின்படி பதினாறு அவதானம் செய்யும் வண்ணம் பயிற்றுவித்து, சோடசாவதானி என்ற சிறப்புப் பெயர் பெறச் செய்தார். வரகனேரி நாராயண சாமிப் பிள்ளை, உறையூர் அருணாசல முதலியார் போன்றோரும் இவரிடம் பாடங் கேட்டனர்.

2.3.5.2.2 இவர் மாணவர்களில் தலைமைச் சிறப்புப் பெற்றவ ராகக் கருதப்படுபவர் வித்துவான் தியாகராச செட்டியார். இவரை ''திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்துவானும், என் ஆசிரியரு மாக விளங்கிய திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர் களுடைய கண்மணி போன்ற முதல் மாணாக்கரும், நூலா ராய்தல் முதலியவற்றில் அவர்களைப் போன்றவரும்... வித்துவான் ஸ்ரீ தியாகராச செட்டியாரவர்கள்,''11 என உ. வே சாமிநாதையர் குறிப்பிட்டுப் பாராட்டுவது போற்றுதற்குரியது.

2. 3. 5. 2. 3 தன்னையொத்த தகுதிவாய்ந்த மாணவர்களை உருவாக்கிய பெருமை மீனாட்சிசுந்தரனாருக்கே உரியது.

வித்துவான் திருவீழி மிழலைச் சாமிநாத கவிராயர் என்போரும் இவர்தம் மாணவர்களே.

2. 3. 5. 2, 4 இவரிடம் கற்றவர்களில் அடுத்துக் குறிப்பிடத் தக்கவர் சுந்தரம்பிள்ளை என்பார். பிள்ளையவர்கள் திருத்தணிகைப் புராணத்தைப் படிக்கும் பொழுது சிவதருமோத்திரம் என்னும் நூல் தேவைப்பட்டது. அரிதாகக் கிடைத்த அந்நூலைத் தன் ஆசிரியருக்காகச் சுந்தரம்பிள்ளை பெற்றுவந்த நிகழ்ச்சி இவரது குருபக்தி மிகுதியைக் காட்டுகிறது.

2. 3. 5. 2. 5 தேவராசப் பிள்ளைக்காகப் பெங்களூர் சென்று, அங்கு அவருக்குப் பாடங் கற்பித்தார்.

2. 3. 5. 2. 6 எல்லா மதத்தினரையும் பாகுபாடின்றித் தம் மாணவர்களாக ஏற்றுக் கொண்டார். சவராயலு நாயகர் என்பவர் இவரிடம் தேம்பாவணி, திருக்காவலூர்க் கலம்பகம் ஆகியவற்றைப் பாடங் கேட்டார். வேதநாயகம் பிள்ளை, தெய்வநாயகம் பிள்ளை, நெல்லையில் இருந்து வந்த ஆரியங்காவற் பிள்ளை, அழகிரிராஜு போன்றோரும் இவர்தம் மாணவர்களே. 1860ல் மாயூரத்தைத் தம் இருப்பிடமாகக் கொண்டபொழுது பல மாணவர்கள் இவரிடம் கல்வி பயின்றனர்.

2. 3. 5. 2. 7 பட்டீச்சுரம் ஆறுமுகத்தா பிள்ளை இவரைத் தந்தையாகவும், குருவாகவும் பாவித்தவர்.

2.3.5.3 தம் மாணவர்களை நன்கு சோதித்துப் பார்த்தே இவர் ஏற்றுக் கொண்டார் என்பதை உ. வே. சாமிநாதையர் கூற்றின் மூலம் அறிகிறோம். இவர்தம் அழியாப் புகழுக்குக் காரணமாக விளங்கியவர் இவரது மாணவர் உ. வே. சாமிநாதையராவார். இவர் பிரஜோற்பத்தி வருடம் சித்திரை மாதம் (1871) மீனாட்சி சுந்தரனாரிடம் மாணவராகச் சேர்ந்தார். இவ்விருவர்தம் ஆசிரிய மாணவ உறவின் நெருக்கமும், அன்புப்பிணைப்பும் 'ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம்' I, II–லும், 'என் சரித்திர'த்திலும் உ. வே. சாமிநாதையரால் தெளிவுபடுத்தப்படுகின்றது.

2. 3. 5. 3. 1 தம் ஆசிரியரின் சிறப்பினைக்கூற வந்த உ. வே. சாமிநாதையர், ''ஒரு மகாகவியின் வாக்கிலிருந்து ஆற்றொழுக்கைப் போலக் கவிதாப் பிரவாகம் பெருகிக் கொண்டிருப்ப அதனைக் காதினாற்கேட்டும், கையினாலெழுதியும், மனத்தினாலறிந்தும் இன்புற்ற எனது நிலை இங்கே எழுதற்கரியது,''[12] என்று கூறி மெய்சிலிர்க்கின்றார்.

2. 3. 5. 3. 2 எங்குச் சென்றாலும் தம் அருமை மாணவர் உ. வே. சாமிநாதையரை உடன் அழைத்துச் செல்வார். மடைதிறந் தாற்போல இவர் சொல்லிக் கொண்டேவரும் கவிதைகளை அருகிருந்து எழுதும் பேற்றினை உ. வே. சாமிநாதையர் பெற்றார். தாம் விரும்பிய நூல்கள் அனைத்தையும் பிள்ளையவர்களிடம் பாடங் கேட்டார்.

2. 3. 5. 3. 3 மீனாட்சிசுந்தரனார், பாடஞ் சொல்லும் திறன் உ. வே. சாமிநாதையரால் நன்குணர்த்தப்படுகிறது. ''என் ஆசிரியர் பாடஞ் சொல்லும்போது கையிலே புஸ்தகம் வைத்துக் கொள்ளும் வழக்கமில்லை. அப்பெரியாருக்கு அவ்வளவு செய்யுட் களும் மனப்பாடமாகவே இருந்தன... 'இவர்கள் இதற்காகவே உதித்தவர்கள்' என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று. பாடம் சொல்வதில் அவருக்குச் சலிப்பே ஏற்படாது,''[13] என்கிறார்.

2. 3. 5. 3. 4 இறுதிக்காலத்திலும் இப்பெரியாரின் உயிர் தம் அருமை மாணவர் உ. வே. சாமிநாதையரின் மடியில்தான் சென்றது எனில் இவ்விருவர் தம் உறவுப்பிணைப்புக்கு வேறுசான்று தேவை இல்லை.

## 2. 3. 6 ஆதீன வித்துவான்

2. 3. 6. 1 கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரியாக விளங்கிய திரு வாவடுதுறை ஆதீனம் கற்றல், கற்பித்தல் என்ற இருநிலையிலும் தலைசிறந்து விளங்கியது, இவ்வாதீனத்தின் தலைமை வித்து வானாகத் திகழ்தல் என்பது கிடைத்தற்கரிய பெரும்பேறாகும்.

2. 3. 6, 2 மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் முயற்சியாலும், தாண்டவராயத் தம்பிரான் இவர்மீது கொண்டிருந்த நல்லெண்ணத் தாலும், மீனாட்சிசுந்தரனார் திருவாவடுதுறை ஆதீன கர்த்தராகிய அம்பலவாண தேசிகரால் அவ்வாதீனத் தலைமை வித்துவானாக நியமிக்கப்பட்டார். இவருக்கெனத் தனிவிடுதியொன்று தரப்பட்டது. அதில் தங்கிப்பலருக்கும் பாடஞ்சொல்லலானார்.

2. 3. 6. 3 கவிராயர் மலிந்த 19-ஆம் நூற்றாண்டில் தமிழ்ப்புலமை மட்டுமே இவரைத்தலைமை வித்துவானாக்கிவிடவில்லை. சம்பிரதாய முறை வழுவாமல் கல்வி கற்று, தீட்சை சிவபூஜை முதலியன உடையராய் நிர்வாண தீட்சையும் பெற்ற வித்துவான்களையே இவ் வாதீனத்திலே ஆதீன வித்துவான்களாக நியமித்தல் இவ்வாதீன சம்பிரதாயம்.''[14] என்று த.ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளைகுறிப்பிடுகிறார் இதனை நோக்க, மீனாட்சிசுந்தரனாரின் தகுதிப்பாடு வெளிப் படுகின்றது,

## 2. 3. 7 வறுமையிற் செம்மை

2. 3. 7. 1 இப்புலவரின் வாழ்க்கை வறுமையில் தான் கழிந்தது. தனக்கெனப் பொருள் ஈட்டும் பணியில் ஈடுபடாது, கற்றலும் கற்பித்தலுமே தம் பணியாகக் கொண்டமையே இவ்வறுமைக்குக் காரணம். எந்த மாணவரிடமும் இவர் பொருள் பெற்றுக் கொண்டதாகத் தெரியவில்லை. இவர்தம் அன்பு மாணவர் உ. வே. சாமிநாதையர், இவரது வாழ்வியல் கூறுமிடத்து ''அவருடைய வாழ்க்கையே நிலையற்றதாகத்தானிருந்தது. 'இருந்தால் விருந்துணவு; இல்லாவிட்டால் பட்டினி' என்பதே அக்கவிஞர் பிரானுக்கு உலகம் அளித்திருந்த வாழ்க்கை நிலை. எனக்கு அதனை உணர உணர ஆச்சரியமும், வருத்தமும் உண்டாயின,''[15] என எழுதிச் செல்கிறார்.

2. 3. 7. 2 இப்படிப்பட்ட வறுமையில் இருந்தாலும், தம் கவிப் பெருக்கால் தன்னைப் புரப்பவர்தம் ஆதரவில் வாழ்ந்தாரே ஒழிய, பொருளுக்காக எப்பாடலும் பாடவில்லை. விஷ்ணுபுராணம் செய்தால் ரூ. 5000 தருவதாக ரங்கசாமி ஐயங்கார் என்பவர் வேண்ட, இவர் தான் சைவனாதலின் உடன்படேன் என மறுத்துவிட்ட செய்தி உ. வே. சாமிநாதையரால் குறிப்பிடப்படுகிறது. ரூ. 5000 என்பது அவர்காலத்தில் மிகப் பெருந்தொகை. அவர் வறுமை வாழ்விற்கும் மிக இன்றியமையாதது. எனினும் தன்னுடைய கொள்கைப் பிடிப்பைப் பணத்திற்காகத் தளர்த்திக் கொள்ளாத வறுமையிற் செம்மையை இவரிடம் காண்கிறோம்.

## 2. 3. 8 அருள் உள்ளம்

இறைவன் தருமிக்குப் பாடல் எழுதிக் கொடுத்தமை போல, திருவாவடுதுறைக் குருபூசையின்போது இவர் பாடிக் கொடுத்த பாடல்களால் பலர் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரிடம் பரிசு பெற்றுச் சென்றனர். பிறர்மீது கொண்ட கருணை உள்ளமே இத்தகு செயல்களுக்குக் காரணம்.

## 2.3.9. கடல் கடந்த புலமை

2.3.9.1 வேறு நாடுகளிலிருந்து தமிழ்ப் பற்றுடையோரும் இவரிடம் தொடர்புகொண்டு கடிதம் மூலம் ஐயப்பாடுகளைநீக்கிக்கொண்டனர். அவ்வாறு தொடர்பு கொண்டவர்களில் சிங்கப்பூர் நாராயணசாமி என்பாரும் ஒருவர்.

2.3.9.2 ஒருமுறை இவருக்கு இலண்டனிலிருந்து ஒரு கடிதம் வந்ததாம். உள்ளூர்த் தபாலே ஒழுங்காகக் கிடைக்காத இக்காலத்தில்

இவருக்கு வந்தகடிதமோ, மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை இந்தியா' என்று மட்டுமே முகவரி எழுதப்பட்டிருந்ததாம். அக் கடிதம் எத்தடையுமின்றி மீனாட்சிசுந்தரனாரைச் சென்றடைந்தது என்று உ. வே. சா. குறிப்பிடும் செய்தி எத்திக்கும் பரவியிருந்த இவர் புகழுக்குச் சான்றாக அமைகின்றது.

## 2.3.10 இறுதிக் காலம்

தம் வாழ்வின் இறுதிக் காலத்தை ஆதீனத்திலேயே தம் மாணவர்களுடன் கழித்தார். தைமாதம் 20ஆம் தேதி(1—2—1876), திருவாசகத்தின் அடைக்கலப் பத்தைக் கேட்டுக்கொண்டே. உ. வே. சாமிநாதையரின் மடியில் தலைவைத்தபடி இறைவனடி சேர்ந்தார்.

## 2. 3. 11 மங்காப் புகழ்

இவரது நன்றிமறவா மாணவராகிய உ. வே. சாமிநாதையரின் உயர்ந்த பணி காரணமாக, இக்கவிஞர் பெருமானின் சிறப்பு என்றும் நிலைக்கும் நிலையை அடைந்துள்ளது. இன்றும் இவருக்குரிய நினைவு நிகழ்ச்சிகள் நடத்தப்படுகின்றன.

2. 3. 11. 1 ஆறுமுகத்தா பிள்ளையின் ஆதரவில் மீனாட்சி சுந்தரனார் அடிக்கடி பட்டீச்சுரம் சென்று தங்குவது வழக்கம். அதனால் பட்டீச்சுரத்தில் இவரது சிறப்பை அறிந்தோர் இன்றும் உள்ளனர். சக்திமுற்றப் புலவரின் உறவினரான முத்துவேலனார் என்னும் தாராசுரம் தமிழாசிரியர் ஒருவரது முயற்சியால் 1970ஆம் ஆண்டு '' மீனாட்சிசுந்தரம் பிள்ளை நினைவு மன்றமும், இரவுப் பள்ளித் தொடக்க விழாவும்'' நடைபெற்றன.

2. 3. 11. 1. 1 இம்மன்றம் இன்றும் இவரது நினைவு நாளைக் கொண்டாடுகிறது. தைமாதம் சதய நட்சத்திரத்தன்று அதாவது ஆதீன குருபூசை ஐந்தாம் திருவிழா அன்று இந்நினைவு நாள் கொண்டாடப்படுகிறது, இதனை டி. எஸ், கோவிந்தசாமிசெட்டியார் என்னும் அன்பர் ஒருவர் நடத்தி வருகிறார்.[16]

2. 3.11. 1.2 இவ்விழாவில் பட்டீச்சுரம் தேனுபுரீஸ்வரர் ஆலயத்தில் பட்டி மன்றம், கவியரங்கம், கருத்தரங்கு போன்றவை நடத்தப்படு கின்றன. மீனாட்சிசுந்தரனாரின் உருவப் படமும் ஊர்வலமாகக் கொண்டு செல்லப்படுகின்றது.

2. 3. 11. 1.3 தமது வறுமையான வாழ்க்கையிலும், திரு. கோவிந்தசாமிசெட்டியார் இவ்விழாவினை ஆண்டு தோறும் நடத்தி

வருகிறார் என்பது, மீனாட்சிசுந்தரனாரின் மங்காப் புகழையும், அவர்மீது மதிப்பும் மரியாதையும்கொண்டோர் இன்றும் வாழ்கின் றனர் என்ற உண்மையையும் புலப்படுத்துகின்றது.

## 2. 4 முடிவு

இக்கவியரசின் பாடல்கள் தமிழிலக்கிய உலகில் அழியா இடம் பெற்றவை. எனினும் தமிழுள்ளங்களில் இவை நிலைத்த ஓரிடத்தைப் பெறாமைக்குக் காரணம் இவரது காலச் சூழலே. தமிழிலக்கியம் பல்வேறு புதிய துறைகளைக் காணத் தொடங்கிய ஒருகால கட்டத்தில், இவரது புலமை, இலக்கிய வரலாற்றில் இறுதிப் புள்ளியாக அமைந்துவிட்டது. இருபதாம் நூற்றாண்டின் புதிய இலக்கியப் போக்கோடு ஒட்டாது தனித்து நின்றுவிட்டது எனலாம்.

### குறிப்புகள்

1. ச. சிவகுமாரன், தருமை கனகாபிஷேக விழாமலர், மடால யங்களில்-சமுதாய நிலையங்களில் தமிழர் பண்பாடு, ப. 274.
2. து. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, திருவாவடுதுறை ஆதீன வரலாறு, ப. 10.
3. மது. ச. விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.341.
4. ச. சாமிமுத்து, இலக்கிய வரலாறு, ப, 172.
5. ஆ. வேலுப்பிள்ளை, தமிழிலக்கியத்தில் காலமும் கருத்தும், ப. 194.
6. மு. வை. அரவிந்தன், உரையாசிரியர்கள், ப. 79.
7. எஸ். வையாபுரிப்பிள்ளை, தமிழ்ச்சுடர் மணிகள் (முதல் கோவை), ப. 177.
8. உ. வே. சாமிநாதையர், ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள் சரித்திரம் முதல் பாகம், ப, 18.
9. மேலது, ப. 161.
10. எஸ். வையாபுரிப்பிள்ளை, மு. நூல், பக். 178—179.

11. உ. வே. சாமிநாதையர், வித்வான் தியாகராச செட்டியார், ப. 165

12. உ. வே. சாமிநாதையர், ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் இரண்டாம் பாகம், ப. 85.

13. உ. வே. சாமிநாதையர், என் சரித்திரம், பக். 58-59.

14. த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் நினைவு மலர், ப. 75.

15. உ. வே. சாமிநாதையர், என் சரித்திரம், ப. 290.

16. பேட்டி, திரு. டி. எஸ். கோவிந்தசாமி செட்டியார், பட்டீச்சுரம், நாள்: 10—1—1980.

# 3 பிள்ளைத்தமிழ் நூல்களின் அமைப்பு

## 3. 0. முன்னுரை

புலவர்கள் தாம் புகழ விரும்பும் பாட்டுடைத் தலைவர்களைக் குழந்தையாகப் பாவித்துப் பாடுகின்ற மரபு தமிழ் இலக்கியத்தில் காணப்படுகின்ற இயல்புகளுள் ஒன்றாகும். குழந்தைப் பருவம் எல்லோர் மனத்தையும் ஈர்க்கும் தன்மையது. எனவே, பாட்டுடைத் தலைவர்களைக் குழந்தையாகப் பாவித்துப்பாடும் பொழுது, அது எல்லோர் மனத்தையும் கவர்வதாக அமைகின்றது.

## 3. 1 தொல்காப்பியம்

தொல்காப்பியர் பாடாண் திணையில்,

''குழவி மருங்கினும் கிழவதாகும்''[1]

என்கிறார். இது, புதிய இலக்கிய வகையில், பிள்ளைமைத் தன்மையைப் பாடும் பாடலும் ஒன்றாகும் என்ற குறிப்பினைத் தருகிறது. இந்நூற்பாவிற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், ''தந்தையரிடத்தன்றி ஒரு திங்களிற் குழவியைப் பற்றிக் கடவுள் காக்க என்று கூறுதலானும், பாராட்டுமிடத்துச் செங்கீரையுந்தாலுஞ் சப்பாணியு முத்தமும் வரவுரைத்தலும், அம்புலியுஞ் சிற்றிலுஞ் சிறு தேருஞ் சிறுபறையு மெனப்பெயரிட்டு வழங்குதலானு மென்பது'' என்று பிற்காலப் பிள்ளைத்தமிழ் வளர்ச்சியை ஏற்றுச்சொல்கிறார். தொல்காப்பிய நூற்பா குழந்தைப் பருவம் பாடுபொருளானமை யினைக் குறிக்கிறதே ஒழிய, பாடப்பட்ட முறை இன்னதென்பதைக் குறிக்கவில்லை. ஏனெனில் தொல்காப்பியர் காலத்தில் பிள்ளைத்தமிழ் என்ற இலக்கிய வடிவம் கிடையாது. பாட்டுடைத் தலைவனைக் குழந்தையாக்கிப் பாடும் மரபு இருந்தமைக்குத் தொல்காப்பியர் காலச்சான்று கிடையாது. தம் கால வழக்கிலிருந்த இலக்கிய நெறியை நச்சினார்க்கினியர் தொல்காப்பிய நூற்பாவிற்கு ஏற்றிக் கூறியுள்ளார் என்றே கொள்ளல் வேண்டும்.

## 3.2 சங்கப் பாடல்கள்

பாட்டுடைத் தலைவனைக் குழந்தையாகப் பாவித்துப் பாடும் மரபு சங்க இலக்கியங்களில் கிடையாது. ஆனால், மக்கட்பேற்றின் சிறப்பு, குழந்தையால் தலைவி பெறும் இன்பம், குழந்தையால் தலைவன் தலைவியர் ஊடல் நீங்கல், குழந்தைப்பேற்றின் காரண மாகப் புத்தேள் உலகம் புகல் போன்ற செய்திகளைப் புறநானூறு, அகநானூறு, ஐங்குறுநூறு போன்ற சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே காணலாம்.

3.2.1 அகநானூற்றில், தலைவன் பிரிந்த காலத்துத் தலைவி தன் மகனுக்குத் திங்களைக் காட்டி விளையாட்டயர்ந்த காட்சியை மீண்டும் காணவிரும்பிய தலைவன், பாகனிடம் கூறுவதாக ஒருபாடல் அமைகிறது. அப்பாடலில்,

''முகிழ்நிலாத் திகழ்தரும் மூவாத் திங்கள்
பொன்னுடைத் தாலி என்மகன் ஒற்றி
வருகுவை யாயின் தருகுவன் பாலென
விலங்கமர்க் கண்ணள் விரல்விளி பயிற்றும்'' (அகம்.54)

எனத் தலைவி தன்மகனுக்காகத் தன்விரல் விளிபயிற்றித் திங்களை அழைக்கும் காட்சி காட்டப்படுகின்றது. இங்கு தன்மகனுக்குப் பாலமு தூட்டும் தாய் நிலவினைப் பார்த்து, 'என் மகனுடன் விளையாட வந்தால் உனக்குப் பாலமுது தருகுவன்' எனத் தன் விரலால் அழைக்கும் காட்சி காட்டப்படுகின்றது. இப்பாடல் பொருண்மையே பிற்காலப்பிள்ளைத்தமிழ் நூல்களில் அம்புலியைக் குழந்தையோடு விளையாட அழைக்கும் மரபைத் தோற்றுவித்த முன்னோடியாக அமைகிறது எனக் கருதவாய்ப்பு உள்ளது.

## 3. 3. பக்திப் பாடல்கள்

வைணவ இலக்கியங்களில், திருமாலின் கண்ணன், இராமன் எனும் இரண்டு அவதாரங்களையும் போற்றிப் பாராட்டும் பாடல் களைக் காணலாம்.

### 3. 3. 1. பெரியாழ்வாரும் பிள்ளைத்தமிழும்

பெரியாழ்வாரின் திருமொழியில், பெரியாழ்வார் தம்மைத் தாயாகவும் கண்ணனைக் குழந்தையாகவும் பாவித்துப் பாடும் பாடல்கள் குறிப்பிடத்தக்கவை.

கண்ணன் திருவவதாரச்சிறப்பு, திருப்பாதாதிகேச வண்மை, திருத் தாலாட்டு, அம்புலிப் பருவம், செங்கீரைப் பருவம், சப்பாணிப்

பருவம், தளர்நடைப் பருவம், அச்சோப் பருவம், புறம்புல்கல், பூச்சி காட்டுதல், முலையுண்ணல், காதுகுத்தல், நீராட்டம், குழல் வாரக் காக்கையை வாவெனல், கோல் கொடுவர விளம்பல், பூச் சூட்டல், காப்பிடல், பாலக்ரீடை, அயலகத்தார் முறைப்பாடு, அன்னை கண்ணைற்கின்னமுதன்றி அம்மந்தரேனெனல், கண்ணனை அன்னை கன்றின் பின்போக்கியதெண்ணி மனக்கணிரங்கி இசைத்தல், கண்ணன் வரவு கண்டு அன்னை மகிழ்தல் என இருபத்திரண்டு பதிகங்கள் பெரியாழ்வார் திருமொழியில் கண்ணனைக் குழந்தையாகக் கொண்டு பாடியவையாக அமை கின்றன.

3.3.1.1 பெரியாழ்வாரின் இப்பதிகங்களே, பிற்காலப் பிள்ளைத் தமிழ் இலக்கியத்தின் தோற்றுவாயாக விளங்குகின்றன.

3.3.1.2. பாட்டுடைத் தலைவனின் குழந்தைப் பருவத்தைப் பாடுதல், பதிகத்தைப் 'பருவம்' என்று குறிப்பிடல் ஆகியவற்றை இவர் பாடல்களில் காண்கிறோம்.

3.3.1.3 ஒவ்வொரு பருவத்திற்கும் வரையறுக்கப்பட்ட பாடல் எண்ணிக்கை இவர் பாடல்களில் காணப்படவில்லை. 10 முதல் 12 வரை ஒவ்வொரு பருவத்திலும் பாடல்கள் இடம்பெறுகின்றன.

3.3.1.4 பெரியாழ்வார் திருமொழியில் அமைந்தனவற்றுள் அம்புலிப் பருவம், செங்கீரைப் பருவம், சப்பாணிப் பருவம் என்பன அதே பெயரில் பிற்காலப் பிள்ளைத்தமிழ் நூல்களில் எடுத்தாளப்பட்டுள்ளன. திருத்தாலாட்டு என்பது தாலப்பருவம் எனவும், தளர்நடைப் பருவம் என்பது வருகை அல்லது வாரானைப் பருவம் எனவும், நீராட்டம் என்பது பெண்பாற் பிள்ளைத்தமிழில் நீராடல் பருவமாகவும் கையாளப்பட்டுள்ளன.

3.3.1.5 பெரியாழ்வாரின் அம்புலிப் பருவப் பாடல்களில் சாம, பேத, தான, தண்டம் என்ற உத்திகள் அமைந்துள்ளன. பாட்டியல் இலக்கணங்கள் இவ்வுத்திகளமைய அம்புலிப் பருவம் பாடுதல் வேண்டும் என்று கூறவில்லை. ஆனால் பிள்ளைத்தமிழ் பாடிய புலவர்கள் இந்நெறியினை மாறாமல் கையாண்டுள்ளமை, பெரியாழ்வாரை அடியொற்றியேயாகும்.

## 3.3.2. திருமங்கையாழ்வாரும் பிள்ளைத்தமிழும்

திருமங்கையாழ்வாரின் பெரியதிருமொழியிலும் 'கண்ணன் விஷயம்' என்ற பகுதியில் அம்முண்ணக் கண்ணனை அழைத்தல்,

சப்பாணி கொட்டல், மாயன் வெண்ணெயுண்ட, மாட்சிமை என்ற பதிகங்கள் குழந்தைக் கண்ணனைப் பாடுவனவாக அமைகின்றன.

இவ்வாறு, பக்தி இலக்கியங்கள் குழந்தையாகிய கண்ணனைப் பல்வேறு பருவங்களில் பாடி மகிழ்ந்தன. கண்ணனின் பிள்ளைப் பருவம் இப்பாடல்களில் சுவைபடப் பாடப்பட்டுள்ளன. இவற்றில மைந்த சுவையும் கவர்ச்சியுமே பிற்காலப் புலவர்கள் தாம் பாட விரும்பும் பாட்டுடைத் தலைவர்களைக் குழந்தையாக்கிப் பாடிய மைக்குத் தூண்டு கோலாய் அமைந்தன.

## 3.4 முதல் பிள்ளைத்தமிழ்

இவ்வாறு சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே மக்கட் பேற்றின் சிறப்பினைக் கூறுவதாக அமைந்து, பக்தி இலக்கியங்களில் பிள்ளைப் பருவப் பாடல்களாய் விளங்கிப், பிற்காலத்தில் பிள்ளைத்தமிழ் என்று தனி வகையான சிற்றிலக்கியம் மலர்ந்தது.

3.4 1 கி.பி. 12–ஆம் நூற்றாண்டில் சோழநாட்டில் வாழ்ந்துவந்த ஒட்டக்கூத்தர் குலோத்துங்கன் பிள்ளைத்தமிழை எழுதினார். இதுவே முதல் பிள்ளைத்தமிழ் இலக்கியமாகும்.[2] பிற்காலப் பிள்ளைத்தமிழ் நூல்களுக்கு வழிகாட்டியாய் அமைந்த இந்நூல் இரண்டாம் குலோத்துங்கனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது.

3.4.2 குலோத்துங்கன் பிள்ளைத்தமிழில், நூலின் காப்புப்பகுதி விநாயகர் வணக்கத்தில் தொடங்குகிறது.

காப்புப் பருவத்தில் இரண்டு பாடல்களில் சிவபெருமானும், பிரமன், சூரியன், விநாயகன், முருகன், காளி, சத்தமாதர், முப்பத்து முத்தேவர், ஐயனார், திரிபுர சுந்தரி என்போரும் காப்புத் தெய்வங் களாகப் பாடப்படுகின்றனர். காப்புப் பருவம் 11 பாடல்கள் கொண்டுள்ளது.

3.4.3 செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, சிற்றில் ஆகிய பருவங்களும் 11 பாடல்கள் கொண்டு விளங்குகின்றன.

3. 4. 4 அம்புலிப் பருவத்தில் 12 பாடல்களும், சிறுபறையில் 7 பாடல்களும், சிறுதேரில் 8 பாடல்களும் காணப்படுகின்றன.

3. 4. 5 மொத்தம் 103 பாடல்கள் பெற்ற இந்நூலில் 16 பாடல்கள் சிதைவுற்றவை.

3. 4. 6 இப்பிள்ளைத்தமிழில் திருமால் காப்பு அமையவில்லை. பாடல்களின் எண்ணிக்கை குறிப்பிட்ட வரன்முறையில் அமைய

வில்லை. அம்புலிப் பருவத்தில் சாம, பேத, தான, தண்டம் என்ற உத்தி அதிகமாகப் பேணப்படவில்லை.

3. 4. 7 ''பிள்ளைத்தமிழ் நூல்களில் காலத்தால் முற்பட்ட இந்நூல் பாட்டியல் நூல்கள் பிள்ளைத்தமிழ் இலக்கணத்தைத் தக்காங்கு வரையறுத்த காலத்துக்கு முற்பட்டது ஆதலின், இதன்கண் அவ்வரையறையை முழுதும் காண்டல் இயலாது.''[3] கிடைக்கின்ற பாடல்கள் பிற்காலப் பிள்ளைத்தமிழுக்கு வழிகாட்டியாய் உள்ளன.

## 3. 5 பிள்ளைத்தமிழ் இலக்கணம்

பிள்ளைத்தமிழ் என்பது ஆண்பால் பிள்ளைத்தமிழ், பெண்பால் பிள்ளைத்தமிழ் என இரு வகைப்படும். இவற்றுக்குரிய இலக்கணங் களைப் பாட்டியல் நூல்கள் வழிநின்று காணலாம்.

### 3. 5. 1 பிங்கலந்தை

பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு காலத்தால் முந்தியது. இதில் ஆண்பாற் பிள்ளைப்பாட்டு, பெண்பாற் பிள்ளைப்பாட்டு இரண்டும் பேசப்படுகின்றன.

3. 5. 1. 1 இரண்டாம் திங்கள் காப்பு, ஐந்தாம் திங்கள் செங்கீரை, ஆறாம் திங்கள் கூறுதல் கற்றல், ஏழாம் திங்கள் இன்னமுதூட்டல், எட்டாம் திங்கள் தாலாட்டு, ஒன்பதாம் திங்கள் சப்பாணி, பதினோ ராம் திங்கள் முத்தம், பன்னிரண்டாம் திங்கள் வருகை, பதினெட் டாம் திங்கள் அம்புலி, இரண்டாம் ஆண்டு சிறுபறை, மூன்றாம் ஆண்டு சிற்றில் சிதைத்தல், நான்காம் ஆண்டு சிறுதேர், பத்தாம் ஆண்டு பூணணிதல், பன்னிரண்டாம் ஆண்டு கச்சினோடு உடை வாளை விரும்பத் தரித்தல் என்பன ஆண்பாற் பிள்ளைப் பாட்டுக் குரியவை (பிங்கல. 1368).

3.5.1.2 மூன்றாம் ஆண்டு குழமணம் பேசல், ஐந்து முதல் ஒன்பது ஆண்டுகள் வரை மன்மதன் நோன்பு, பனிநீர் தோய்தல், பாவை யாடல், அம்மனை, கழங்கு, பந்தடித்தல், சிறுசோறடல், சிற்றி லிழைத்தல், ஊசலாடல் என்பன பெண்பாற் பிள்ளைப் பாட்டிற் குரியன (பிங்கல. 1369).

### 3. 2. 5 பன்னிரு பாட்டியல்

பிள்ளைப் பாட்டு என்பது குழந்தைக்கு மூன்று முதலாக இருபத்தியோரு மாதங்கள் வரையுள்ள ஒற்றித்த மாதங்களைப் பத்துப் பருவங்களாக்கிப் பாடுதலாகும் (பன். 17).

3.5.2.1 அவை காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்பனவாம். இவை சுற்றத்தளவாய் அமையும் (பன். 18). தந்தை, தாய், பாட்டன், பாட்டி ஆகியோரை முந்துற உரைத்தல் முறைமையாகும் (பன். 19)

3. 5. 2. 2 பெண் மகவைப் பாடும்பொழுது இறுதி மூன்றும் மாறும். அவை சிற்றில் இழைத்தல், சிறுசோறாக்கல், குழமகன், ஊசல், காமன் நோன்பு என்பனவாக அமையும். இவற்றுள் காமன் நோன்பு பன்னிரண்டாம் வயதிற்குரியது (பன். 20, 21).

3. 5. 2. 3 காப்பிற்குரிய கடவுளர் திருமால் முதல் சந்திரர் ஈறாகக் கூறப்படுவர். காத்தற் கடவுளாதலின் திருமாலை முதலில் பாடுதல் மரபு (பன். 22, 23).

3. 5. 2. 4 அகவல் விருத்தம், கட்டளை ஒலிபெற்ற கலி விருத்தம் என்பவை பிள்ளைப்பாட்டுக்குரிய பாக்களாகும். (பன். 26). நெடு வெண்பாட்டாகவும் அமையும் (பன். 27).

## 3. 5. 3. வெண்பாப் பாட்டியல்

3. 5. 3. 1 பிள்ளைக்கவி என்பது, குழந்தையைத் தெய்வம் காக்க எனத் தொடங்கி, வகுப்பு, விருத்தப் பாக்களால் சுற்றத் தளவாய்ப் பாடுவது (வெண். 6).

3. 5. 3. 2. மூன்று முதல் இருபத்தியோரு திங்கள் வரை ஒற்றித்த மாதங்களில் பத்துப் பருவமமைத்துப் பாடுதல் மரபு. பெண் குழந்தைக்கு இறுதி மூன்று பருவமும் ஒழித்து ஏனைய ஏழும் உரியன. ஐந்தாண்டு, ஏழாண்டு வரையிலும் பாடுதலும் உண்டு (வெண். 7).

3. 5. 3.3 காப்பு, தால், செங்கீரை, சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்பன பத்துப் பருவங்களாகும் (வெண். 8).

## 3. 5. 4. நவநீதப் பாட்டியல்

3. 5. 4.1 காவற் கடவுளாகிய திருமாலைக் காப்புக்கு முன்னாக மொழிதல் வேண்டும் (நவ. 26).

3. 5. 4. 2 சிவபெருமானைக் காப்புத் தெய்வமாகப் பாடுமிடத்துக் கொலையகற்றிக் கங்கை, உமை, மதி, கொன்றை என்பவற்றோடு இணைத்து மங்கலமாகப் பாடுதல் வேண்டும் (நவ. 27). முப்பத்து மூவர், பிரமன், பகவதி, குபேரன், கதிரவன், இந்திரன், முருகன், விநாயகர், பைரவர் ஆகியோர் காப்புத் தெய்வங்களாவர் (நவ.28).

3. 5. 4. 3 காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை அம்புலி, சிறுபறை, சிற்றில் சிதைத்தல், சிறுதேர் உருட்டல் என்பன பத்துப் பருவங்கள் (நவ. 29).

3. 5. 4. 4 மூன்று முதல் இருபத்தியோரு திங்கள் முடியப் பாடுவர். ஐந்து, ஏழாம் ஆண்டுகள் வரையிலும் பாடுதலும் உண்டு. பெண் மகவிற்கும் அவ்வண்ணமே பாடுவர் (நவ. 30).

3. 5. 4. 5 சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்பன மூன்றும் அளவில் சுருங்கி வருதலும் உண்டு. விருத்தமும், வண்ணமும் பாக்களாகும். ஐம்பதிற்குக் குறையாமல் பாடல் அமைதல் வேண்டும் (நவ. 31.).

3. 5. 4. 6 பெண்பாற் பிள்ளைத்தமிழுக்கு இறுதி மூன்று பருவங்கள் மாறும்; பருவத்திற்கு ஒன்பது அல்லது பத்துப் பாடல்கள் அமையலாம் (நவ. 32).

## 3. 5. 5 சிதம்பரப் பாட்டியல்

கொலை நீக்கித் தெய்வம் காக்க எனச் சுற்றத்தளவாக, வகுப்பு, அகவல்விருத்தம் என்ற பாக்களால் அமைவது பிள்ளைக் கவி. இது காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலியோடு ஆண்பாலுக்குச் சிறுபறை, சிற்றில், சிறுதேரும், பெண்பாலுக்குக் கழங்கு, அம்மானை, ஊசலும் பெற்று அமையும். மூன்று முதல் இருபத்தியோரு திங்கள் வரை அமைந்த ஒற்றித்த மாதங்களில் பாடப்படும் (சிதம். 28).

## 3. 5. 6 இலக்கண விளக்கப் பாட்டியல்

3. 5. 6. 1 கடுங்கொலை நீக்கிக் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்றமைவது ஆண்பால் பிள்ளைப்பாட்டு (இலக். 46).

3. 5. 6. 2 அவற்றுள் இறுதி மூன்றும் பெண் மகவுக்காகா; கழங்கு, அம்மானை, ஊசல் என்பவை அமையும். வகுப்பு, அகவல் விருத்தம் எனும் இவற்றுடன் கிளையளவினதாய்ப் பா அமையும் (இலக். 47).

## 3. 5. 7 இலக்கண நூல்களும் பிள்ளைத்தமிழ் இலக்கணமும்

மேற்கூறிய இலக்கண நூற் கருத்துக்களைத் தொகுத்துப் பார்க்குமிடத்துச் சில செய்திகள் கிடைக்கின்றன.

### 3.5.7.1 பருவ அமைப்பு

3.5.7.1.1 பருவங்களின் பெயர்களைச் சுட்டுமிடத்து எல்லாப் பாட்டியல் நூல்களும் ஒன்றுபடுகின்றன. பிங்கலந்தை மட்டும் கூறு

தல் கற்றல், இன்னமுதூட்டல், பூணணிதல், கச்சினோடு. உடை வாளை விரும்பத் தரித்தல் என்ற நான்கு பருவங்களை ஆண்பாற் பிள்ளைப்பாட்டுக்குரியவையாக மிகைபடக் காட்டுகின்றது.

3 5.7.1.2 பருவ வைப்பு முறையில், செங்கீரையை இரண்டாவ தாகவும் தாலப் பருவத்தை மூன்றாவதாகவும் ஏனைய இலக்கண நூல்கள் கூற, வெண்பாப் பாட்டியல் மட்டும் தாலப் பருவத்தை இரண்டாவதாகவும், செங்கீரையை மூன்றாவதாகவும் குறிக்கிறது.

3.5.7.1.3 சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்ற வைப்புமுறையினை ஏனைய இலக்கண நூல்கள் கூறப், பன்னிருபாட்டியல் மட்டும் சிற்றில், சிறுதேர் என்ற வைப்பு முறையினைக் கூறுகிறது.

## 3.5.7,2 பெண்பாற் பிள்ளைத்தமிழ்

பெண்பாற் பிள்ளைத்தமிழின் ஈற்றில் அமைய வேண்டிய மூன்று பருவங்கள் பற்றிக் கருத்து வேறுபாடு காணப்படுகிறது.

3.5.7.2.1 பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குரியவை குழமணம், காமன் நோன்பு, நீராடல், பாவையாடல், கழங்கு, பந்தடித்தல், சிறுசோறடுதல், சிற்றிலிழைத்தல், ஊசலாடல் எனப் பிங்கலந்தை கூறுகிறது.

3.5.7.2.2 சிற்றில் இழைத்தல், சிறுசோறாக்கல், குழமகன், ஊசல், காமன் நோன்பு என்பன என்று பன்னிரு பாட்டியல் கூறு கிறது.

3.5.7.2.3 சிதம்பரப் பாட்டியலும், இலக்கண விளக்கப் பாட்டியலும் கழங்கு, அம்மானை, ஊசல் என்பனவற்றைக் குறிப்பிடு கின்றன.

3.5.7.2.4 எவ்வாறாயினும் பெரும்பாலான பிள்ளைத்தமிழ் நூல் களில் அம்மானை, நீராடல், ஊசல் என்பனவே காணப்படுகின்றன.

## 3.5.7.3 பருவங்களின் காலம்

எந்தப்பருவம் எந்தக்காலத்தில் பாடப்படும் என்பதிலும் கருத்து வேறுபாடு காணப்படுகிறது.

3.5.7.3.1 பிங்கலந்தையில் இவ்வேறுபாடு மிகுதியாக அமை கிறது. 2,5,6,7,8,9,11,12,18 ஆகிய மாதங்களில் முதல் ஒன்பது பருவங்களும் அமையும் எனக்கூறிப் பின் 2,3,4,10,12 ஆகிய ஆண்டு களில் பின்வரும் பருவங்கள் அமையும் எனக் குறிக்கிறது. காலத்தால்

களைப் பிற்காலப் பாட்டியல் இலக்கணங்களும், சிற்றிலக்கியங்களும் ஏற்றுக்கொள்ளவில்லை எனலாம்.

3. 5. 7. 3. 2 மூன்று முதல் இருபத்தியொரு திங்கள் வரையமைந்த ஒற்றித்த மாதங்களில் பாடப்படும் என்ற கருத்தினை ஏனைய இலக்கண நூல்கள் அனைத்தும் தருகின்றன. அவற்றுள் வெண்பாப் பாட்டியலும், நவநீதப் பாட்டியலும் ஐந்து, ஏழாம் ஆண்டுகள் வரையிலும் பாடவும் பெறும் எனக்கூறுகின்றன.

3. 5. 7. 3. 3 எவ்வாறாயினும் பிள்ளைத்தமிழ் நூல்களில் அமைந்த பாடல்களில் இக்காலக் கணக்கு உணர்த்தப் பெறுதல் கிடையாது.

## 3.5.7.4 பாவகை

பிங்கலந்தை பாவகை பற்றிப் பேசவில்லை. ஏனையவை வகுப்பு, விருத்தப் பாக்களில் பாடுதல் வேண்டும் என்ற கருத்தைத் தருகின்றன. பன்னிருபாட்டியல் நெடுவெண் பாட்டாகவும் பிள்ளைத் தமிழ் அமையும் எனக் கூறுகிறது. அவ்வாறு அமைந்த பிள்ளைத் தமிழ் நூல் கிடையாது.

## 3.5.7.5 பாடல் எண்ணிக்கை

பாடல் எண்ணிக்கை பற்றிய வரையறையை எந்த இலக்கண நூலும் கூறவில்லை. நவநீதப் பாட்டியல் மட்டும் 50 பாடல்களைச் சிற்றெல்லையாகக் குறிக்கிறது; பருவத்திற்கு 9 அல்லது 11 பாடல் கள் அமையலாம் என்கிறது. பெரும்பாலான பிள்ளைத்தமிழ் நூல்கள் இவ்வரையறையைப் பின்பற்றவில்லை.

## 3.6 மீனாட்சிசுந்தரனாரின் பிள்ளைத்தமிழ் நூல்கள்

3.6.1 பிரபந்தங்கள் பல இயற்றிய மீனாட்சிசுந்தரனாரை அந்தாதிக்கு அடுத்துப் பிள்ளைத்தமிழ் இலக்கியமே வெகுவாகக் கவர்ந்தது போலும். உமையம்மைக்குப் பிள்ளைத்தமிழ் பாடுவதில் பெருவிருப்பம் கொண்டிருந்தார் எனலாம். இவர் இயற்றிய பிள்ளைத் தமிழ் நூல்களாக உ.வே. சாமிநாதையர் குறிப்பிடுவன:

1. திருவானைக்கா அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ்
2. திருத்தவத்துறைப் பெருந்திருப் பிராட்டியார் பிள்ளைத்தமிழ்
3. உறையூர் ஸ்ரீ காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்
4. திருப்பெருமணநல்லூர்த் திருவெண்ணீற்றுமை பிள்ளைத் தமிழ்
5. திருவிடைக்கழி முருகர் பிள்ளைத்தமிழ்

6. திருவாவடுதுறை ஸ்ரீ அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ்
7. திருக்குடந்தை ஸ்ரீ மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ்
8. கண்ணபுரம் பாகம்பிரியாள் பிள்ளைத்தமிழ்
9. ஸ்ரீ பிரம்மவித்தியாநாயகி பிள்ளைத்தமிழ்
10. ஸ்ரீ சேக்கிழார் பிள்ளைத்தமிழ்

இவற்றுள், கண்ணபுரம் பாகம்பிரியாள் பிள்ளைத்தமிழ் நாட்டுக்கோட்டை நகரத்தார் ஆதரவால் செய்யப்பட்டது. ஸ்ரீ பிரம்ம வித்தியாநாயகி பிள்ளைத்தமிழ் திருவெண்காட்டு இறைவியைப் பாட்டுடைத் தலைவியாகக் கொண்டு, வேளாண் பிரபுவாகிய நாடராசப்பிள்ளையின் தூண்டுதலால் எழுதப்பட்டது. இவ்விரண்டு நூல்களும் கிடைக்கவில்லை என உ. வே. சாமிநாதையர் குறிப்பிடு கின்றார்.

ஏனையவை, 'மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் பிரபந்தத்திரட்டு' என்னும் நூலுள் உ. வே. சாமிநாதையரால் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இந்நூலின் முதல் பதிப்பு 1910-ஆம் ஆண்டிலும், இரண்டாம் பதிப்பு 1926-ஆம் ஆண்டிலும் வெளியிடப் பட்டுள்ளன.

கிடைப்பனவற்றுள் ஐந்து பெண்பால் பிள்ளைத்தமிழ் நூல்கள்; மூன்று ஆண்பால் பிள்ளைத் தமிழ் நூல்கள். முன்னவை அனைத்துமே இறைவிமீது பாடப்பெற்றவை. பின்னவற்றுள் ஒன்று முருகன் மீதும், ஒன்று அடியவர் மீதும், ஒன்று ஆதீனகர்த்தர் மீதும் பாடப் பெற்றவை.

### 3.6.1.1 திருவானைக்கா அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ்

3.6.1.1.1 மீனாட்சிசுந்தரனார் தமது 26–வது வயதில் (1841) முதன் முதலாகப் பாடிய பிள்ளைத்தமிழ் நூல் திருவானைக்கா அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ். திரிசிரபுரம் லட்சுமணப்பிள்ளை என்ற அன்பரின் வேண்டுகோளுக்கிணங்கி இப்பிள்ளைத்தமிழை இயற்றினார். திருவரங்கம் புகைவண்டி நிலையத்துக்குக் கிழக்கே 1 கி.மீட்டர் தூரத்தில் அமைந்துள்ளது திருவானைக்கா எனும் தலம்.

3.6.1.1.2 சிலந்தியும் யானையும் பூசித்து முக்தி பெற்ற சிறப்பு டையது. வெள்ளையானை பூசித்தமையின் திருவானைக்கா என்னும் பெயர் பெற்றது. இங்கு இறைவன் வெண்ணாவல் மரத்தடியில் அமர்ந்துள்ளமையின் சம்புகேசுரர் என வழங்கப் பெறுகிறார். இறைவி அகிலாண்டவல்லி.

3.6.1.1.3 அகிலாண்டவல்லியைப் பாட்டுடைத் தலைவியாகக் கொண்டு, இப்பிள்ளைத்தமிழ் பாடப் பெற்றுள்ளது. மழவை மகாலிங்கையர் ஆலோசனைப்படி, திரிசிரபுரம் லட்சுமணப்பிள்ளையின் பொருளுதவியால் 1842-ஆம் ஆண்டு அச்சிட்டு வெளியிடப் பட்டது.

## 3.6.1.2 திருத்தவத்துறைப் பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழ்

3.6.1.2.1 அளகை என்றும், அளகாபுரி என்றும் இவரால் சிறப்பிக்கப்படும் திருத்தவத்துறை இன்று லால்குடி என வழங்கப்படுகின்றது. இங்கு வாழ்ந்த அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கித் திருத்தவத்துறைப் பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழைப் பாடினார்.

3.6.1.2.2 இத்தல இறைவி ஸ்ரீமதி எனவும் பெருந்திருப்பிராட்டியார் எனவும் வழங்கப்படுகிறாள். அவளே இந்நூலுக்குப்பாட்டுடைத் தலைவி. இத்தல இறைவன் அழைத்து வாழ்வித்த பெருமான் எனப் படுவார். நதி, வனம், புரம், புஷ்கரணி, க்ஷேத்திரம் என்னும் ஐந்தும் சிறப்புற அமைந்தமையின் இத்தலம் பஞ்சபுண்ணியத்தலம் எனப் பாராட்டப்படுகிறது. இத்தலச் சிறப்பும், இறைவி சிறப்பும் நூல் முழுமையும் பேசப்படுகின்றன.

## 3. 6. 1. 3 உறையூர் ஸ்ரீகாந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்

3. 6. 1. 3. 1 மீனாட்சிசுந்தரனார் உறையூர் சென்றிருந்த பொழுது அங்கிருந்த பக்தர்கள் விருப்பத்திற்கு இணங்க உறையூர் ஸ்ரீகாந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் பாடினார்.

3- 6. 1. 3. 2 உறையூர் என்பது திருமூக்கீச்சரம் என வழங்கப்பட்ட சிவத்தலமாகும். இது திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே அமைந்துள்ளது. கோழியூர் எனவும் வழங்கப்படும்.

நான்முகன் வந்து பூசித்தபொழுது இறைவன் வேளைக்கொரு நிறமாகக் காட்சியளித்தமையின் பஞ்சவர்ணநாதர் எனப் பெயர் கொடுத்தார்.

3. 6. 1. 3. 3 இறைவி காந்திமதியம்மை. இவ்விறைவியே இந்நூலில் பாட்டுடைத் தலைவியாக அமைகின்றாள். இந்நூல் 1852-ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டது.

## 3. 6. 1. 4 திருப்பெருமணநல்லூர்த் திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ்

3. 6. 1.4. 1 ஆச்சாபுரம் என வழங்கப்படும் திருப்பெருமணநல்லூரைச் சார்ந்த சிவலோகத்தியாக முதலியார் வேண்டுகோளுக்கேற்பத் திருப்பெருமண நல்லூர்த் திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழைப் பாடினார்.

3.6.1.4.2 திருப்பெருமணநல்லூர் சிதம்பரத்திற்குத் தெற்கே அமைந்துள்ளது. திருஞானசம்பந்தர் திருமணம் புரிந்துகொண்டு வீடுபேறு பெற்ற சிறப்புடையது.

இத்தல இறைவி திருவெண்ணீற்றுமையே இந்நூலின் பாட்டுடைத் தலைவி. இத்தல இறைவன் சிவலோகத் தியாகர். பஞ்சாக்கர தீர்த்தம் இத்தலச் சிறப்புக்குக் காரணம் ஆகின்றது.

3.6.1.5 இந்நூலை விக்கிரம வருடம் தை மாதம் சி. தியாகராச செட்டியார் பதிப்பித்தார்.

## 3.6.1.5 திருவிடைக்கழி முருகர் பிள்ளைத்தமிழ்

3.6.1.5.1 கார்காத்த வேளாண் பிரபுவாகிய சுப்பராயப்பிள்ளை என்பவரது விருப்பிற்கேற்பத் திருவிடைக்கழி முருகர் பிள்ளைத்தமிழ் இயற்றப்பட்டது-

3. 6. 1. 5. 2 இத்தலம் விடைக்கழி எனவும், இடைக்கழி எனவும் வழங்கப்படுகிறது. முருகன் உறையும் திருப்பதிகளுள் ஒன்றாகச் 'சிவப்பதிகள் வரலாறு' குறிக்கிறது,

3. 6. 1. 5. 3 மாயூரத்திலிருந்து தரங்கம்பாடி செல்லும் வழியில் திருக்கடையூர்ப் புகைவண்டி நிலையத்திற்கு 6½ கி. மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. இத்தல முருகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு இந்நூல் அமைந்துள்ளது. இது ரௌத்திரி வருடம் இயற்றப்பட்டது.

## 3. 6. 1. 6 திருவாவடுதுறை ஸ்ரீ அம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ்

3.6.1.6.1 திருவாவடுதுறை ஆதீனத்துக் குருபரம்பரை வரிசையில் பதினைந்தாவது சந்தான குரவராக விளங்கியவர் ஸ்ரீ அம்பலவாண தேசிகர் (காலம் 1845-1868). மீனாட்சிசுந்தரனார் காலத்து ஆதீன கர்த்தர் இவரே. இவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு திருவாவடுதுறை ஸ்ரீ அம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ் இயற்றப் பட்டது.

3.6.1.6.2 பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானுக்குப் பிள்ளைத்தமிழ் பாடும் மரபு கிடையாது. ஆனால் மீனாட்சிசுந்தரனாருக்கு, இறைவன் மீது பிள்ளைத்தமிழ் பாடுதல் வேண்டும் என்ற அவா இருந்திருக்கும் போலும்.

'குருவென வந்து மலம் நீக்கி ஞானம் தருபவனே சிவனாவான்'' என்ற மொழிக்கேற்ப, இந்நூலில் அம்பலவாண தேசிகரை இறைவனின் அவதாரமாகக் கொண்டு இறைவனின் அருளிச் செயல்களையும், இறைவனின் வடிவச் சிறப்பு, பிறசிறப்புக்களையும் அம்பலவாணர் மீது ஏற்றிப் பாடுகிறார்.

அம்பலவாண தேசிகராகிய பாட்டுடைத் தலைவரை நீக்கி விட்டுப் பார்த்தால் இந்நூல் சிவன் பிள்ளைத்தமிழ் என்று கூறும் தகுதிபெற்று விளங்குகிறது.

3.6.1.6.3 இந்நூலினை அரங்கேற்றிய பொழுது, ''ஒளிவார்...'' எனத்தொடங்கும் முத்தப் பருவத்துப் பாடலைக் கேட்டு மகிழ்ந்த அம்பலவாண தேசிகர், 'ஏறுமுக ருத்திராக்க கண்டி' யொன்றைப் பரிசளித்தாராம். இந்நூல் 1863-ஆம் ஆண்டு சி. தியாகராச செட்டியாரால் பதிப்பிக்கப்பட்டது. 1961-ஆம் ஆண்டு இருபத்தொன்றாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகள் கட்டளைப்படி, திருவாவடுதுறை ஆதீனத்தால் குறிப்புரையுடன் வெளியிடப்பட்டுள்ளது.

### 3.6.1.7 திருக்குடந்தை ஸ்ரீ மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ்

3.6.1.7.1 கும்பகோணம் ஜவுளிக்கடை கனகசபைப்பிள்ளையின் வேண்டுதலால், திருக்குடந்தை ஸ்ரீ மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ் பாடப்பெற்றது. குடந்தை எனப்படும் கும்பகோணம் தஞ்சை மாவட்டத்தில் அமைந்துள்ளது. பன்னிரு ஆண்டுகட்கு ஒருமுறை காசிகங்கை வந்து கலக்கும் சிறப்புடைய மகாமகக் குளம் உடையது.

3.6.1.7.2 இங்குள்ள இறைவனின் வடிவம் குடம்போன்றமைந்தமையின் கும்பேசுவரர் எனப்பட்டார்.[5] இறைவி மங்களநாயகி. இவ்விறைவியே இந்நூலின் பாட்டுடைத் தலைவி.

3.6.1.7.3 இந்நூலில் பல அழகிய சிலேடைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. ''அம்புலிப் பருவத்திலுள்ள கணித சம்பந்தமான சிலேடைகள், அப்பொழுது கும்பகோணத்திற்கு வந்திருந்த மன்னார்குடி ஸ்ரீமத் மகாமகோபாத்தியாய ராஜூ தீக்ஷிதரவர்களிடம் அறிந்து செய்யப்பட்டன''[6] என்பர். 1876-ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டது.

### 3. 6. 1. 8 சேக்கிழார் பிள்ளைத்தமிழ்

இவர் அருகிருந்து பலநாள் புராணப் பிரசங்கம் கேட்டுவந்த வன்றொண்டச் செட்டியார் என்பவர், சேக்கிழார் மீது பிள்ளைத் தமிழ் பாடித் தருமாறு வேண்டினார். பெரியபுராணத்தின் மீது அளவற்ற பற்றுக் கொண்ட மீனாட்சிசுந்தரனாரும் சேக்கிழார் பிள்ளைத்தமிழைச் சில தினங்களில் செய்து முடித்தார், சேக்கிழார் தம் குலம், குணம். அதிகாரம், கல்வி, பக்தி, ஞானம் முதலிய பல சிறப்புக்கள் இந்நூலில் பாராட்டப்படுகின்றன.

## 3.7 பிள்ளைத்தமிழ் நூல்களின் அமைப்புமுறை

மீனாட்சிசுந்தரனாரின் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாட்டியல் மரபிற்கேற்பப் பத்துப் பருவங்களையும், பருவத்திற்குப் பத்துப் பாடல்களையும் கொண்டு விளங்குகின்றன. இந்நூல்களில் பாயிரம் என்ற பகுதிகள் மட்டும் பாடல் எண்ணிக்கையில் வேறுபடுகின்றன.

பாயிர அமைப்பையும், பருவங்களின் தலைப்புக்கு ஏற்பப் பாடல்கள் அமைக்க அவர் கையாண்டுள்ள உத்திகளையும், அதில் வெற்றி பெற்றுள்ளாரா என்பதையும் காணலாம்.

### 3. 7. 1 பாயிரம்

பாயிரத்தின் சிறப்புக்கூறவந்த நன்னூலார்,

''ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே'' (நன். 54)

என்று குறிப்பிடுகிறார். நூலுக்கு முன்னுரையாக அமைந்து சிறப்புத் தருவது பாயிரம்.

மீனாட்சிசுந்தரனாரின் நூல்களில் பாயிரத்துள் கடவுள் வாழ்த்தும், அவையடக்கமும் கூறப்படுகின்றன. பாயிரங்களில் முதலில் விநாயகர் வணக்கம் பாடியுள்ளார். பிறகு சைவ சமய இறைக்குடும்பத்தை வரிசையாக வழிபடுமிடத்து, இறைவன் இறைவியைப் பாடி, மீண்டும் விநாயகரைப் பாடித் தொடர்கிறார்.

3. 7. 1. 1. மீனாட்சிசுந்தரனார் முதன்முதலாகப்பாடியஅகிலாண்ட. வில் பாயிரம் விரிவாக அமைந்துள்ளது. விநாயகக்கடவுள் வணக்கம், பரமசிவ வணக்கம், பராசக்தி வணக்கம், நந்திதேவர் வணக்கம், திருஞான சம்பந்த மூர்த்திநாயனார் வணக்கம், திருநாவுக்கரசு நாயனார் வணக்கம், சுந்தரமூர்த்தி நாயனார் வணக்கம், மாணிக்க வாசக சுவாமிகள் வணக்கம், தண்டீச நாயனார் வணக்கம், திருத்தொண்டர் கள் வணக்கம் எனப் பன்னிரு பாடல்களும் அவையடக்கமாக ஒரு பாடலும் ஆகப் பதின்மூன்று பாடல்கள் பெற்றுப் பாயிரம் விளங்குகிறது.

3. 7. 1. 2 பெருந்திரு. விலும், காந்தி. யிலும் மேற்கூறிய பாயிரத்துள் அமைந்துள்ள முதல் பத்துப்பாடல்களும் அமைந்துள்ளன. பதினோராவது பாடலில் தண்டீசநாயனாரையும் பிற நாயன்மார்களையும் ஒன்றாக இணைத்துப் பாடியுள்ளார். அவையடக்கப்பாடல் கிடையாது.

இம்மூன்றுமே விரிவாக அமைந்த பாயிரங்கள்.

3. 7. 1. 3. திருவெண்.ணில் வழித்துணை விநாயகர் வணக்கமும், திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வணக்கமும் இடம்பெறுகின்றன
3. 7. 1. 4, முருகர்., அம்பல., மங்கள., ஆகியவற்றில் விநாயகர் வணக்கம் மட்டுமே பாயிரத்தில் இடம் பெறுகிறது.

3.7.1.5. அம்பல. வில் விநாயகர் துதியோடு, தான்காப்புப்பருவத்தை மாற்றியமைத்தமைக்கு,

''வழிபடுதே வுளுங்கொலைதீர் தெய்வதங்காப்
புரைக்கவென வகுத்த சான்றோர்
மொழியுணர்ந்து மவ்வழிச்சென் றிலர் முன்னோர்''

எனத் தமக்கு முன் பிள்ளைத்தமிழ் நூல் செய்தோரைச் சுட்டிக் காட்டி, 'அவர்களைப் போலக் காப்புப் பருவத்தில் நானும் சில மாறுபாடுகள் செய்துள்ளேன்' எனப் பாயிரத்தில் ஆசிரியர் குறிப்பிட்டுச் செல்கின்றார்.

3.7.1.6 சேக்கிழார். இல் விநாயகக் கடவுள் வணக்கம், குரு வணக்கமும் அவையடக்கமும் என இரு பாடல்களைப் பாயிரத்தில் அமைத்துள்ளார். குரு வணக்கத்தில் உமாபதி சிவாச்சாரியாரை வணங்கிப் பாடியுள்ளார்.

3.7.1.7 இப்பாயிரங்களைத் தொகுத்துக் காணும்பொழுது இவர் தொடக்கத்தில் எழுதிய நூல்களில் விநாயகக் கடவுள் வணக்கம் முதலாகத் திருத்தொண்டர்கள் வணக்கம் ஈறாகப் பத்து அல்லது பன்னிரண்டு பாடல்களும், அவையடக்கப் பாடல் ஒன்றும் என மிக விரிவாகப் பாயிரம் அமைந்துள்ளது.

பிற்பட்ட நூல்களில் பாயிர மரபு கருதி விநாயகர் வணக்கம் மட்டுமே அமைந்துள்ளது.

## 3.7.2 காப்பு

பிள்ளைத்தமிழில் முதல் பருவமாக அமைந்து, பாடப்படும் குழந்தை தீதின்றி வாழ வேண்டும் எனத் தெய்வங்களை வேண்டிப்

பாடுவது காப்புப் பருவம். திருமால் முதலான பதினொரு தெய் வங்கள் காப்பினுள் வேண்டப்படும் கடவுளராவர். அப்படிப்பாடும் பொழுது திருமாலை முதலில் பாடுதல் வேண்டும்.[7]

3.7.2.1 அம்பல., சேக்கிழார். தவிர ஏனைய நூல்களில் காப்புப் பருவம் பன்னிரு பாட்டியல் கூறும் இலக்கணமுறை வழுவாது திருமால் முதல் முப்பத்து முக்கோடி தேவர் ஈறாகப் பதினொரு பாடல்கள் பெற்று விளங்குகிறது.

3. 7. 2. 2 அம்பல. வில் காப்புப் பருவத்தில் திருநந்திதேவர், சனற்குமார முனிவர், சத்திய ஞான தரிசனிகள், பரஞ்சோதி மாமுனிவர், மெய்கண்ட சிவாசாரியர், அருணந்தி சிவாசாரியர், மறை ஞானசம்பந்த சிவாசாரியர், உமாபதி சிவாச்சாரியார்' அருணமச்சிவாயர், சித்தர் சிவப்பிரகாசர், நமச்சிவாய மூர்த்திகள் முதலிய பதினால்வர் எனப் பதினொரு பாடல்களில் காவல் கடவுளராகத் தாம் துணிந்தோரை அமைத்துப் பாடுகிறார்.

3. 7. 2. 2. 1 திருவாவடுதுறை ஆதீன கர்த்தரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டமையின், அவருக்கு முந்திய ஆதீனப் பரம்பரையினர் அனைவரையும் காப்புக் கடவுள்களாக்கியுள்ளார்.

3. 7. 2. 2, 2 இவர்களுள் திருநந்திதேவர், முதலிய நால்வர் அகச்சந்தான குரவர்கள் எனவும், மெய்கண்டார் முதல் சிவப்பிரகாசர் வரையுள்ளோர் புறச் சந்தான குரவர்கள் எனவும், ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள் முதலானோர் அபிடேக பரம்பரையினர் எனவும் குறிப்பிடப் பட்டனர்.

3. 7. 2. 2. 3 15வது பட்டத்தில் ஆதீன கர்த்தராக அமைந்தவர் இந்நூலின் பாட்டுடைத்தலைவர் ஆதலின், அபிடேகப் பரம்பரையின் பதினான்காமவர் வரை காப்புப் பருவத்தில் இடம் பெறுகின்றனர்.

3. 7. 2. 3 சேக்கிழார். இல் காப்புப் பருவம் புதிய உத்தியில் அமைந்துள்ளமை குறிப்பிடத் தக்கது. திருமால் முதலிய தெய்வங் களைப் பாடும் இலக்கண மரபிலிருந்து மாறுபட்டுத் திருத்தொண்டர் களையே காப்பாகக் கூறத் தொடங்கித் திருத்தொண்டத் தொகைச் செய்யுள் முறைப்படி அமைத்துக் காப்புப் பருவம் பாடுகிறார். திருத்தொண்டத் தொகைச் செய்யுட்களின் முதல் தொடர்களே, காப்புப் பாடல்களின் தலைப்பாகவும், தொடக்கமாகவும் அமைந் துள்ளன.

3.7.2.3.1 'தில்லைவாழந்தணர்', 'இலைமலிந்த வேனம்பி' 'மும்மையாலுலகாண்ட', 'திருநின்ற செம்மையே', 'வம்பறாவரி

வண்டு', 'வார் கொண்ட வனமுலையாள்', 'பொய்யடிமையில்லாத' 'கறைக் கண்டன் கழலடியே', 'கடல் சூழ்ந்த உலகமெலாம், 'பத்தராய்ப் பணிவார்கள்', 'மன்னியசீர்மறை நாவன்' என்றமையும் பதினொரு பாடல்களும் காப்புப் பருவத்தில் இடம் பெற்றுள்ளன.

3.7.2.3.2 'தொண்டர் குலமே தொழுகுலம்' என்னும் மரபிற்கேற்பச் சிவனைப் பாடுவதைவிடச் சிவனடியார்களைப் பாடுவதில் பெரு விருப்பம் கொண்டவர் சேக்கிழார். சிவனடியார்களின் வாழ்வியலையும், பக்தி உணர்வையும், இறைவன் அவர்களை ஆட்கொண்ட நெறிகளையும் தம் பெரிய புராணத்தில் பரவச உணர்வோடு பாடியவர். 'தொண்டர் சீர் பரவுவார்' எனச் சிறப்பிக்கப்பட்டவர்.

3.7.2.3.3 இத்தகு அடியார்க்கடியாராகிய சேக்கிழாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டமையின், அவரால் விரும்பிப் பாடப்பட்ட நாயன்மார்களையே காவற் கடவுளராக அமைத்தமையும், அவருக்கு முதல் நூலாகப் பயன்பட்ட திருத்தொண்டத் தொகைப் பாடல்களின் தொடக்கத்தையே தலைப்பாகவும், தொடக்கமாகவும் பயன்படுத்தியமையும் பொருத்தமுடையனவேயாகும்.

## 3.7.3 ஏனைய பருவங்களின் அமைப்பு

3.7.3.1 பிள்ளைத்தமிழில் அமைந்த செங்கீரை முதலிய பருவங்கள் ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியைக் கூறுவன. ஆனால் ஒவ்வொரு பத்துப் பாடல்களிலும், அவ்வப் பருவ நிகழ்ச்சி இடம் பெறவில்லை. ஒருசில பாடல்களிலேதான் அமைந்துள்ளன. பருவ விளக்கத்திற்கு ஓரளவு தொடர்புள்ள செய்திகள் சில பாடல்களில் குறிப்பிடப்படுகின்றன.

3.7.3.2 எஞ்சிய பாடல்கள் பருவ விளக்கத்திற்குத் தொடர்பில்லாமல், பாட்டுடைத் தலைவனின் புகழினை மட்டுமே பாடுவதாய் அமைந்து, ஈற்றடி மட்டும் பருவக் கருத்துக்கு ஏற்பச், 'செங்கீரையாடி யருளே! என்றோ, 'தாலோ தாலேலோ' என்றோ அமைகின்றன. இவ்வகைப் பாடல்களில் ஈற்றடிகளை மாற்றியமைத்தாலுங் கூட ஒருபருவப் பாடல் மற்றொரு பருவத்திற்குப் பயன்படும் வகையில் அமைதலைக் காணலாம்.

3.7.3.3 இந்நிலையில் மீனாட்சிசுந்தரனார் தம் பிள்ளைத்தமிழ் நூல்களில் எந்த அளவுக்கு வெற்றி பெற்றுள்ளார் என்று காணலாம். இவ்வாய்வுக்கு உதவுவதாக இவ்வியலின் இறுதியில் பட்டியல் எண். 1, தரப்பட்டுள்ளது.

3.7.3.3.1. செங்கீரைப் பருவம்

3.7.3.3.1.1. செங்கீரை—விளக்கம்

செங்கீரை என்ற சொல்லுக்குப் பொருள் கூறுவதில் அறிஞர் தம் கருத்துக்கள் வேறுபடுகின்றன.

3.7.3.3.1.1.1. ''செங்கீரைப் பருவம் குழந்தை ங்குவா. ங்குவா என ஒலி எழுப்புவதை வேண்டும் பருவம் என்பர். கீர் எனும் மொழி, சொல் என்னும் பொருளது ... குழந்தையின் மொழியாதலின் இது செங்கீரை எனப்பட்டது''[8] என இப்பருவத்திற்கு விளக்கம் தருகிறார் பாலூர் கண்ணப்ப முதலியார்.

3.7.3.3.1.1.2 அடுத்து இவரே, பல பிள்ளைத்தமிழ் நூல்களில் செங்கீரை என்பது குழந்தை இருகை பதித்து, முழந்தாள் மடித்து நிமிர்ந்து ஆடும் ஆட்டம் என்பதையே குறித்துச் சென்றமையினை எடுத்துக் காட்டிப் பின்வரும் விளக்கத்தையும் தருகிறார்.

''இதனால் குழந்தை அசைந்தாடுவது செங்கீரை எனப் பட்டது. கீர் என்பது வடசொல். அதன் பொருள் கிளி என்பது. செம்மை என்பது அழகு என்னும் பொருள் தரும். ஆகவே, கிளி அசைந்தாடுவது போல ஆடுக என்று கூறினும் அமையும்''[9] என்கிறார்.

3.7.3.3.1.1.3 'சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு; சந்தனக் கிளியே சாய்ந்தாடு, என இன்றும் கிராமப் புறங்களில் பாடக் கேட்கலாம், இது குழந்தை அசைந்தாடுவதையே குறிக்கும். இலக்கியங்கள் குழந்தை தவழ்ந்த நிலையில் அசைந்தாடுவதைச் செங்கீரை என்ற சொல்லால் குறித்தன.

பிள்ளைத்தமிழ் இலக்கியங்களில் செங்கீரைப் பருவப் பாடல் களில் குழந்தை அசைந்தாடுவதே மிகுதியும் குறிப்பிடப்படுவதால் இவ்விளக்கமே ஏற்புடையது எனலாம்.

3.7 3.3.1.2 செங்கீரையாட்டம்

மீனாட்சிசுந்தரனாரின் பிள்ளைத்தமிழ் நூல்களில், மேலே காட்டிய விளக்கங்களுள் பின்னதே இடம் பெறுகிறது. குழந்தை ஆடுகின்ற செங்கீரை ஆட்டக் காட்சிகளை முருகர். தவிர ஏனைய ஏழு நூல்களிலும் அமைத்துள்ளார்.

3.7.3.3.1.2.1 அகிலாண்ட. வில், 'வாயமுது ஊறல் அளித்த விரல்களில் மண்படுமே என்று எண்ணாது, இரு கைகளையும் தரை யில் பதித்துச் செங்கீரையாடுக.'[10]

என்றும்,

"செந்தாமரைச் சரணங்காட்டிப் பாராட்டிநீ
செங்கீரை யாடியருளே"[1]

என்றும் அமைத்துள்ளமை, முழந்தாள் மடித்து, இருகை பதித்து ஆடும் செங்கீரையாட்டத்தைக் குறிக்கின்றன.

அதேபோன்று, பெருந்திரு வில் முதல் பாடல் செங்கீரை ஆட்டத்தைக் குறிப்பதாக அமைந்துள்ளது.

"... பிறங்குமக் கரமிரண்டும்
ஏர்பூத்த நிலனிற் பதித்தொரு
மலர்த்தா ளிருத்தியொர் மலர்த்தாளெடுத்
தெழின்முக நிமிர்ந்தசைத் திரவிமண்
டிலமானும் இருகுழைவில் வீசியாடத்
தேர்பூத்த வீதித் தவத்துறைப் பெருமாட்டி
செங்கீரை யாடி யருளே."

எனஅமையும் அப்பாடல் பகுதி, செங்கீரை ஆடும் முறையினையும், அசைகின்ற முக அழகினையும் நன்கு புலப்படுத்துகின்றது.

3.7 3.3.1.2 2 சேக்கிழார். இல் மட்டும், செங்கீரைப் பருவத்தில் சேக்கிழாரின் மழலை மொழி குறிப்பிடப்படுகின்றது.

'நம்மைக் குழந்தையாக்கி, எம்குதலை மொழிக்கு ஆசையுற்றீர்; அவை பயனற்றவை என்று நீ மறுப்பாயானால், பெரிய புராணத்துள் 'செப்பலுற்ற பொருள்' என நீ பாடிய பாடலின் பொருட்பயனை உணராதவர்களல்ல யாங்கள். எனவே உன் மழலை மொழிப் பயனை அறிந்த எமக்குச் செங்கீரை யாடியருள்க'[12] எனப் பாடுகின்றார்.

இங்கு செங்கீரை என்பது செவ்விய மழலைமொழி எனப் பொருள் கூறுவார்தம் கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டுப் பாடல் அமைந்துள்ளது.

ஆனால் இதே சேக்கிழார். இல் முதல் பாடலில் செங்கீரையாட்டம் அழகுறக் காட்டப்படுகின்றது. எனவே ஏழு பிள்ளைத்தமிழ் நூல்களில் இத்தகு ஆட்டம் புனையப்பெறுவதால், மீனாட்சிசுந்தரனாருக்குக், குழந்தை அசைந்தாடுதல் என்ற கருத்தே பெரிதும் உடன்பாடு என்பது தெளிவு.

தம் காலத்துச் செங்கீரை என்பதற்கு மற்றொரு பொருளும் வழங்கியமையினையும் இவர் அறிந்திருந்தார் என்பதையே சேக்கிழார். செங். 2–வது பாடல் காட்டுகிறது.

3.7.3 3 1 2.3. முருகா். இல் மட்டும் செங்கீரையாட்டம் குறிக்கப் பெறவில்லை. இந்நூலின் செங்கீரைப்பருவத்தில் எட்டுப்பாடல்கள்(1, 2. 3, 4, 5, 8, 9, 10) முழுமையும் முருகன் புகழ் பாடுவனவாகவே அமைகின்றன. ஈற்றடி மட்டுமே இப்பாடல்களில் செங்கீரை யாடி யருளே என்ற முடிவு பெற்று அமைகின்றன.

இதன் காரணம் முருகப் பெருமானின் சிறப்புக்களிலும், அவை தொடர்பான புராணக் கதைகளிலும் இவர் கொண்ட ஈடுபாடே எனலாம்.

## 3. 7. 3. 3. 1. 3. அணிகல ஆட்டம்

செங்கீரைப் பருவப் பாடல்களில், செங்கீரையாடும் பொழுது அசைந்தாடும் அணிகலன்களின் ஒளியும் சிறப்பும் பேசப்படுகின்றன. இரண்டு பிள்ளைத்தமிழ் நூல்கள் தவிர (அம்பல., மங்கல.) ஏனைய நூல்களில் அணிகலச் சிறப்புத் தனி இடம் பெறுகிறது.

காந்தி. யில், 'நித்திலம் வைத்த தலைப்பணி சுற்று மிசைந் தாட, நெற்றியில் சூழியமும், சுட்டியும் அசைந்தாட, முகமதியில் புன்னகை நிலவாடக், குதம்பை ததும்பக் கட்கயலாடக், குழை களாடக், கால்மலரில் கிண்கிணிகள் கலின் கலின் என்றாடச் செங் கீரை யாடுக,[13] என வேண்டுவதாக அமைகின்ற பாடல் செங் கீரையாட்டத்தில் உடன் ஆடும் அணிகலச் சிறப்பினைக் காட்டு கின்றது.

## 3. 7. 3. 3. 1. 4 ஈற்றடியில் அமைவன

தவிர, எல்லாப் பிள்ளைத்தமிழ் நூல்களிலும், செங்கீரைப் பருவத்திற்குத் தொடர்பில்லாச் செய்திகளைக் கூறி, ஈற்றடி மட்டும் 'செங்கீரை யாடி யருளே' என்றோ' 'ஆடுக செங்கீரை' என்றோ, 'செங்கோ செங்கீரை' என்றோ அமைகின்ற பாடல்களும் இடம் பெறுகின்றன.

3. 7. 3. 3. 1. 5 இவ்வமைப்பில் அமைந்துள்ள பாடல்கள் :

| நூல் | | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| 1. அகிலாண்ட. | — | 6 |
| 2. பெருந்திரு. | — | 7 |

| | | | |
|---|---|---|---|
| 6. | அம்பல. | — | 6 |
| 7. | மங்கள. | — | 9 |
| 8. | சேக்கிழார் | — | 7 |

எண்ணிக்கை யளவில் பார்க்கும் பொழுது செங்கீரைப் பருவக் கருத்து மிகுதியும் பாடல்களில் இடம் பெறவில்லை என்ற முடிவே கிடைக்கின்றது.

சராசரியாக 29% மட்டுமே பொருளியைபு உடைய பாடல் களாக அமைகின்றன.

## 3. 7. 3. 3. 2 தாலப் பருவம்

### 3. 7. 3. 3. 2. 1 தால் — விளக்கம்

தால் என்றால் நாக்கு; நாக்கினை அசைத்துப் பாடுதல் தாலாட்டு எனப்படும். தாயரும், தாதியரும் குழந்தை கண் துயிலு தற்காகப்பாடுவது தாலாட்டு எனப்படுகிறது.

3. 7. 3. 3. 2. 2 பெரியாழ்வார் கண்ணனுக்குப் பாடிய தாலாட்டுப் பாடல்கள், அவன் கண்ணுறங்கும் தொட்டில் சிறப்பையும், பிற தேவர்கள் அனைவரும் அவனுக்குக் கொண்டு வந்து தரும் சீர்ப் பொருள்களின் சிறப்பையும் விளக்குவனவாக அமைகின்றன.

3.7 3.3.2.3 நாட்டுப்புறங்களில் இன்றும் பாடப்படும் தாலாட்டுப் பாடல்கள், குழந்தையின் தாய்மாமன் செய்கின்ற சீர் வரிசைகளின் சிறப்பையும், குலச்சிறப்பைபும், தொட்டில் சிறப்பையும் குறிப்பிடு வனவாக அமைதலைக் காணலாம். ஆனால், பிள்ளைத்தமிழ் நூல்களில் அமைந்ததாலப் பருவப் பாடல்களில் இந்நாட்டுப்புறப் பாடல்களின் பொருட் கூறுகளைக் காண இயலவில்லை

3. 7. 3. 3. 2. 4 மீனாட்சிசுந்தரனாரின் எட்டுப் பிள்ளைத்தமிழ் நூல் களிலும், பாட்டுடைத் தலைவர்களின் சிறப்பும், அவர்தம் ஊர்ச் சிறப்பும், மற்றும் வருணனை போன்ற பொதுச் செய்திகளுமே இடம் பெறுகின்றன.

3. 7. 3. 3. 2. 5 ஈற்றடி மட்டும் 'தாலோ தாலேலோ' என அமை கின்றது. அகிலாண்ட, திருவெண்., மங்கள., ஆகிய நூல்களில் பத்தாவது பாடல்களில் அடிதோறும் 'தாலோ தாலேலோ' என அமைந்துள்ளது.

3. 7. 3. 3. 2. 6 அம்பல. வில் மட்டும் தொட்டில் சிறப்புப் பேசப் படுவது குறிப்பிடத்தக்கது.

'ஆகமங்களாகிய சங்கிலிகள் பூட்டி, மாமறையே தொட்டிலெனச் செறிவித்து, உபநிடதங்களாகிய அணைமீது பள்ளி கொள்ளும் நாம், இம்மடவார் செய் தொட்டிலில் கண்ணுறங்குவதோ என எண்ணாது கண்ணுறங்குக'[14] என அம்பலவாண தேசிகர் பள்ளி கொள்ளுதற்குரிய தொட்டில் சிறப்புப் பேசப்படுகிறது.

3. 7. 3 3. 2 7 எண்ணிக்கை அளவில் பார்க்கும் பொழுது ஒரு பாடல் தவிர அனைத்துப் பாடல்களும் பருவத் தலைப்பிற்குரிய பொருள் தொடர்பின்றி அமைந்துள்ள பருவம், தாலப் பருவம் எனலாம்.

## 3.7.3.3.3 சப்பாணிப் பருவம்

### 3. 7. 3. 3. 3. 1 சப்பாணி — விளக்கம்

பாணி என்றால் கரம். குழந்தையை இருகைகளையும் சேர்த்துத் தட்டி ஓசையெழுப்புமாறு பாடுதல் சப்பாணிப் பருவத்தின் உட்பொருள் ஆகும். இக்கருத்தினை,

''...அன்று
தேருய்த்த கைகளால் சப்பாணி
தேவகி சிங்கமே சப்பாணி''[15]

என்ற பெரியாழ்வார் திருமொழியாலும,

''சோத்தென நின்னைத் தொழுவேன் வரந்தரப்
பேய்ச்சி முலையுண்ட பிள்ளாய்—பெரியன
ஆய்ச்சிய ரப்பம் தருவர்—அவர்க்காகச்
சாற்றியோ ராயிரம் சப்பாணி
தடங்கைக ளாற்கொட்டாய் சப்பாணி''[16]

என்ற திருமங்கையாழ்வார் கூற்றாலும் உணரலாம்.

### 3. 7. 3. 3. 3. 2 கரச் சிறப்பு

மீனாட்சிசுந்தரனாரின் எட்டுப் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் சப்பாணி கொட்டும் குழந்தையின் கரப் பெருமை சிறப்பிடம் பெறுகிறது.

அகிலாண்ட. வில், 'வளவன் மனையில் தையலார் மைக்கண் புதைத்து விளையாடிய கைகொண்டு சப்பாணி கொட்டுக'[17] எனவும்,

''மலையரையன்தர, எம்பிரான் மணவறையில் தொட்ட கரம் முகிழ்த்துக் கொட்டுக சப்பாணி[19] எனவும்,

''குரவக் குழவி துயின்ற கரங்கொண்டு கொட்டுக சப்பாணி'' எனவும் இறைவியின் கரப் பெருமை புராண நிகழ்ச்சிகளோடு இணைத்துப் பேசப்படுகின்றது.

பெருந்திரு. வில்,

'மகிழ்நரை வெல்லுதற்காக மலர்வாளி ஏந்தி நிற்கும் கரங்கொண்டு சப்பாணி கொட்டுக'[20]

என்றும்,

'பைங்கிளிப் பேட்டின் அஞ்சிறை தழுவிக் கனிகொண்டு ஊட்டி மகிழ்விக்கும் அங்கை கொண்டு சப்பாணி கொட்டியருள்க'[21] என்றும் இறைவியின் கரம் சிறப்பிக்கப்படுகின்றது. இவ்வாறு பெண்பாற் பிள்ளைத்தமிழில் இறைவியின் கரப்பெருமை இடம் பெறுகின்றது.

முருகர். இல், 'பிரணவப் பொருள் உரைக்காது மயங்கிய பிரமன் தலையில் குட்டியமையின் புறத்தே சிவந்த கரங்கள், அகத்தேயும் சிவக்கும் வண்ணம் சப்பாணி கொட்டுக'[22] என்று பாடுகின்றார்.

அம்பல. வில், 'தன்னருகில் அமர்ந்திருக்கும் சுப்பிரமணிய தேசிகரை 'நந்தி குலத்திற்கு ஒருகதிர் நீயென்று முதுகுதைவரு மலர்க்கைகளினால் சப்பாணி கொட்டுக'[23] என அழைக்கிறார்.

சேக்கிழார். இல் 'மன்றிலே இறைவன் தந்த விபூதியினைக் கும்பிட்டு ஏற்ற திருக்கை குவித்துக் கொட்டுக சப்பாணி,[24] என்று பேசுகிறார்.

இவை போன்ற பல பாடல்கள் எல்லாப் பிள்ளைத்தமிழிலும் கரச் சிறப்புக் கூறுவனாய் அமைந்துள.

### 3. 7. 3. 3. 3. 3 சப்பாணிச் சிறப்பு

கொட்டப்படும் சப்பாணியின் சிறப்பும் சில நூல்களில் பேசப் படுகின்றன.

காந்தி.யில் 6-வது பாடலும், மங்கள. வில் 2-வது பாடலும், சேக்கிழார். இல் 4-வது பாடலும் சப்பாணியின் சிறப்புப் பேசு வனவாய் அமைகின்றன.

காந்தி.யில் இறைவி கொட்டும் சப்பாணியின் ஓசையால் ஏற் பட்ட விளைவுகள் கற்பனை நயத்தோடு பேசப்படுகின்றன.

'அண்டங்கள் குலுங்க முரசொலிக்கும் உறையூர் அமர்ந்த மயிலே! எழிலி முழக்கென எண்ணிக் கயிலையின் மயில்களாட, மடங்கல் முழக்கென்று எண்ணிக்களிறுகள் பிளிற, இடிமுழக்கம் என எண்ணி அரவுகள் வருந்த, ஊடல் கொண்ட அரமகளிர் அச்சம்காரண மாகத் தம் ஊடலை மறந்து மைந்தர்களைத் தழுவிட, அறிதுயில்

கொண்ட மாலவன் திடுக்கிட்டுக் கண்விழித்து, 'எவன் இவ்வொலி செய்தது' என வினவக் கொட்டுக சப்பாணி[25] என அப்பாடல் அமைகின்றது.

மங்கள. வில், 'மாதேவன் மன்றிலே ஆடும் நடனத்திற்கு ஏற்பத் தாளமிட்டுச் சப்பாணி கொட்டுக'[26] எனப் பாடுகிறார்.

சேக்கிழார். இல், 'சப்பாணி கொட்டுதல் என்பது மிக எளிய செயல்; ஒருகுறியில் ஆவாகனம் எண்ணுதல், நாராயண உபநிடதம் உரைத்தல், எம் மலமும் நீத்து இன்பம் அருளுக என வேண்டல் என்பனபோன்ற அரிய செயல் அன்று. இவ்வரிய செயல்களில் வல்லவனாகிய நீ, மிக எளிதாகச் சப்பாணி கொட்டி யருள்க'[27] என வேண்டுமிடத்துச்சப்பாணி கொட்டுதலின் எளிமைப்பாடு விளக்கம்பெறுகிறது.

## 3. 7. 3. 3. 3. 4 இன்னின்ன தருவேன் எனல்

குழந்தையை ஏதேனும் ஒரு செயல் செய்யத் தூண்டுமிடத்து அதற்கு விருப்பமான பொருள்களைக் காட்டி 'இவற்றைத் தருவேன், இது செய்க' என்னும் உளவியல் அடிப்படையிலும் பாடல் அமைத்துள்ளார்.

இந்நெறி மங்கள. வில் மட்டும் ஒரு பாடலில் அமைந்துள்ளது. 'எங்களை எடுத்தாள வல்ல நின்திருவடிக்கு வந்தனம் பலபுரிவோம்; உன்னைக் கருதும் அடியவரையும் பரசுவோம்; கங்கையை நின்னடிமை என்று சாதிப்போம்; பையற்று ஒடுங்கும் அரவினைப் போலப் பொறியற்று ஒடுங்க நின்னையே கருத்தில் கொள்வோம்; இவ்வாறு பாடித் துதிக்கும் எங்கட்கு நீ செய்ய வேண்டியது சப்பாணி கொட்டி யருளுதலே ஆகும்'[28] எனும் பாடலில் இறைவி கொட்டும் சப்பாணிக்குப் பதிலாகத் தாம் செய்யும் தொண்டுகளைக் கூறி வகைப்படுத்துகிறார்.

## 3. 7. 3. 3. 3. 5 ஈற்றடியில் அமைவன

இவை தவிர, தொடர்பற்ற செய்திகளோடு ஈற்றடி மட்டும், 'சப்பாணி கொட்டியருளே' எனவும், 'கொட்டுக சப்பாணி' எனவும் அமைகின்ற பாடல்களும் காணப்படுகின்றன. அவை :

| | நூல் | | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1. | அகிலாண்ட. | — | 3 |
| 2. | பெருந்திரு. | — | 3 |
| 3. | காந்தி. | — | 7 |
| 4. | திருவெண். | — | 6 |

| | | | |
|---|---|---|---|
| 5. | முருகர். | — | 5 |
| 6. | அம்பல. | — | 6 |
| 7. | மங்கள. | — | 5 |
| 8. | சேக்கிழார். | — | 5 |

எண்ணிக்கையளவில் பார்க்குமிடத்து, மீனாட்சிசுந்தரனார் பாடல்களில், சப்பாணிப் பருவம் சராசரியாக 45% பொருள் தொடர் போடு அமைந்துள்ளது எனலாம்.

## 3. 7. 3. 3. 4 முத்தப் பருவம்

## 3. 7. 3. 3. 4. 1 முத்தம்—விளக்கம்

முத்தம் தருமாறு குழந்தையை அழைத்தலே இப்பருவத்தின் உட்பொருள்.

3. 7. 3. 3. 4. 1. 1. முத்தம் தரும் வாய்ச் சிறப்பும், முத்தச் சிறப்பும் இப்பருவத்தில் பேசப்படுகின்றன.

3. 7. 3. 3. 4. 1. 2 தவிர, முத்தம் என்பது முத்துக்களையும் குறிக்கும் சொல்லாதலின், பிற முத்துக்களோடு இணைத்துக் கூறிப் பாட்டுடைத் தலைவனின் முத்தமே சிறந்தது எனக் கூறுவதில் பெருமகிழ்வு காண்கின்றனர், புலவோர். மீனாட்சிசுந்தரனார் நூல்களிலும் முத்தப் பருவம் இத்தகு சிறப்புக்களைப் பெற்றே விளங்குகின்றது.

## 3. 7. 3. 3. 4. 2 வாய்ச் சிறப்பு

சப்பாணி கொட்டுமிடத்துக் கரச்சிறப்புப் பாடியது போல, முத்தப் பருவத்தில் வாய்ச் சிறப்புப் பாடப்படுகிறது. ஆசிரியரின் எல்லாப் பிள்ளைத்தமிழிலும் இவ்வமைப்பு இடம் பெற்றுள்ளது.

அகிலாண்ட. வில் மலையரசன் தேவியின் திருமார்பில் இறைவி பாலருந்திய சிறப்பினை உட்கொண்டு, ''குடிகொண்ட பாலருவி உண்ட சிறு பெண்பிள்ளை, கொவ்வை வாய் முத்த மருளே''[29] எனப்பாடுகிறார்.

காந்தி.யில் இறைவியின் வாய்ச்சிறப்பு அழகிய கற்பனை நயத்தோடு பாடப்பெற்றுள்ளது.

சிவபெருமானின் உள்ளக் கமலம் மலரவும், அரமகளிரின் கரமுண்டகங்கள் குவியவும், சகோரப்பறவை மதியின் நிலவென்று ஓடி வரவும், உன் கையிலமர்ந்த பசுங்கிளி பவளக் கிண்ணத்தில் இட்ட அமுதம் என்று எண்ணி அங்காப்பவும், கலைமகள் தன்மேனி

ருமைத்து என நாணவும் ஒளிவிடும் மூரல் அரும்பும் திருவாய் மத்தம்தருக'[80]எனுமிடத்து இறைவியின்/ வாய்ச்சிறப்பும், அச்சிறப் னால்பிற உயிரினம் அடைந்த மயக்க உணர்வும் காட்டப்படு ன்றன.

திருவெண். ணில்,

''சைவக் குழவி திருவாய் ஆறும்
உவந்தளிக்கும் முத்தம் கமழும் நின்கனிவாய்
முத்தம் தருக முத்தமே''[81]

ன முருகனுக்கு முத்தமிட்ட இறைவியின் திருவாய்ச் சிறப்பு புலப் டுத்தப்படுகிறது.

இவை போன்றே முருகர். இல், 'குறமகள் தந்த தேன் லந்த தினை மாவினை உண்ட செங்கனிவாய் முத்தம் தருக'[82] னவும், 'தந்தைக்கே பிரணவப் பொருளை உணரும்படி உரைத்த ருவாயால் முத்தம் தருக'[83] எனவும் முருகனின் வாய்ச் சிறப்புப் பசப்படுகின்றது.

இவ்வாறு முத்தம் தருகின்ற வாயின் சிறப்பு எல்லாப் ள்ளைத் தமிழ் நூல்களிலும் இடம் பெறுகின்றது.

### .7.3.3.4.3 பிற முத்துக்களோடு ஒப்பிடல்

முத்துப் பிறக்குமிடங்களாக, மதி, மேகம், சங்கு, சிப்பி, ன், முதலை, உடும்பு, தாமரை, வாழை, கமுகு, கரும்பு, செந் நல், மூங்கில், யானைக் கொம்பு, பன்றிக் கொம்பு, பசுவின் பால், ாகம், கொக்கு, நங்கையர் கழுத்து என்ற பத்தொன்பது இடங்கள் றிக்கப்படுகின்றன.

முத்தப் பருவம் பாடும் புலவர்கள் இவ்வகை முத்துக்களுக்கு தேனும் ஒருகுறை கூறிப் பாட்டுடைத் தலைவனின் முத்தமே றைவற்ற சிறப்புடையது எனப்பாடுதல் மரபு.

அம்மரபினை மீனாட்சிசுந்தரனாரும் தம் நூல்களில் பின்பற்றி ள்ளார். இரண்டு நூல்கள் தவிர (பெருந்திரு., சேக்கிழார்.) னையவற்றில் இவ்வமைப்பினைக் காணமுடிகின்றது.

திருவெண். ணில், 'மதி முத்தம் வீரபத்திரனின் காலால் திபட்டு மண்ணிடைத் தேய்ந்தது; மூங்கில் தரும் முத்தம் அதிலேயே தான்றிய நெருப்பில் வெதுப்புண்டு கருகிற்று; செந்நெல்லில் ளையும் முத்து வன்பகடு காலுழக்கப் பிளவுபட்டது; சிப்பி, சங்கு, ன் முதலியவற்றில் தோன்றும் முத்துக்கள் புலவு நாற்றம் பெறும்;

பூவையர் கழுத்து முத்துக்கள் அவர்தம் மகிழ்நர் கைபட்டு அதுக்குண்டன; கரும்பு தரும் முத்தம் மாலையின் நெரிந்தது. எனவே இவை வேண்டேம். பதிமுத்தம் ஏற்று மகிழும் நின் செம்பவள வாய் முத்தம் தருகவே'[35] என இறைவியிடம் முத்தம் வேண்டுகிறார்.

பிற முத்துக்களோடு ஒப்பிடல் என்ற இவ்வமைப்பு எல்லாப் பிள்ளைத்தமிழிலும் ஏறத்தாழ ஒரேமாதிரியாகவே பாடப் பட்டுள்ளது.

## 3. 7. 3. 3. 4. 4 ஈற்றடியில் அமைவன

வாய்ச் சிறப்புப் பேசுதல், பிற முத்துக்களோடு ஒப்பிடல் என்பவை தவிர, முத்தப் பருவத்தோடு தொடர்பான வேறு செய்திகள் ஏதும் பேசப்படவில்லை. ''முத்தம் தருக முத்தமே'', ''முத்தம் தருகவே'' என்பன போன்ற தொடர்களை ஈற்றில் மட்டும் பெற்றுப் பொதுச் செய்திகள் பேசுகின்ற பாடல்களும் காணப்படுகின்றன— அவை :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அகிலாண்ட. | — | 5 | முருகர். | — | 4 |
| பெருந்திரு. | — | 4 | அம்பல. | — | 4 |
| காந்தி. | — | 5 | மங்கள. | — | 2 |
| திருவெண். | — | 3 | சேக்கிழார். | — | 5 |

முத்தப்பருவப் பாடல்கள் சராசரியாக 60% பொருளியைபு பெற்றவையாகக் காணப்படுகின்றன.

## 3. 7. 3. 3. 4. 5 அடிதோறும் அமைவன

பாட்டுடைத் தலைவியை முன்னிலைப் படுத்தி அழைத்து, அடிதோறும் 'முத்தம் தருக முத்தமே' என அமைகின்ற பாடலமைப்பும் காணப்படுகின்றது. அகிலாண்ட., விலும் மங்கள. விலும் அமைந்துள்ள முத்தப்பருவ இறுதிப் பாடல்கள் இவ்வமைப்பைப் பெற்றுள்ளன.

''சிரபுரச்சந் ததிதழைக்க முலைகொடுத்த
    தலைவி முத்தந் தருகவே
திருமகட்குங் கலைமகட்கு மெழில்சிறக்கு
    மிறைவி முத்தந் தருகவே
தரணிமுற்றுந் தனிதழைக்க நனிபுரக்கும்
    அமலை முத்தந் தருகவே
சடைமுடித் தும்பியை விருப்பமுடன் உயிர்த்த
    விமலை முத்தந் தருகவே''[36]

என அமைகின்ற இடத்து இறுதியில் அடிதோறும் முத்தம் வேண்டும் அமைப்பினைக் காணலாம்.



## 3. 7. 3. 3. 5 வாரானைப் பருவம்

### 3. 7. 3. 3. 5. 1 வாரானை—விளக்கம்

குழந்தை நடக்கத் தொடங்கும் பருவத்தில் 'வருக, வருக' என அழைத்தலே வாரானைப் பருவம் அல்லது வருகைப் பருவம் எனப்படுகின்றது.

இவ்வருகைப் பருவத்தில் தளர் நடையிடும் குழந்தையின் பாதச் சிறப்பும், அடியெடுத்து வைத்து நடக்கின்ற பொழுது ஒலிக்கின்ற அணிகலச் சிறப்பும், வருகைச் சிறப்பும் பேசப்படுகின்றன. மீனாட்சிசுந்தரனார் நூல்களிலும் வருகைப் பருவப் பாடல்கள் இத்தகு சிறப்பு நிலைகளைப் பெற்று விளங்குகின்றன.

### 3.7.3.3.5.2 பாதச் சிறப்பு

முத்தம் தரும் வாய்ச் சிறப்பு முத்தப் பருவத்தில் பேசப்படுவது போல, நடந்துவரும் கால் சிறப்பு வருகைப் பருவத்தில் இடம் பெறுகிறது. முருகர். தவிரப் பிற எழு நூல்களிலும் இப்பாதச் சிறப்பு அமைந்துள்ளது. முருகனின் பொதுவான சிறப்புக்கள் மிகுதியாகப் பேசப்பட்டுள்ளமையின், பாதச் சிறப்புக்கு ஆசிரியர் முக்கியத்துவம் தரவில்லை போலும்.

காந்தி.யில் இறைவியின் பாதச் சிறப்பு அழகிய வருணனையாக அமைகின்றது, 'பாதத்தின் மேல்பகுதி, பிறை போன்று வளைந்த உகிர்க்கண் தோன்றும் வெண்மை ஒளி பெருகுவதால் கலைமகள் உறையும் வெண்டாமரை போலவும், அடிபெயர்க்குந் தொறும் சிவந்து காணப்படும் கீழ்ப்பகுதி, திருமகள் உறையும் செந்தாமரை போலவும் விளக்கமுற, அதுகண்டு எம்கண் களிகொள்ளுமாறு கோழிநகர் வாழும் மயிலே! வருகவே'[87] என அமையும் பாடலில் காந்திமதியம்மையின் பாதம் வெண்டாமரை போலவும், செந்தாமரை போலவும் விளங்கும் தன்மை புலப்படுத்தப் படுகின்றது.

சேக்கிழார். இல் மீனாட்சிசுந்தரனார், 'கன்னல் படுமுத்தையும், பாக்கு மரங்கள், மருப்பு, செஞ்சாலி, கதலி எனுமிவற்றில் தோன்றிய முத்துக்களையும், பாலாற்று அலைக்கரங்கள் அடித்துக் கொண்டுவரும் மணிகளையும் உழவர்கள் வாரிக் கொண்டுவந்து முற்றத்தில் விரித்து உலர்த்த, அதனைக் கண்டு மோகமுற்று ஓடியாடி, முகந்து, இடறி, எற்றி விளையாடும் சிறு முண்டகத்தாள் பெயர்த்து வருக'[88] எனச் சேக்கிழாரை அழைக்கிறார். இங்கு சேக்கிழாரின் வேளாண்குலச் செல்வச் செழுமை அவர்தம் பாதச்

## 3.7.3.3.5.3 ஒலிக்கும் அணிகலச் சிறப்பு

குழந்தை தளர்நடையிட்டு வரும்பொழுது அது அணிந்துள்ள அணிகலன்கள் ஒலிப்பது ஓர் அழகுணர்வை ஊட்ட வல்லது. அவ் வணிகலச் சிறப்பும், ஒலியும் வருகைப் பருவத்தில் பேசப்படுதலைக் காணலாம்.

மீனாட்சிசுந்தரனாரின் பிள்ளைத்தமிழ் நூல்களில் இரண்டு தவிர (பெருந்திரு. அம்பல.) ஏனைய ஆறு நூல்களிலும் இவ் வணிகலச் சிறப்பு இடம்பெறுகிறது.

'நுதலில் பட்டமும், சுட்டியும் ஒளிவிடக், குழலில் சவித்த செம்மணியாலாய அணிகலன் பொலிவோடு விளங்க, வள்ளைச் செவிக்கண் அமர்ந்த தோடும், தோளை வருடும் குதம்பையும், மார்பிலே மணிமுத்தாரமும் வெண்ணிலவு போல ஒளிவீசித் திகழ இருகைவளை கலிப்பச், சிலம்புகள் கலின் எனப் புலம்ப, நின் வெற்றி கொள் தளிரடி பெயர்த்து வருக'[39] என்று திருவெண்ணீற்று மையை அழைக்கிறார். இங்கு அணிகல ஓசையோடு, ஒளிச்சிறப்பும் பேசப்படுதல் நோக்கத்தக்கது.

முருகர். இல் முருகன் நடக்கும்பொழுது ஒளிவிடும் அணிகலன் களைக் கூறுமிடத்து நெற்றிப்பட்டம், சுட்டி, மணிக்குழை, சிலம்பு, கிண்கிணி என்பவற்றோடு ஐம்படை, மொய்ம்படை, வாகுவலயம், கைக்கடகம், பருஉமணித் தண்டை, சதங்கை என்பனவும் பாராட் டப்படுகின்றன[40] இங்கு ஆண் குழந்தைக்கு உரிய அணிகலன்கள் அறிந்து கூறப்பட்டமை நோக்கத்தக்கது.

## 3. 7. 3. 3. 5. 4 வருகைச் சிறப்பு

'குழந்தை தளர்நடை காண்டல் இனிது[41]' என்பர். தெய்வக் குழந்தையின் நடை இன்னும் தெய்வீகத் தன்மையோடு சிறப்பிக்கப் படுகின்றது. இச்சிறப்பினை மூன்று நூல்கள்(அகிலாண்ட., காந்தி., சேக்கிழார்.) தவிர ஏனைய பிள்ளைத்தமிழ் நூல்களில் காணலாம்.

'திருவெண்ணீற்றுமை தம் மெல்லடி பெயர்த்து நடக்க, அவளடியைத் தொடர்ந்து இறைவனின் சடைமுடி தேடி முன் கண் டறியாத வெள்ளோதிமமும், ஓலமிட்டுப் பெருகிவரும் வேதங்களும், வெண்டாமரைக் கலைமகளும், செந்தாமரைத் திருமகளும், வானகத்து அயிராணியும், அரம்பையர் மகளிரும் கைகுவித்துத் தொடர, மெய்ஞ்ஞான யோகராம் சிவபிரானின் கண்களும் தொடர, இடர் தீர்ந்து எங்கள் மனமுந் தொடர்கின்றது'[42] என அமைந்த பாடல் தெய்வக் குழந்தையாம் அம்மையைத் தொடர்ந்து வரு வோரைக் கூறி அவள் வரவினைச் சிறப்பிக்கின்றது.

இதேபோன்று, '' சீர் கொண்ட மறைமுழுமையுந் தொடர்ந்து ஓலிடச் சிவபிரான்மகன் வருகவே, [43] என முருகனின் வருகையும் சிறப்பிக்கப்படுகின்றது.

### 3. 7. 3. 3. 5. 5 ஈற்றடியில் அமைவன

வாரானைப் பருவ நிகழ்ச்சிக்குரிய பொருட் தொடர்பின்றி இறுதி வரிமட்டும் 'வருகவே' என்றும், 'வருக வருகவே' என்றும் முடிகின்ற பாடல்களும் காணப் படுகின்றன. இவ்வாறு அமைந்தவை

| நூல் | | பாடல்எண்ணிக்கை | நூல் | | பாடல்எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| அகிலாண்ட. | — | 6 | முருகர். | — | 9 |
| பெருந்திரு. | — | 5 | அம்பல. | — | 3 |
| காந்தி. | — | 5 | மங்கள. | — | 4 |
| திருவெண். | — | 7 | சேக்கிழார். | — | 7 |

வருகைப் பருவத்தில் 58% பொருட் தொடர்புடைய பாடல்கள் அமைந்துள்ளன.

### 3. 7. 3. 3. 5. 6 அடிதோறும் அமைதல்

ஈற்றடி மட்டும் அமையாது, அடிதோறும் பலமுறை 'வருக' என அமைந்துள்ள பாடல்களும் காணப்படுகின்றன. காந்தி, அம்பல., சேக்கிழார். ஆகியவற்றின் வருகைப் பருவ இறுதிப் பாடல்கள் இவ்வமைப்புப் பெற்று விளங்குகின்றன.

> ''முத்தன் வருக யாவருக்கு முன்னோன் வருக முப்புவன
> முதல்வன் வருக முன்னாரை முன்னான் வருக'' [44]

என ஓரடியில் நான்குமுறை வருக என அழைத்தலை அம்பல.வில் காண்கிறோம்.

### 3.7.3.3.6. அம்புலிப் பருவம்

'அம்புலி புலவர்க்குப் புலி' என்று அறிஞர் கூறுவர். பிள்ளைத் தமிழ் பாடும் புலவர்களின் புலமைத் திறனை வெளிப் படுத்தும் நல்வாய்ப்பாக அமைவது இப்பருவம்.

3.7.3.3.6.1 குழந்தைக்கு உணவூட்டும் தாய் நிலவினைப் பார்த்து 'நிலாநிலா ஓடி வா' என அழைக்கின்ற மரபினை நாம் இன்றும் காணலாம். திங்களை விரல் விரி பயிற்றும் சங்கத் தலைவி பற்றி முன்னரே குறிப்பிடப்பட்டது (இதே இயல் 3 2.1).

3.7.3.3.6.2 இந்நிலையில், இப்பருவம் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையோடு அம்புலியை விளையாட அழைத்தலாக அமைகின்றது. அப்படி அழைக்கும் பொழுது சாம, பேத, தான, தண்டம் என்னும் நான்கு உத்திகளைப் புலவர்கள் கையாண்டுள்ளனர்.

இவ்வுத்தியமைத்துப் பாடவேண்டும் என்பதை மரபாக்கிக் கொண்டமையின், அம்புலிப் பருவப் பாடல்கள் அனைத்தும் பருவப் பெயருக்கேற்ற அழுத்தமான பொருள் தொடர்போடு விளங்குகின்றன. வேறு பருவங்களைப் போலல்லாது அம்புலிப் பருவத்தில் பேசப்படும் செய்திகள் அனைத்துமே நிலவையும், குழந்தையையும் இணைப்பதாகவே அமைகின்றன,

3.7.3.3.6.2.1 சாமம் என்பது நிலவிற்கும், பாடப்படும் குழந்தைக்கும் உள்ள ஒப்புமைகளை முறைப்படுத்திக் கூறுவது, பேதம் என்பது இருவர்க்கும் உள்ள வேறுபாடுகள் காட்டுவது; தானம் என்பது 'நிலவே நீ வந்தால் இவன் இன்னின்ன தருவான்' எனப் பாடுதல்; தண்டம் என்பது 'நீ வராவிட்டால் இன்ன தண்டனை பெறுவாய்' என அச்சுறுத்தல்.

மீனாட்சிசுந்தரனார் தம் பாடல்களில் இவ்வுத்திகளை நுட்பமாகக் கையாண்டுள்ளார்.

'பெருங்கடலில் உதித்ததாலும், தக்கனுக்கு உறவாகிப் பின் பகைமை கொண்டதாலும், செந்தாமரைக் கோயில் சாய முகவொளி காட்டலானும், இமயமலையில் தவழ்தலாலும், இறைவனின் செஞ்சடை மேவிய கங்கை மகள் வெருவி உழக்கலானும், பாண்டியர் குலம் புகழ வருதலாலும் தனக்கு ஒப்பெனக் கருதிக் குலவி விளையாட எம் இறைவி அழைத்தனள். எனவே அம்புலீ! நீ வருக'[45] என இறைவியோடு சமநிலைப் படுத்தி அம்புலியை அழைக்கிறார்.

இங்கு தோன்றிய இடத்தாலும், வாழ்கின்ற இடத்தாலும், கொண்ட உறவாலும், பிறவாலும் உமையம்மையும் அம்புலியும் சமமாகக் காட்டப்படுகின்றனர். காந்தி. யில் காந்திமதி என்ற அம்பிகையின் பெயரையே நிலவோடு சிலேடையாக்கி அமைத்திருப்பதும் நோக்கத்தக்கது[46].

3.7.3.3.6.2.2. காந்தி. யில் பேதம் என்ற உத்தி சிறப்புறக் கையாளப்படுகின்றது. 'முயலகன் என்ற நோயை வளர்ப்பவன் நீ; இவளோ பரசமய சிங்கத்தை வளர்ப்பவள். சிறுமானை உடையவன் நீ இவளோ உயிர்க்குயிராய்த் திகழும் பெருமானையே உடையவள்

களங்கன் நீ: இவளோ எக்களங்கமும் சாராதவள். இவ்வளவு வேறுபாடிருந்தும் அவற்றை மறந்து உன்னை விளையாடவா வென்று அம்மை அழைத்திட நீ என்ன தவம் செய்தனையோ'[47] என இறைவிக்கும் சந்திரனுக்கும் உள்ள வேறுபாடுகள் அழகுறக் காட்டப் படுகின்றன.

3.7.3.3.6.2.3 அம்பல.வில் தானம் என்ற உத்திகையாளப் பட்டுள்ளமை சிறப்புடையது. 'செய்யநம் குருநாதன் உன்னை ஆடவா என்றழைத்த உடனே, கைகுவித்து, 'அடியேன் வந்தனன்; திருவுளம் யாதோ எனக் கேட்டு வந்து அடிபணிந்து நின்றால், அவன் கருணை பூத்துத் தன் நளினக் கைகளால் திருநீறு அள்ளி உன் நெற்றியிலிடும் பேற்றினைப் பெறுவாய். அதனால் உன் கயரோக மும், பழியும் மாறி உயர் மேன்மை பெறுகுவை. முன்போல் முடியில் வைத்தாலும் வைப்பான். எனவே! திருவாவடுதுறைச் சித்தாந்த சைவனுடன் அம்புலி ஆடவாவே'[48] என அம்பலவாண தேசிகரை வணங்கி விபூதி பெற்று நிலவு அடையும் பயனைக்குறிப்பிடுகின்றார்.

3.7.3.3.6.2.4 தண்டம் என்ற பகுதியில் அச்சுறுத்தல் அமைகின்றது. முருகர். இல், 'உன்னையும் ஒருபொருட்டாக நினைத்து எம்பிரான் அழைக்கவும், நீ தாமதித்தது என்ன? பகைவர்தம் பொருப்பைக் கலக்கிய வேல் இன்னும் அவன் கையிலே தான் உள்ளது. அதன் வலிமையை நீயாக அறியாவிட்டாலும் விண்ணகம் முழுமையும் அறிந்து கரைவது உன் செவியில் விழ வில்லையோ? அவ்வேலுக்கு எதிர்ப்படின் நீ ஒரு பொருளாவையோ? பரம குருசாமி இவன் முனியின் உன்னை ஆதரிப்பார் யார்? எனவே விடைக்கழி முருகனுடன் விளையாட விரைந்து வா அம்புலீ!'[49] என அச்சுறுத்தி அழைக்கும் பகுதி அமைகின்றது.

இவ்வாறு மீனாட்சிசுந்தரனாரின் எல்லாப் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் அம்புலிப் பருவப் பாடல்கள் முழுமையும் அழுத்தமான பொருட் தொடர்புடையனவாக அமைந்துள்ளன. பாடுதற்கரிய பருவம் சிறப்பாகப் பாடப் பெற்றுமை போற்றுதற்குரியது.

### 3.7.3.3.7 மகளிர்க்கு மட்டும் உரியவை

மேற்கூறிய ஏழு பருவங்களும் ஆடவர்க்கும் மகளிர்க்கும் பொதுவாய் அமைவன. மகளிர்க்கு மட்டும் உரிய விளையாட்டுக்கள், பெண்பால் பிள்ளைத் தமிழில் பருவங்களாக இடம் பெறுதல் மரபு. மீனாட்சிசுந்தரனாரின் பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களில் அம்மானை, நீராடல், ஊசல் எனும் மூன்றும் அமைந்துள்ளன.

## 3. 7. 3. 3. 7. 1 அம்மானைப் பருவம்

### 3. 7. 3. 3. 7. 1. 1 அம்மானை—விளக்கம்

அம்மானை என்பது அழகிய உருண்டையான காய்களைக் கொண்டு மேலெறிந்து, பிடித்து விளையாடுவது ஆகும். கிராமப் புறங்களில் இன்றும் உருண்டையான கற்களைக் கொண்டு சிறுமியர் விளையாடுவதைக் காணலாம்.

இலக்கியப் புனைவுகளுக்கேற்ப, இக்காய்கள் பலநிற மணி களால் ஆகியவையாக இலக்கியங்கள் படைத்துக் காட்டுகின்றன. பல நிறக் காய்கள் கொண்டு ஆடப்பெறும் அம்மானை புலவரின் கற்பனைத் திறனுக்கேற்ப உவமிக்கப்படுதலையும் காணலாம்.

### 3. 7. 3. 3. 7. 1. 2 அம்மானைக் காய்களின் சிறப்பு

மீனாட்சிசுந்தரனாரின் பாடல்களில் எல்லாவிதமான அம்மானைக் காய்களும் குறிக்கப்படுகின்றன.

அகிலாண்ட. வில் முத்து, நீலம், பவளம், பொன், மாணிக்கம் என்பனவும், பெருந்திரு. வில் முத்து, பவளம், பொன், மாணிக்கம் மரகதம் என்பனவும், காந்தி. யில் முத்து, நீலம், பொன், மரகதம் என்பனவும், திருவெண், இல் முத்து, நீலம், பொன் என்பனவும் மங்கள. வில் முத்து, நீலம், பவளம், வயிரம் என்பனவும் ஆகிய அம்மானைக் காய்கள் குறிப்பிடப்படுகின்றன. ஒரே நேரத்தில் பலநிறக் காய்களைக் கொண்டு ஆடுதலைப் பெருந்திரு. விலும். மங்கள. விலும் காணமுடிகின்றது.

எல்லாப் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் முத்து அம்மானை இடம் பெறுவது குறிப்பிடத் தக்கது.

'ஒளி தங்கும் தன் திருநுதலுக்குப் பகையாகி, மாற்றவளாகிய கங்கையோடும் கூடி இறைவன் முடியிலே அமர்ந்த பிறையைக் கூடப் பொறுத்துக் கொண்டேன்; ஆனால் என் தோழியராகிய கலைமகள், திருமகள் இருவரும் உறைகின்ற இருக்கையை அழித்த தன்மையைப் பொறேன், என்று நிலவினைக் கைகளில் பற்றிப் பிசைந்து, பல உருண்டைகளாக்கி மேலே விட்டெறிதல் போலக் கடலிலே தோன்றி, முல்லை மொட்டுக்களைப் போல் ஒளிவீசும் முத்துக்களாலான அம்மானைகளை வீசி அம்மானை ஆடியருள்க[69] என மங்களாம்பிகையை அம்மானை ஆட வேண்டுகிறார், ஆடுவது முத்தம்மானை என்ற நிலையில் இறைவியோடு சேர்த்து இயை புடைய உவமையாக்கிக் காட்டும் நயம் போற்றுதற்குரியது.

இதைப் போன்றே பிற மணிகளாலான அம்மானைக் காய்களும் அழகிய கற்பனை வழியாகப் பருவத்தோடு இயைபுபடுத்தப்படுகின்றன

## 3.7.3,3.7.1.3 பல நிறக் காய்கள் கொண்டாடல்

ஒரே நேரத்தில் பல்வேறு மணிகளால் ஆன காய்களைக் கொண்டு ஆடுதலும் உண்டு.

'நின் கருணை பொழி திருமுகத்துக் கொப்பு என்பதால் கலைமதித் திரளையும், கொங்கைக்கு ஒப்பானமையின் செந்தாமரை மொட்டுக்களையும், மதர்விழிக்கு ஒப்பானமையின் கருவண்டுகளையும் பிடித்து மேலுற வீசி, மீண்டும் பிடித்து எறிதல் போல, வயிரம், பதுமராகம், நீலம் ஆகியவற்றால் ஆன காய்களைக் கொண்டு அம்மானை ஆடுக' [51]எனப் பெருந்திருப் பிராட்டியை வேண்டுகிறார். இங்கு மூன்று நிறக் காய்களுக்கும் ஏற்பத்தற்குறிப்பேற்ற அணி அமைந்திருப்பது நோக்கத்தக்கது.

## 3.7.3.3.7.1.4 அணிகலச் சிறப்பு

அம்மானை ஆடும் பொழுது ஆடும் அணிகலச் சிறப்பு அகிலாண்ட.வில் (அம்மானை. 5) மட்டும் பேசப்படுகிறது.

## 3. 7. 3. 3. 7. 1. 5 ஈற்றடியில் அமைவன

மேல் காட்டியவை போலல்லாமல், பொருட் தொடர்பின்றி அமைந்து ஈற்றடி மட்டும் 'ஆடுக பொன்னம்மனையே' என்றும், அம்மானை ஆடியருளே' என்றும், 'ஆடுக அம்மனையே' என்றும் முடிவனவும் உண்டு. அவ்வாறு அமைவன :

| நூல் | | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| அகிலாண்ட. | — | 5 |
| பெருந்திரு. | — | 2 |
| காந்தி. | — | 5 |
| திருவெண். | — | 7 |
| மங்கள. | — | 2 |

அம்மானைப் பருவத்தில் 58% இயைபுடைய பாடல்கள் காணப்படுகின்றன.

## 3. 7. 3. 3. 7. 2 நீராடல் பருவம்

3.7.3.3.7.2.1 நீராடல் என்பது பெண் குழந்தையை 'வெள்ள நீரில் ஆடியருள்க' என வேண்டுவதாக அமைகின்றது. இவ்வாறு பாடும்

பொழுது சிறப்பாகப் பேசப்படுவன நீராடலின் சிறப்பும், நீராடும் நதியின் சிறப்புமேயாகும்.

## 3. 7. 3. 3. 7. 2. 2 நீராடல் சிறப்பு

பாட்டுடைத் தலைவியாகிய இறைவி நீராடும் சிறப்பு அகிலாண்ட., காந்தி, மங்கள ஆகிய நூல்களில் காணப்படுகின்றது.

'நீராடும் உன்படை விழிகண்டு, மருண்டு கயல் பதுங்கி ஒழிய, அழகிய கழுத்தினைக்கண்டு வெட்கிய பணிலம் முரன்றொழிய, ஒரு பிடி இடையும் குழைக் காதும் கண்டு கொள்ளைக் கொடி மென் வள்ளைக் கொடியோடு கூடி வணங்கச், சென்னிப் பொன்னித் துறையில் நீராடுக'[52] என இறைவியை நீராட அழைக்கிறார். இங்கு அவள்தன் நீராட்டச் சிறப்பாலும் அழகிய தோற்றத்தாலும் வெட்கிய இயற்கைப் பொருள்கள் நயமுறக் காட்டப்படுகின்றன.

## 3.7.3.3.7.2.3 திருநதிச் சிறப்பு

எத்தலத்து இறைவியைப் பாடுகின்றாரோ அத்தலத் திருநதியையும் நீராடல் பருவத்தில் சிறப்பித்துப் பாடுகிறார். எல்லாப் பெண்பால் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் நீராட்டத்திற்குரிய இத்திருநதிச் சிறப்புப் பேசப்படுகின்றது.

'சிறப்புக்குரிய நீ, நீராட வருகின்றாய் என்பதை அறிந்து, குறிஞ்சிநிலமணி, கனகம், சந்தனம், அகில் முதலியன பரப்பி, முல்லைக் காட்டு நறுங்கனிகள் படைத்து, மணமிகு மலர்களைக் குவித்துப், பாலையில் தோன்றிய முருங்கை மென்பூக்களைப் பொரிகளைப் போலத் தூவி, மருதத்தினின்று பெற்ற கோகநகத் தீபம் ஏற்றித், தென்னையின் செழுங்காய்களைப் பூரண குடங்களாக நிறுவித் தெய்வப் புனல் ஆரவாரிக்கின்றது. அதனால் வளஞ்சால் குடந்தை யுமையே பொன்னிப் புதுநீர் ஆடுகவே'[53] என்று மங்களாம்பிகையை நீராட அழைக்கின்றார். இங்கு பொன்னி நதி தன் வேகத்தில் அடித்து வரும் பொருட்கள், மங்கலப் பொருட்களை நிரப்பி இறைவியை வரவேற்பது போல அமைத்துக் காட்டுவது சிறப்புடையது.

''... கலைவல்லோர் செந்
நாவிரி பாவிரி பூவிரி காவிரி

. 3. 3. 7. 2. 4 ஈற்றடியில் அமைவன

நீராடல் நிகழ்ச்சிக்குத் தொடர்பின்றிப் பொது செய்திகளைப் இறுதியில் ''பொன்னி நீராடியருளே'' என்றோ, ''காவிரி ஆகவே'' என்றோ அமைகின்ற பாடல்களும் உண்டு. அத்தகு ப்கள்:

| | | |
|---|---|---|
| அகிலாண்ட. | — | 7 |
| பெருந்திரு. | — | 5 |
| காந்தி. | — | 5 |
| திருவெண். | — | 3 |
| மங்கள. | — | 3 |

நீராடல் பருவத்தில் 54% பொருட் தொடர்புடைய பாடல்களைக் முடிகின்றது.

## 3. 3. 7. 3 பொன்னூசல் பருவம்

3. 3. 7. 3. 1. பாட்டுடைத் தலைவியை ஊஞ்சலாடுக என ப்பதே இப்பருவத்தின் பொருளமைதி. அவ்வாறு ஆடும் சலின் சிறப்பும், ஊஞ்சலாடுதல் சிறப்பும், பருவத் தலைப்பிற்குத் ர்புடைய செய்திகளாக அமைகின்றன.

## 3. 3. 7. 3. 2. ஊசல் சிறப்பு

எல்லாப் பிள்ளைத்தமிழிலும் ஊசல் சிறப்புப் பேசப்பட்டுள்ளது. ந்திரு.வில் அம்மையாடும் ஊஞ்சல் மிகு சிறப்போடு வருணிக்கப் கிறது.

'மின்பூத்த வெள்ளிப் பிறங்கலை இரண்டு கூறுகளாக்கியது பத் திரண்ட இரு வயிரத் தூண்களை நிறுவி, பொன் வெற்பைத் டி நீட்டி அத்தூண்களுக்கு மேலிட்டது போலப் பவளவிட்டம் ↑. அம்மலையில் உலவும் நிலவின் அமுத கிரணங்களைப் போல் டும் முத்துவடம் கட்டி, செம்மணிப் பலகைமாட்டி, அப்பலகை செந்தாமரைத் திருவென வீற்றிருந்து, திருமுகம் கருணை தர அம்மை நீ பொன்னூசல் ஆடுக'[55] எனப் பெருந்திருப் டி ஆடும் ஊஞ்சல் வருணனை அமைகிறது.

## . 3. 3. 7. 3. 3 ஊசலாடல் சிறப்பு

ஊசலாடக் கண்ட இறைவனின் மனமும் ஊசலாடுகிறது'[56] என அகிலாண்ட.வில் இறைவியின் ஊசலாட்டச் சிறப்புக் குறிக்கப் படுகின்றது.

திருவெண்.ணில் 'இறைவி ஊசலாடுந் தொறும் தன் தாமரைத் தாளினால் பிண்டியை உதைத்தாட, அவள் உதைக்குந் தொறும் தளிர்த்து மலர்கின்றது அம்மரம்'[57] என அமைத்து அவள் பாதத்தைச் சிறப்பிக்கின்றார்.

## 3. 7. 3. 3. 7. 3. 4 ஈற்றடியில் அமைவன

இவை தவிர, ஊசலாடலுக்குப் பொருளால் இயைபின்றி, இறுதி வரி மட்டும் ''பொன்னூ சலாடி யருளே'' என முடிவனவும் உண்டு. அவை:

| நூல் | | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| அகிலாண்ட. | — | 6 |
| பெருந்திரு. | — | 6 |
| காந்தி. | — | 6 |
| திருவெண். | — | 5 |
| மங்கள. | — | 4 |

ஊசல் பருவத்தில் பொருட் தொடர்புடைய பாடல்கள் 46% தான் அமைந்துள்ளன.

## 3. 7. 3. 3. 8 ஆடவர்க்கு மட்டும் உரியன

காப்பு முதல் அம்புலிப் பருவம் வரையுள்ள ஏழு பருவங்கள் தவிர ஏனைய இறுதி மூன்றும் பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குத் தனியே அமைவதுபோல, ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்கும் வேறுபடுகின்றன.

ஆண்பாற் பிள்ளைத்தமிழின் இறுதி மூன்று பருவங்களாவன சிற்றில் சிதைத்தல், சிறுபறை முழக்கல், சிறுதேர் உருட்டல் என அமைகின்றன.

## 3. 7. 3. 3. 8. 1 சிற்றில் பருவம்

3. 7. 3. 3. 8. 1. 1 இது சிற்றில் சிதைத்தல் எனப்படும். இளம் பருவச் சிறுமியர் தெருவில் மணலால் வீடுகட்டி விளையாடுவர். ஆண் குழந்தைகள் குறும்பாகச் சென்று அம்மணல் வீடுகளைச் சிதைத்துவிட்டு ஓடுவர். அதுபோது, அச்சிறுமியர் 'எம் சிற்றிலைச் சிதையாதே' என வேண்டுவதே சிற்றில் பருவப் பொருளாகும்.

சிற்றில் சிதைக்கும் குழந்தையின் பாதச்சிறப்புக் கூறி, இத்தகு பாதம் புழுதிபடியும் எனவே சிற்றில் சிதையேல் என வேண்டலும், தகுமோ என முறையிடலும், பொறுக்கோம் எனக் கோபித்தலும் அச்சிறுமியரின் உள்ள உணர்வைக் காட்டுவனவாக அமைகின்றன. இவையிவற்றைச் சிதை எனவும், இவை சிதைத்தற்குரியன அன்று எனவும் பகுத்துக் கூறும் பண்பினையும் இப்பருவப் பாடல்களில் காணலாம்.

## 3. 7. 3. 3. 8. 1. 2 பாதச் சிறப்பு.

சிற்றில் சிதைக்கும் பாதச் சிறப்பு அம்பல. வில் கிடையாது. ஏனைய இரண்டு பிள்ளைத்தமிழிலும் காணலாம். சேக்கிழார். இல், 'பொருந்திய நிலத்தில் ஏரால் உழுதல் பொருத்தமாகும். பொருந்தா நிலத்தில் காலால் உழுதல் புகழோ! விதியோ! உன் அரிய திருவடியும் வருந்தும்; மண்டு புழுதி யடையும். நறுமலரில் தோயத் தக்க அவை, இது தோய்தல் வழக்கோ! உன் பெற்றோர் கண்டால் சகிப்பரோ'[58] எனச் சேக்கிழாரை நோக்கிச் சிறுமியர் கேட்பதாய் அமைகின்றது.

'மாமறைகட்கும், தேவர்கட்கும், மாதவர்க்கும், மற்றையர்க்கும் பற்றற்கரிய சிற்றடிகள், பொன்மா மணியும் வெண்முத்தும் போற்றி யாங்களாடிடத்துப் புழுதி பற்றற்கு எளியனவாய்ப் போந்தது, இறும்பூதோ? பிறிதோ?'[59] என முருகனைச் சிறுமியர் வினவு கின்றனர்.

இவ்விடங்களில் சிற்றில் சிதைக்கும் பாதத்தின் சிறப்புக்கும், மென்மைக்கும், அச்செயல் ஒவ்வாது என்பது குறிப்பிடப்படுகின்றது.

## 3. 7. 3. . . 1. 3 சிறுமியர் உள்ள நிலை

கெஞ்சியும், விஞ்சியும் கோபித்தும், அறிவுரை கூறியும் சிற்றில் சிதையாதே எனவேண்டும் சிறுமியர் நிலையினைச் சிற்றில் பருவத்தில் காணலாம்.

'உலகவர் போற்றும் குரவர் பெருமான்நீ என்றால் நின்னைக் காண்டொறும் வணங்குகின்றோம். நீ சொல்வனவற்றையெல்லாம் விரும்பிக் கேட்போம். அதற்காக, நாங்கள் அமைத்த இவ்வீட்டினை நீ அழித்தால் பொறுத்துக் கொள்ள வேண்டிய விதி எங்களுக் கில்லை'[60] என்று அம்பலவாண தேசிகராகிய குழந்தையிடம் சிறு மியர் கூறுவதாக அமைவது பணிவோடு கூடிய அச்சுறுத்தலாகவும் அமைகிறது,

3. 7. 3. 3. 8. 1. 4 இவை தவிர, இன்னும் சில சுவையான செய்திகளையும் சிற்றில் பருவம் தருகிறது.

'தந்தையின் தொழிலை நானும் செய்வேன் என எண்ணி எம் இல்லினை அழிக்காது, தாயின் தொழிலாம் காத்தல் தொழிலையும் கொஞ்சம் கற்றுக் கொள்'[61] என்றும்,

'சூரனை அழிக்கப் பிறந்தாயா அன்றி எம்சிற்றில் சிதைக்கப் பிறந்தாயா'[62] என்றும்.

''கையா றிரண்டு புரிந்ததுபோல்
காலா றிரண்டு செய்யாது
கருதி யிரண்டே செய்தனள்முற்
கடையேஞ் செய்த நல்வினையான்''[63]

என்றும் முருகனிடம் சிறுமியர் பேசும் பகுதிகள் முருகன் தொடர்பான புராணச் செய்திகளைச் சிற்றில் பருவத்தோடு இணைப்பனவாக அமைகின்றன.

அதேபோல, 'நீ சினம் கொண்டழிக்க இது மன்மதன் உடம்போ, முப்புரமோ. ஊழிப் புவனமோ அன்று; எளிய எமது சிற்றில்,'[64] என்றும்,

'தக்கனின் வேள்விச்சாலையன்று எம்சிற்றில்'[65] என்றும் அம்பலவாணர் அழித்தற்குரியவை எவை எவை எனக் கூறப்படுகின்றன.

சேக்கிழார். இல் சமய உணர்வோடு சிற்றில் பருவச் செய்தி காணப்படுவது குறிப்பிடத்தக்கது. 'நாங்கள் சிற்றிலிழைத்த மண்ணைத் துளைந்து, கலைத்து விளையாடுதற்குப் பதிலாக, வைணவர்தம் நெற்றியிலணியும் மண் தோய்ந்து கலைத்தால், அவர்கள் திருநீறு இட்டு உய்தியடைவர், [66] எனச் சேக்கிழாரை வேண்டுவதாக அமைந்துள்ளது. இது மீனாட்சிசுந்தரனார், வைணவர்களையும் சைவர்களாக்க வேண்டும் என்ற பேரவாக் கொண்டிருந்தமையினைக் காட்டுகின்றது.

3. 7. 3. 3. 8. 1. 5 இவ்வாறு, அம்புலிப் பருவம் போலவே முழுமையான, அழுத்தமான பொருட் தொடர்புடைய பருவமாகச் சிற்றில் பருவப் பாடல்கள் விளங்குகின்றன. எல்லாப் பாடல்களும் ஏதாவது ஒருநிலையில் சிற்றில் சிதைத்தலாகிய செய்தியோடு தொடர்பு கொண்டே அமைகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. சிற்றில் சிதைத்தல் என்னும் செய்தியோடு புராணச் செய்திகள் மிகுதியாக இணைக்கப்பட்டுள்ளன.

## 3. 7. 3. 3. 8. 2 சிறுபறைப் பருவம்

3. 7. 3. 3, 8. 2. 1 இது 'சிறுபறை முழக்கல், எனப்படும். குழந்தை தன் கையிலுள்ள சிறுபறையினை முழக்கியருளுமாறு வேண்டுதலே இப்பருவப் பொருண்மை.

மீனாட்சிசுந்தரனார் தம் நூல்களில் சிறுபறைச் சிறப்புக் கூறும் பகுதிகளும், பறைக்கு உவமையாக அமைவனவும் ஓரளவு பொருட் தொடர்புடையனவாக அமைந்துள்ளன.

## 3.7 3.3.8.2.2 பறை முழக்கல்

'எம்பிரானாகிய சிவபிரானின் ஒரு கையிலமைந்த தமருகத்தைப் பறை எனக் கொண்டு, அதை முழக்குதற்குக் குணிலாக, அவர் தலையில் இலங்கும் இளம்பிறையைக் கொண்டு, நெடும் புவனம் பலவும் நெஞ்சு துணுக்கென வெற்றி முழக்கம் நிகழ்த்தும் நிகழ்ச்சியனே! இச்சிறு பறையினையும் முழக்குக'[67] என முருகனைச் சிறுபறை முழக்க வேண்டுகிறார்.

இங்கு 'பறை முழக்கல் என்ற செயலைப் பண்டே செய்தவன் நீ; எனவே இச்சிறுபறை முழக்கல் உனக்கு எளிது' என்பதை உணர்த்துவது போலக் காட்சியை அமைத்துக் காட்டுகிறார்.

## 3.7.3.3.8.2.3 பறைக்கு உவமை

சேக்கிழார் முழக்கும் பறை யார்யாருக்கு எத்தகையது என்பதைக் கூறவந்த ஆசிரியர், 'இறைவனின் பொன்னடி வீழாதார்க்கும், வெண்ணீறு பூசாதார்க்கும், ஐந்தெழுத்து மந்திரத்தை எண்ணாத வீணர்க்கும், சிவமணம் கமழாத சிந்தாமணி முதலிய நூல்களுக்கும் நெய்தல்பறை முழக்கெனச் சிறுபறை முழக்குக'[68] என வேண்டுகிறார்.

நெய்தல் பறை என்பது பிணப்பறையாகும். பிற சமயம் சார்ந்தார்க்கும், பிறசமய நூல்களுக்கும் சேக்கிழார் முழக்கும் பறை பிணப்பறை ஆகட்டும் எனத் தம் சமய உணர்வைப் புலப் படுத்துகிறார்.

## 3. 7. 3. 3. 8. 2. 4 ஈற்றடியில் அமைவன

பறை முழக்கிற்குத் தொடர்பின்றிப் பாட்டுடைத் தலைவன் சிறப்பும், ஊர்ச் சிறப்பும் பேசி இறுதியடியில் 'சிறுபறை முழக்கியருளே!' எனமட்டும் அமைகின்ற பாடல்கள் பல உள்ளன. அவை:

| | | |
|---|---|---|
| முருகர். | — | 6 |
| அம்பல. | — | 5 |
| சேக்கிழார். | — | 7 |

சிறுபறைப்பருவத்தில் பொருட் தொடர்புடைய பாடல்கள் 40% அமைந்துள்ளன.

### 3. 7. 3. 3. 8. 3 சிறுதேர்ப் பருவம்

3. 7. 3. 3. 8. 3. 1. இது சிறுதேருருட்டல் எனப்படும். ஆண் குழந்தைக்கு மிகவும் விருப்பத்திற்குரியது தேருருட்டி விளையாடுதல் ஆகும். பாட்டுடைத் தலைவனைச் சிறுதேருருட்டி விளையாடுமாறு அழைத்தலே இப்பருவத்தின் பொருளமைதியாகும்.

இப்பருவப் பாடல்களில் தேர்ச் சிறப்பும், தேரோட்டச் சிறப்பும் பேசப்படுகின்றன. அம்பல. வில் மட்டும் தேர்ச் சிறப்பு இடம் பெற்றுள்ளது. தேரோட்டச் சிறப்பு மூன்று நூல்களிலும் காணப்படுகின்றது.

### 3. 7. 3. 3. 8. 3. 2. தேர்ச் சிறப்பு

'கானகத்தில் திரிந்துழன்றும், ஆய்ச்சியரிடம் கட்டுண்டும், மத்தால்மொத்துண்டும், அடைந்த வருத்தம் நீங்காது, ஆர்கலியின் நடுவில் இன்னும் கண்ணுறங்கும் திருமாலாகிய எருதின் மீது ஏறியும், அத்தோடமையாது அவன் உண்டுமிழ்தது மண்தேர் மீது ஏறியும் வந்த சிறுமை தீரும் வண்ணம், செம்பொன்னால் செய்து பல மணிகள் இழைத்திட்ட இச்சிறுதேர் உருட்டியருள்க'[69] எனப் பூமியைத் தேராக்கி ஊர்ந்த இறைவனுக்குப் பொன்தேர் அமைத்துக் கொடுக்கிறார் ஆசிரியர்.

### 3. 7. 3. 3. 8. 3. 3 தேரோட்டச் சிறப்பு

'சூரனைத் தடிதற்குத் திண்தேர் உருட்டிய இடைக்கழி முருகனே! சிறுதேர் உருட்டியருள்க'[70] எனவும், 'துலங்கும் இந் நகரில் முன்னர் உன் தேரோட்டத்திற்குத் தடையில்லை'[71] எனவும்,

'நீ சிறுதேருருட்ட உன் மன்னவனுக்குப் பெரும் புகழ் கிடைக்கும்'[72] எனவும் பாட்டுடைத் தலைவர்களின் தேர் ஓட்டச் சிறப்புப் பாராட்டப்படுகின்றது.

### 3. 7. 3. 3. 8. 4 ஈற்றடியில் அமைவன

பாட்டுடைத் தலைவர்களின் பொதுச் சிறப்புக்களை மட்டும் கூறி, இறுதி வரியில் 'சிறுதேருருட்டி யருளே' என அமைகின்ற பாடல்களும் காணப்படுகின்றன. அவை:

| நூல் | | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| முருகர். | — | 9 |
| அம்பல. | — | 4 |
| சேக்கிழார். | — | 8 |

30% மட்டுமே சிறுதேர்ப் பருவத்தில் பொருட் தொடர்புடைய பாடல்கள் அமைந்துள்ளன.

### 3. 7. 4 வாழ்த்துப் பாடல்

மீனாட்சிசுந்தரனார் பெருந்திரு., அம்பல., சேக்கிழார். ஆகிய மூன்று பிள்ளைத்தமிழ் நூல்களையும் வணக்கத்தில் தொடங்கி வாழ்த்தில் முடித்தமை குறிப்பிடத் தக்கது. மூன்று பிள்ளைத்தமிழ் நூல்களின் இறுதிப் பாடல்கள் வாழ்த்துப் பாடல்கள் போல அமைந்துள்ளன. இவ்வமைப்பினைச் சிவ ஞான முனிவரின் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழினின்றும் பெற்றார் போலும்.

### 3.7.5 ஈற்றடி அமைப்பு

3. 7. 5. 1 பிள்ளைத்தமிழ் நூல்களில் ஒவ்வொரு பருவத்தில் அமைந்துள்ள பாடல்களின் ஈற்றடிகள் ஒன்றுபோல அமைவதைக் காணலாம். இவ்வமைப்பு மீனாட்சிசுந்தரனார் பாடல்களிலும் அமைந்துள்ளது.

அகிலாண்ட. வில் செங்கீரைப் பருவத்தில்,

''தென்காவை யம்பதி செழிக்கவரு
மென்னம்மை செங்கீரையாடி யருளே''

என்ற இறுதிவரி முதல் ஐந்து பாடல்களிலும்,

''அத்தி வனத்தம ரத்த ரிடத்தவ
ளாடுக செங்கீரை''

என்ற வரி 6, 7, 8-வது பாடல்களிலும்,

''சினமுடை மதகரி வனம்வரு மொருமயில்
செங்கோ செங்கீரை''

என்ற வரி 9—வது பாடலிலும்,

''சித்திய ளித்திடு மத்திவ னத்தவள்
செங்கோ செங்கீரை''

என்ற வரி 10-வது பாடலிலும் இறுதி வரிகளாக அமைகின்றன.

3. 7, 5. 2 ஒரே வரி பல பாடல்களுக்கு இறுதிவரியாவதன் காரணம் சந்த நயமேயாகும். ஒரே சந்தத்தில் பாடல்கள் அமையும் பொழுது ஒரேவரி மீண்டும் மீண்டும் இறுதி வரியாகின்றது. சந்தம் மாறும் பொழுது இறுதி வரிகளும் மாறுகின்றன.

3. 7. 5. 3 மீனாட்சிசுந்தரனாரின் பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களில் இறுதியிலமையும் பொன்னூசல் பருவப் பாடல்கள் பத்தும் ஒரே சந்தத்தில் அமைவதால் அவற்றின் இறுதி வரியும் ஒன்றே போல் அமைகின்றன. ஆண்பாற்பிள்ளைத்தமிழ் நூல்களில் சிற்றில் பருவப் பாடல்களும், சிறுதேர்ப் பருவப் பாடல்களும் ஒரே வரியில் முடியும் அமைப்பைப் பெறுகின்றன.

## 3.8 தலபுராணத்துள் பிள்ளைத்தமிழ்

3. 8. 1 பிள்ளைத்தமிழ் பாடுவதில் பெருவிருப்பம் உடையவர் மீனாட்சிசுந்தரனார். தலபுராணம் பாடும்பொழுதும் கூட அவ் விருப்பம் தலைதூக்கி நின்றது என்பது வியப்புக்குரிய செய்தியாகும்.

இவரால் எழுதப் பெற்றவையாக இருபத்திரண்டு தலபுராணங்கள் குறிப்பிடப்படுகின்றன. அவற்றுள் முற்றுப் பெறாதனவும் உண்டு; வடமொழியிலமைந்த தலபுராணங்களைத் தமிழ்ப்படுத்தியமையும் உண்டு. ஏற்கனவே தலபுராணம் பெற்ற தலங்களுங்கூட இவரால் தலபுராணம் பாடப்படும் பேறு பெற்றன.

3.8.2 இவர் இயற்றிய தலபுராணங்களில் திருக்குடந்தைப் புராணமும் ஒன்று. திருக்குடந்தை மங்களாம்பிகைக்குப் பிள்ளைத்தமிழ் பாடிய இவர் அத்தலத்திற்குத் தலபுராணமும் பாடியுள்ளார்.

இத்தலத்தில் நடந்த புராண இதிகாசச் செய்திகள் இப் புராணத்தில் இடம் பெறுகின்றன.

இப்புராணத்தில் ஆராவமுதப் படலம் என்ற படலம் அமைந்துள்ளது. இதில் கோமளவல்லியின் பிள்ளைப் பருவம் பேசப் படுகின்றது.

### 3. 8. 2. 1. படலச்செய்தி

3. 8. 2. 1. 1 ஏமரிஷியின் அருந்தவப் பயனால், இலக்குமி தேவி திருக்குடைந்தையில் உள்ள அமுதவாவி என்னும் திருக்குளத்தில்

அவதரித்தாள். அவளுக்கு கோமளவல்லி என்ற திருநாமம் சூட்டப் பெற்றது. ஏமரிஷியின் மகளாகக் கோமளவல்லி வளர்கிறாள். மாதவம் புரிந்து, பின்னர் திருமாலால் மணம் முடிக்கப்படுகிறாள். இங்கு அமுதவாவியில் தோன்றி வளர்ந்த கோமளவல்லியின் பிள்ளைப் பருவம் மிக அழகாகப் பாடப்பட்டுள்ளது.

3. 8. 2. 1. 2 இப்பகுதிதான் மீனாட்சிசுந்தரனாரின் பிள்ளைத் தமிழ் பாடும் பெருவிருப்பைக் காட்டுவதாக அமைகிறது. இப் படலத்துள் மொத்தம் 71 பாடல்கள் உள்ளன. அவற்றுள் 26-வது பாடல் முதல் 35-வது பாடல் வரையுள்ள பத்துப் பாடல்களும் பிள்ளைத்தமிழ் அமைப்பினைப் பெற்று விளங்குகின்றன.

### 3. 8. 2. 1. 2. 1 பிள்ளைத்தமிழ்க் கூறுகள்

3. 8. 2. 1. 2. 1. 1 காப்புப் பருவம் தொடங்கிச் செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, அம்மானை, நீராடல், பொன்னூசல் என்னும் பத்துப் பருவத்திற்கும் பத்துப் பத்துப் பாடல் களாக நூறு பாடல்கள் பாடுவது பிள்ளைத்தமிழ் மரபு. இங்கு ஆசிரியர் இப்பத்துப் பருவங்களையும் அமைத்து, ஒரு பருவத்திற்கு ஒரு பாடலாகப் பத்துப் பாடல்கள் பாடியுள்ளார்.

3. 8. 2. 1. 2. 1. 2 பிள்ளைத்தமிழ் நூல்களில் பாடப்படும் பாட்டுடைத் தலைவனாம் குழந்தையைச் செங்கீரை ஆடுக, சப்பாணி கொட்டுக, முத்தம் தருக என்பன போன்று வேண்டுதல்களாக, நிகழ்காலத்தில் அமைத்துப் பாடுதல் மரபு.

ஆனால் இங்கு ஆசிரியர் தாம் தலபுராணத்துள் பிள்ளைத் தமிழ் பாடுகிறோம் என்பதை மறந்தாரல்லர். நடந்த நிகழ்ச்சி களைக் கதை போலக் கூறுவது தலபுராண மரபு. இங்கும் கோமளவல்லியின் பிள்ளைப் பருவம் நடந்து முடிந்த கதை. எனவே ஒவ்வொரு பாடலிலும் ஏமரிஷி ''வயங்கு காப்பியற்றினன் மாதோ' என்றும், ''தூய செங்கீரை ஆடினளே'' என்றும், ''செறிகருங் கூந்தற் கோமளவல்லி திகழ்ந்து சப்பாணி கொட்டினளே'' என்றும் கடந்த கால நிகழ்ச்சிகளாகக் கூறுகிறார்.

3. 8. 2. 1. 2. 1. 3 'பங்கயத் தவிசு என நெடியோனின் மார்பில் அமர்ந்த கோமளவல்லிக்கு ஏமரிஷி பல தெய்வங்களையும் முன்னிறுத்திக் காப்புச் செய்தனன், என்றமைந்த முதல் பாடலில் பிள்ளைத்தமிழ் மரபுப்படிக் காப்புப் பாடுகிறார்.

3. 8. 2. 1. 2. 1. 4 அடுத்துப் பிற பருவங்களும் முறைப்படிப் பாடப்பட்டுள்ளன. 'என் கணவனின் வயிற்றினுள்ளே புகுந்து,

மீண்டும் அவனாலேயே பெற்றெடுக்கப்பட்ட நீ அதனை மறந்து அவனை மணாளனாகக் கொண்டுள்ளாய். எனவே உன்னை நோக்கேன் என்று கூறுபவள் போலத் தலையசைத்துக் கோமளவல்லி நிலமகளை நோக்காது செங்கீரையாடினாள்''[73] என்றமைந்த செங்கீரைப் பாடல் அழகிய தற்குறிப்பேற்றவணி அமைந்து விளங்குகின்றது.

அதே போன்று

''அறிதுயில் அராமேல் அமரும் எம்பெருமான்
அடிமலர் வருடல் செய்யாது
பொறியறப் பிரிந்த செங்கைகாள் உம்மைப்
புடைத்தன்றி விடேன் என முயன்று''[74]

தன் கைகளைப் புடைத்துத் தாக்கிக் கோமளவல்லி சப்பாணி கொட்டினாள் என அமைந்த பாடலும் அழகிய தற்குறிப்பேற்றவணி கொண்டு விளங்குகிறது.

முத்தப்பருவப் பாடலில் பிற முத்துக்களோடு ஒப்பிட்டு நோக்கிக் கோமளவல்லியின் செவ்வாய் முத்தமே சிறந்ததென நிறுவி முத்தம் பெற்ற தன்மையைப் பாடுகின்றார்.

கோமளவல்லி அம்மானை ஆடும் காட்சி அழகான கற்பனை அமையப் படைக்கப்பட்டுள்ளது. 'அவளது அழகிய கரத்தினைத் தாமரை மலர் என்று எண்ணிக்கொண்ட வண்டுகள் வரிசையாக வந்து குவிந்து, பின் மலரல்ல கரம் என்பதை உணர்ந்து எழுந்து போதல் போல, நீலமணி இழைத்த அம்மானைக் காய்களை வரிசையாக எறிந்து விளையாடினாள். இனமென்று எண்ணிய அவள்தன் அலர் விழிச் சுரும்பும் அம்மானைக் காய்களைத் தொடர்ந்து எழ அம்மனை ஆடினாள் கோமளவல்லி'[75] எனப்பாடுகிறார். இவ்வாறு கோமளவல்லி அம்மானை ஆடியதையும், காய்களைத் தொடர்ந்து செல்லும் அவள் விழிகளின் இயல்பினையும் அழகிய கற்பனை ஓவியமாகக் காட்டுகிறார்.

அம்புலிப் பருவப் பாடல் ஆசிரியரின் பாடுதிறனுக்கு அரிய சான்றாக விளங்குகின்றது. பிள்ளைத்தமிழ் பாடும் புலவர்கள் அம்புலிப் பருவம் பாடும் பொழுது, சாம, பேத, தான, தண்டம் எனும் நான்கு உத்திகளையும் பயன்படுத்திப் பாடுதல் மரபு. பத்துப் பாடல்கள் பாடும் பொழுது இவ்வுத்திகளை விரித்துப் பாட வாய்ப்பிருக்கும். ஆனால் இங்கு ஆசிரியர் ஒரே பாடலில் இந்நான்கு உத்திகளையும் கையாண்டுள்ள திறன் வியப்புக்குரியதாகும்.

''முன்னாநீ யுதித்த விடத்திவள் உதித்தாள்
முயற்கறை சிறிதுமில் லாதாள்
நன்னீர்நீ யிந்தத் தலத்தினை யடைந்தால்
நைதலற்று உயர்வது சரதம்
உன்னரும் விடவா யாயிர மமைந்த
உரகமற் றிவள்மொழி கேட்கும்
மன்னவம் புலியே வருகென வழைப்ப
மகிழ்ந்தனள் கோமளவல்லி'' [76]

எனும் அப்பாடலில் நீ உதித்த இடத்தில் இவளும் உதித்தாள் எனச் சாமமும், உனக்கோ முயற்கறை உண்டு. இவளுக்குக் கறையில்லை எனப் பேதமும், இத்தலத்தினை அடைந்தால் தேய்தலாகிய துன்பம் நீங்குவை எனத் தானமும், ஆயிரம் தலையுடைய அரவு இவள் கூறியதைக் கேட்கும் எனத் தண்டமும் அமைதலைக் காணலாம்.

இவ்வாறு தலபுராணம் பாடவந்த ஆசிரியர் கோமளவல்லியின் பிள்ளைப் பருவத்தை வாய்ப்பாக்கிக் கொண்டு ஒரு குட்டிப் பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார்.

## 3.9. முடிவுகள்

பிள்ளைத்தமிழ்ப் பருவங்களின் வைப்பு முறை, பெண்பால் பிள்ளைத் தமிழுக்கு உரிய பருவங்கள் ஆகியவற்றை விளக்கு மிடங்களில் பாட்டியல் நூல்களுக்கிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன.

பருவங்களுக்குக் கூறப்படும் காலக் கணக்கு, பிள்ளைத்தமிழ்ப் பாடல்களில் குறிப்பிடப்படுதல் இல்லை.

மீனாட்சிசுந்தரனார் தம் பிள்ளைத்தமிழ் நூல்களில் பாயிரப் பகுதியில் முதலில் விநாயகரைப் பாடிப் பின் சமய இறைக்குடும்ப வரிசைப்படி இறைவன் இறைவியைப் பாடி, மீண்டும் விநாயகரை வணங்கித் தொடங்குகிறார்.

மீனாட்சிசுந்தரனார் முதலில் எழுதிய பிள்ளைத்தமிழ் நூல்களில் விரிவான பாயிரமும், பின்னர் எழுதியவற்றில் விநாயகர் வணக்கம் மட்டும் காணப்படுகின்றன.

காப்புப் பருவத்தில் அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழும், சேக்கிழார் பிள்ளைத்தமிழும் ஆசிரியரின் சமய உணர்விற்கேற்ப மாறுபட்டுக் காணப்படுகின்றன.

செங்கீரை என்பது குழந்தையின் ஆட்டத்தையே குறிக்கும் என்பதே மீனாட்சிசுந்தரனாருக்கு உடன்பாடு. எல்லாப் பிள்ளைத் தமிழ் நூல்களிலும் இவ்வகை ஆட்டம் குறிப்பிடப்படுகிறது.

செங்கீரைப் பருவம் 29%, சப்பாணிப் பருவம் 45%, முத்தப் பருவம் 60%, வருகைப் பருவம் 58%, அம்மானைப் பருவம் 58%, நீராடல் பருவம் 54%, பொன்னூசல் பருவம் 46%, சிறுபறைப் பருவம் 40%, சிறுதேர்ப் பருவம் 30% பொருட் தொடர்புடையன வாக அமைந்துள்ளன.

தாலப் பருவப் பாடல்கள் அனைத்துமே தலைப்பிற்குரிய பொருட் தொடர்பின்றிக் காணப்படுகின்றன.

அம்புலிப் பருவமும், சிற்றில் பருவமும் முழுமையும் பொருட் தொடர்புடையனவாக அமைந்துள்ளன.

மூன்று பிள்ளைத்தமிழ் நூல்களில் மட்டும் இறுதிப் பாடல்கள் வாழ்த்துப் பாடல்களாக அமைந்துள.

ஒரே சந்தத்தில் பாடல்கள் அமையும் பொழுது ஒரே தொடர் இறுதித் தொடராக அமைகின்றது. சந்தம் மாறும் பொழுது பாடலின் ஈற்றடியும் மாறுகின்றது.

திருக்குடந்தைப் புராணத்தில் கோமளவல்லியின் பிள்ளைப் பருவம் பிள்ளைத்தமிழ் வடிவத்தில் பத்துப் பாடல்களாகப் பாடப் பட்டுள்ளது.

புராண இயல்புக்கு ஏற்பச் செய்திகள் கடந்த கால நிகழ்ச்சி களாகக் கூறப்பட்டுள்ளன.

அம்புலிப் பருவத்தில் ஒரே பாடலில் நான்கு உத்திகளையும் அமைத்துள்ளார்.

## குறிப்புக்கள்

1. நச்சினார்க்கினியர், தொல். பொருள். புறத். 29.
2. ந. வீ. செயராமன், சிற்றிலக்கியச் செல்வங்கள், ப. 128.
3. டி. எஸ். கங்காதரன், குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ், நூலாராய்ச்சி, ப. 68.
4. திருமந்திரம், 1501

6. உ. வே. சாமிநாதையர், மீனாட்சிசுந்தரம் பிள்ளை
சரித்திரம், முதல்பாகம், ப. 276.
7. பன். 22, 23.
8. பாலூர் கண்ணப்ப முதலியார், சேக்கிழார் பிள்ளைத்தமிழ், பக். 26—27.
9. மேலது, ப. 28.
10. அகிலாண்ட. செங். 8.
11. மேலது., செங். 5.
12. சேக்கிழார். செங். 2
13. காந்தி, செங். 6.
14. அம்பல. தால். 10.
15. பெரியாழ்வார் திருமொழி, சப். 6.
16. பெரிய திருமொழி, 10-பத்து, 5-வது-பூங்கோதை.
17. அகிலாண்ட. சப். 1.
18. மேலது., சப். 2.
19. மேலது., சப். 7.
20. பெருந்திரு. சப். 2.
21. பெருந்திரு. சப். 5.
22. முருகர். சப். 3.
23. அம்பல. சப். 9.
24. சேக்கிழார். சப். 6.
25. காந்தி. சப். 6.
26. மங்கள. சப். 2.
27. சேக்கிழார். சப். 4.
28. மங்கள. சப். 5.
29. அகிலாண்ட. முத். 8
30. காந்தி. முத். 3.
31. திருவெண். முத். 4.
32. முருகர். முத். 5.
33. முருகர். முத். 2.
34. அபிதான சிந்தாமணி, ப. 1331.
35. திருவெண். முத். 6.
36. அகிலாண்ட. முத். 10.
37. காந்தி. வருகை. 4.
38. சேக்கிழார். வருகை. 4.
39. திருவெண். வருகை. 1.
40. முருகர். வருகை. 1.
41. இனியவை நாற்பது, 14.

42. திருவெண். வருகை. 3.
43. முருகர். வருகை. 1.
44. அம்பல. வருகை. 10.
45. அகிலாண்ட. அம்புலி. 1.
46. காந்தி. அம்புலி. 1.
47. மேலது., அம்புலி. 3.
48. அம்பல. அம்புலி. 6.
49. முருகர். அம்புலி. 10.
50. மங்கள. அம்மானை. 1.
51. பெருந்திரு. அம்மானை. 3.
52. அகிலாண்ட. நீராடல். 6.
53. மங்கள. நீராடல். 8.
54. அகிலாண்ட. நீராடல். 7.
55. பெருந்திரு. பொன். 1.
56. அகிலாண்ட. பொன். 2.
57. திருவெண். பொன். 6.
58. சேக்கிழார். சிற்றில். 4.
59. முருகர். சிற்றில். 7.
60. அம்பல. சிற்றில். 7.
61. முருகர். சிற்றில். 5.
62. மேலது., சிற்றில். 8.
63. மேலது., சிற்றில் 9.
64. அம்பல. சிற்றில். 9.
65. மேலது., சிற்றில். 10.
66. சேக்கிழார். சிற்றில். 8.
67. முருகர். சிறுபறை 6.
68. சேக்கிழார். சிறுபறை. 5.
69. அம்பல. சிறுதேர். 2.
70. முருகர். சிறுதேர். 1.
71. அம்பல. சிறுதேர். 4.
72. சேக்கிழார். சிறுதேர். 4.
73. திருக்குடந்தைப் புராணம், ஆராவமுதப் படலம், 27.
74. மேலது., 29.
75. மேலது., 33.
76. மேலது., 32.

| எ.ண் / பிள்ளைத் தமிழ் நூல்கள் | | 1 அதிகாண்ட. | 2 பெருந்திரு. | 3 காந்தி. | 4 திருவெண். | 5 முருகர். | 6 அம்பல. | 7 மங்கள. |
|---|---|---|---|---|---|---|---|---|
| செங்கீரை | செங்கீரை ஆட்டம் | ✓ | ✓ | ✓ | ✓ | ✗ | ✓ | ✓ |
| | அணிகல ஆட்டம் | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✗ | ✗ |
| | ஈற்றடியில் அமைவன | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| தால் | தொட்டில் சிறப்பு | ✗ | ✗ | ✗ | ✗ | ✗ | ✓ | ✗ |
| | ஈற்றடியில் அமைவன | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| | அழகுதோறும் | ✓ | ✗ | ✗ | ✓ | ✗ | ✗ | ✓ |
| சப்பாணி | கரச் சிறப்பு | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| | சப்பாணிச் சிறப்பு | ✗ | ✗ | ✓ | ✗ | ✗ | ✗ | ✓ |
| | திருவன கூறல் | ✗ | ✗ | ✗ | ✗ | ✗ | ✗ | ✓ |
| | ஈற்றடியில் அமைவன | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| முத்தம் | வாய்ச் சிறப்பு | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| | முத்துக்கள் ஒப்பீடு | ✓ | ✗ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| | ஈற்றடியில் அமைவன | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| | அழகுதோறும் | ✓ | ✗ | ✗ | ✗ | ✗ | ✗ | ✓ |
| வாரானை | பாதச் சிறப்பு | ✓ | ✓ | ✓ | ✓ | ✗ | ✓ | ✓ |
| | ஒலிக்கும் அணிகலன் | ✓ | ✗ | ✓ | ✓ | ✓ | ✗ | ✓ |
| | வருகைச் சிறப்பு | ✗ | ✓ | ✗ | ✓ | ✓ | ✓ | ✓ |
| | ஈற்றடியில் அமைவன | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| | அழகுதோறும் | ✗ | ✗ | ✓ | ✗ | ✗ | ✓ | ✗ |
| அம்புலி | சாமம் | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| | பேதம் | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| | தானம் | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| | தண்டம் | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |

| | அம்மானை | | | | | | | | | | நீராடல் | | | பொன்னூசல் | | | சிற்றில் | | | | | | சிறுபறை | | சிறுதேர் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | முத்து | நீலம் | பவளம் | பொன் | மாணிக்கம் | வயிரம் | மரகதம் | பலநிறக் காய்கள் | அணிகலன் | ஈற்றடியில் அமைவன | நீராடல் சிறப்பு | நதிச் சிறப்பு | ஈற்றடியில் அமைவன | ஊசல் சிறப்பு | ஊசலாடல் சிறப்பு | ஈற்றடியில் அமைவன | பாதச் சிறப்பு | அழியல் எனல் | தகுமோ எனல் | பொறுக்கோம் எனல் | இவற்றைச் சிதை எனல் | சிதைத்தற்குரியன கூறல் | பறைச் சிறப்பு | ஈற்றடியில் அமைவன | தேர்ச் சிறப்பு | தேரோட்டச் சிறப்பு | ஈற்றடியில் அமைவன |
| 1 | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | × | × | × | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| 2 | ✓ | × | ✓ | ✓ | ✓ | × | ✓ | ✓ | × | ✓ | × | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| 3 | ✓ | ✓ | × | ✓ | × | × | ✓ | × | × | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| 4 | ✓ | ✓ | × | ✓ | × | × | × | × | × | ✓ | × | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| 5 | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | ✓ | ✓ | ✓ | × | ✓ | × | ✓ | ✓ | × | ✓ | ✓ |
| 6 | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | × | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| 7 | ✓ | ✓ | ✓ | × | × | ✓ | × | ✓ | × | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | × | ✓ | — | — | — | — | — | — | — | — | — | — | — |

# 4. கோவை நூல்களின் அமைப்பு

## 4.0 முன்னுரை

கோவை இலக்கியம் ஐந்திணைக் கோவை[1] என்றும், அகப்பொருட் கோவை[2] என்றும் வழங்கப்படுகின்றது.

> ''நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
> பாடல் சான்ற புலனெறி வழக்கம்''[3]

என அகத்திணை இலக்கிய மரபைத் தொல்காப்பியர் கூறுவர். இவ்வகத்திணைக்குரிய துறைகளாகத் தொல்காப்பியர் காட்டும் துறைகள், சங்க இலக்கியங்களில் தனித்தனிப் பாடல்களாகக் காணப் படுகின்றன. தனித்தனியே அமைந்த இப்பாடல்களில் காணலாகும் அகச் செய்திகள் பொருள் நோக்கி வரிசையாகத் தொகுக்கப்பட்டு, ஒரு தொடர் கதை போல அமைக்கப்பட்ட மரபே கோவை இலக்கிய நெறியாகின்றது. ''பொருள் தொடர்நிலைச் செய்யுட்களாக ஒன்றினொன்று தொடர்ந்து ஒரு கோவையாக வருதலின் கோவை என்பது காரணப் பெயர்''[4] என்பர்.

## 4.1 கோவையின் சிறப்பு

4.1.1 சங்கப் பாடல்களில் காணலாகும் அகக் கூறுகள் சமுதாயத்தில் ஆங்காங்கே சிதறிக் கிடக்கும் செய்திகளாகும். அவ்வகத்திணைக் கூறுபாடுகள் அனைத்தையும் நிரல்பட அமைத்துக் காட்டுவது கோவை.

''கோவை என்பது சங்க இலக்கியம் என்னும் பெரிய மாளிகையைக் கண்டு படியெடுத்த ஒருவரைபடமாகும்''[5] என்று இவ்விரு இலக்கியங்களிடையே காணும் ஒற்றுமையை அறிஞர் குறிப்பர்.

4.1.2 பாடுபொருளால் சங்க இலக்கியமும், கோவையும் ஒன்று பட்டாலும், பாடப்படும் நெறிமுறைகளும், நோக்கமும் முழுமையாக வேறுபட்டன. மலரினும் மெல்லிய காம உணர்வினை நனி நாகரீக மாகப் புலப்படுத்தும் சங்க இலக்கிய நடைப் பண்பிற்குக் கோவை நூல்கள் ஒப்பாகா எனினும், தொல்காப்பியரின் அகத்திணைச்

செய்திகள் அழிந்துவிடாமல் காத்த பெருமை கோவை நூல்களுக்கு உண்டு. இக்கோவை நூல்களின் சிறப்பை, ''இடைக்காலத்து யாத்த கோவை இலக்கியம் பல காதற் கூறுகளையும் ஒருவர்பால் தொகுத்துத் தொடுத்துக் காட்டுதலின், அது உயிர்க் காட்சிசாலை போன்றது. அதனைக் காதற் காட்சிசாலை என்று அழைக்கலாம்'' எனப்பாராட்டுகிறார் வ. சுப. மாணிக்கம்.

4.1.3 ''இவ்வகப் பொருட் துறைகள் அகப்பொருட் கோவை, ஐந்திணைச் செய்யுள், அநுராகமாலை, கைக்கிளை, உலாமடல், வளமடல், குறத்திப்பாட்டு, குறவஞ்சியாகிய இலக்கியங்களாக வளர்ந்துள்ளன''[7] என அகவிலக்கிய வளர்ச்சியை, ஆராய்ச்சி யாளர்கள் குறித்துச் செல்கின்றனர்.

## 4.2 கோவை இலக்கணம்

4.2.1 அகத்துறை இலக்கணம் தொல்காப்பியம் அகத்திணை இயல், களவியல், கற்பியல், பொருளியல், செய்யுளியல், உவமவியல், மெய்ப்பாட்டியல் ஆகிய ஏழு இயல்களில் விரிந்து கிடக்கின்றது. அகத்திணையைப் 'புலனெறி வழக்கு' எனக் குறிப்பிட்ட தொல்காப்பியர், அதற்குரிய பா அமைப்பினைக்,

''கலியே பரிபாட் டாயிரு பாங்கினும்
உரிய தாகும் என்மனார் புலவர்''[8]

எனக் குறித்துச் சென்றார்.

4. 2. 2. இறைவனால் எழுதித்தரப்பட்டு, நக்கீரரால் உரைஎழுதப் பட்டதாகக் கூறப்படும் இறையனாரகப் பொருள் கூறும் இலக்கணம் அகப்பொருள் இலக்கணமே. ஐந்திலக்கணம் கூறிய 'தொல்காப்பியர் அகத்திணை இலக்கணம் முழுமையும் கூறிச் சென்றுள்ளார். பின்னும் தனியொரு அகவிலக்கணம் இறையனார் களவியல் எனப் படைக்கப் பட்டதன் காரணம், இவ்வகக் கூறுகள் ஒன்றாகத் தொகுக்கப் பட்டுக் கோவை என்னும் புதிய இலக்கியம் உருவானமையாய் இருக்கலாம்.

4. 2. 3 வீரசோழியம், நம்பியகப்பொருள் என்ற இலக்கண நூல் களும், இலக்கண விளக்கம், பன்னிரு பாட்டியல், நவநீதப் பாட்டியல், வெண்பாப் பாட்டியல் போன்ற பல பாட்டியல் நூல் களும் இவ்விலக்கணம் பற்றிப் பேசுகின்றன. இவற்றுள் பாட்டியல் இலக்கண நூல்கள் மட்டுமே கோவை இலக்கியம் என்ற இலக்கியப் பெயரைக் கூறி விளக்குகின்றன.

4.2.3.1 கலித்துறை நானூறால் ஆன அகச்செய்திகளின் தொகுப்பு கோவையாகும் என வெண்பாப் பாட்டியலும் (வெண். 15), களவு, கற்பு என்னும் ஐந்திணைக்குரிய அகச்செய்திகள் அமைந்த நானூறு கட்டளைக் கலித்துறைகள் கோவை எனப்படும் எனப் பன்னிரு பாட்டியலும் (பன். 135), முதல், கரு, உரி என்னும் பொருள் பொதிந்து, களவு, கற்பு என்னும் வரையறைப்பட்டுக் கலித்துறை நானூறாகத் திணை முதலிய பன்னிரு உறுப்பும் பெற அமைவது கோவையாகும் என இலக்கண விளக்கமும் (இலக். 56) கூறுகின்றன.

4.2.3.2 இவற்றுள் இலக்கண விளக்கம் மட்டும் திணை, கைகோள், துறை, கூற்று, கேட்போர், பயன், மெய்ப்பாடு, இடம், காலம், எச்சம், கோள், முன்னம் என்ற பன்னிரு உறுப்புக் களும் ஒவ்வொரு பாடலிலும் குறைவின்றி அமைய வேண்டும் என்று தொல்காப்பியச் செய்யுளியலைப் பின்பற்றிப் பேசுகிறது.

4.2.3.3 பாவகை கூறுமிடத்து, எல்லாப் பாட்டியல் நூல்களும் கலித் துறையினையே கூறிச் செல்கின்றன. அகப்பொருளுக்குச் சிறப்பாய் அமைந்த பா 'கலியே' என்கிறது தொல்காப்பியம். அகப்பொருள் பற்றிக் கூறும் கோவையும் அப்பாவினத்தாலேயே பாடப்படவேண்டும் என்றே நவில்கின்றன இலக்கண நூல்கள்.

''இந்நூல்களில் தலைவன், தலைவி, பாங்கன், தோழி, செவிலி, பாணன், ஊரவர், அயலவர் முதலிய பாத்திரங்களும், சோலை, பாலை, நிலம், கடலோரம், மலைச்சாரல் முதலிய நிலமும் வகுத்து, அங்கே மரம், செடி, கொடி, பறவை, விலங்கு முதலியனவும் காட்டி மாலைக் காலம் முதலிய நேரமும் கூறி, இன்ன இடத்தில் இந்நேரத்தில் இப்பாத்திரங்களின் பேச்சு முதலிய செயல்கள் நிகழ் கின்றன எனக் காட்சியும், கைக்கிளை முதலிய அங்கமும் அமைத்தலின் இவற்றை நாடகநூல் என்றும் கூறுவர்.''[9]

## 4.2.4 இரு தலைவர்கள்

4.2.4.1 அகத்திணைப் பாடல்களில் வரும் தலைவன் தலைவியர் பற்றிக் கூறுமிடத்துச் ''சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்''[01] எனத் தொல்காப்பியம் கூறும்.

4.2.4.2 சங்க அகப்பாடல்களில் பெயர்சுட்டப்படாத தலைமகன் பேசப்படுவான். ஆனால் கோவைப் பாடல்களில் பாட்டுடைத் தலைவன், கிளவித் தலைவன் என்ற இருவரைக் காண்கிறோம். சங்கப் பாடல்களின் நோக்கம் காதலைப் பாடுவது; கோவைப் பாடல்

களின் நோக்கம் பாட்டுடைத் தலைவனைப் புகழ்வது. ஆனால் இவ்விரு இலக்கியமும் தேர்ந்தெடுத்துக் கொண்ட வடிவம், அகத் துறைப் பாடல்கள். வெவ்வேறு நோக்கங்களுக்குக் காதல் இலக்கிய வடிவம் பயன்பட்டமையின், இரு தலைவர்களைப் பாடுதல் என்ற மரபு கோவை இலக்கியங்களில் தோன்றியது

4. 2. 4. 3 தாம் வணங்கும் தெய்வங்களையோ, தம்கால மன்னர் களையோ, வள்ளல்களையோ பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு கோவை நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. கிளவித் தலைவன் என்பவன் அகச்செய்திகட்கு உரியவனாகின்றான்.

பாட்டுடைத் தலைவன், கிளவித் தலைவன் என்ற பகுப்பு எந்த இலக்கண நூலிலும் கூறப்படவில்லை. எனவே ஒரு நூலுக்கு இரு தலைவர்கள் அமைகின்ற இலக்கிய நெறி கோவை நூல்களால் அறிமுகமான புதுநெறி. தலைவன் பெயர் சுட்டக் கூடாது என்ற தொல்காப்பிய மரபைக் காப்பதற்காகவே கிளவித் தலைவன். பாட்டுடைத் தலைவன் என்ற தொல்காப்பிய மரபைக் காப்பதற் காகவே கிளவித் தலைவன், பாட்டுடைத் தலைவன் என்ற பிரிவு உருவாகி இருக்கக் கூடும்.

4. 2. 4. 4 இதனால் கோவை பாடும் ஆசிரியரின் நோக்கம் பாட்டுடைத் தலைவனைப் பாராட்டுவதும், கிளவித் தலைவனுக்குரிய அகச்செய்திகளைக் கூறுவதும் என இரு நிலைப்படுகின்றது. ஆக, முழுமையான அகப்பாடல்களாகவும் அமையாமல் முழுமையான புறப்பாடல்களாகவும் அமையாமல், அகப்புறப் பாடல்களாக அமைகின்றன.

தஞ்சைவாணன் கோவை, குலோத்துங்க சோழன் கோவை போன்ற நூல்களில் சந்திரவாணன், குலோத்துங்கன் என்போர் அகப் பொருளுக்குப் புறத்தே கூறப்படும் பாட்டுடைத் தலைவர்கள்.

4. 2. 4. 5. கோவை நூல்களுள் அம்பிகாபதிகோவை தனிச்சிறப்புப் பொருந்தியது. இதில் கிளவித் தலைவன் மட்டுமே பேசப்படுகின்றான் பாட்டுடைத் தலைவனாக யாருடைய புகழும் கூறப்படவில்லை. அம்பிகாபதி என்பது ஆசிரியர் பெயராய் இருக்கலாம். அவையடக்கம் கூறுமிடத்து, 'அம்பிகா பதிகம் புனைந்தேன்' என்றும், நூல் தொடக்கத்தில் 'அம்பிகாபதி பொன்னடித் தாமரை' என்றும் தோற்றுவாய் செய்ததைக் கொண்டு ஆசிரியர் பெயர்அம்பிகாபதியாய் இருக்கலாம் என்பர்.[11] எனவே பாட்டுடைத் தலைவன் இல்லாத கோவை நூல் அம்பிகாபதி கோவை என்பது குறிப்பிடத்தக்கது.

## 4. 2. 5. கோவை இலக்கியப் பாட்டுடைத் தலைவர்கள்

4. 2. 5. 1. கடவுளரைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு பாடப்பட்ட நூல்கள்: 1. திருச்சிற்றம்பலக்கோவையார், 2. திருவாரூர்க்கோவை, 3. திருவெங்கைக்கோவை, 4. சீகாழிக்கோவை, 5. கோடீசுரக்கோவை, 6. சிராமலைக்கோவை போன்றவை

4. 2. 5. 2. வள்ளல்களையும், மன்னர்களையும் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டவை: 1. குளத்தூர்க்கோவை, 2.வியாசைக்கோவை. 3. தஞ்சைவாணன்கோவை, 4. பாண்டிக்கோவை போன்றவை. இவை முறையே வேதநாயகம் பிள்ளை, வியாசர்பாடி விநாயக முதலியார், சந்திரவாணன், பாண்டியன் நெடுமாறன் என்போரைப் பாடுவன. மாறன்கோவை என்பது அடியாராகிய நம்மாழ்வாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டது.

## 4. 2. 6 கோவை பெயர் பெறும் முறை

4. 2. 6. 1 கோவை இலக்கியங்கள் பாட்டுடைத் தலைவர்களாலும், அவர்கள் உறைகின்ற தலங்களாலும், இயற்றிய ஆசிரியராலும், துறை எண்ணிக்கையாலும் பெயர் பெறுகின்றன,

| | |
|---|---|
| தஞ்சைவாணன்கோவை<br>குலோத்துங்க சோழன்கோவை | பாட்டுடைத் தலைவனால் பெயர் பெற்றவை |
| சீகாழிக்கோவை<br>திருவாரூர்க்கோவை | தலத்தால்பெயர் பெற்றவை |
| குமரசேனாசிரியர்கோவை<br>அம்பிகாபதி கோவை | ஆசிரியர் பெயரால் பெயர் பெற்றவை |

4. 2. 62 யாப்பால் பெயர்பெறும் கோவை நெல்லை வருக்கக் கோவை என்பதாகும். வருக்க எழுத்துக்களால் அமையும் பாடல்களை உடையது இந்நூல்.

4. 2. 6. 3 ஏதாவது ஒருதுறையில் நானூறு பாடல்கள் பாடுவது ஒரு துறைக் கோவை எனப்படும். நாணிக்கண் புதைத்தல் என்ற ஒருதுறைக் கோவை இரகுநாத சேதுபதியைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டது. தியாகேசர்கோவை என்பது வெறிவிலக்கல் என்னும் ஒருதுறைக் கோவையாகும்.

4. 2. 6 4 பெயர் மட்டுமே அறியப்படும் சில கோவை நூல்கள் : 1. குமரசேனாசிரியர் கோவை, 2. தமிழ் முத்தரையர் கோவை,

3. காங்கேயன் நாலாயிரக்கோவை என்பன. ஐவேல் அசதிக் கோவை, கப்பற்கோவை, வல்லாளன்கோவை என்பனவற்றில் சில பாடல்கள் மட்டுமே கிடைக்கின்றன.

### 4. 2. 7 பாடல் எண்ணிக்கை

பாடல் எண்ணிக்கையைப் பொறுத்தவரை எந்தக் கோவை நூல்களும் நானூறு என்ற வரையறையைப் பின்பற்றவில்லை. இவ்வெல்லையைவிடக் குறைந்த பாடல்கள் உடையனவும், மிகுந்த பாடல்கள் உடையனவும் காணப்படுகின்றன. கோவை இலக்கிய ஆசிரியர்கள் ஒவ்வொருவரும் தமக்கெனத் தனியமைப்புக்களைக் கொண்டமையின் இவ்வெண்ணிக்கை வரையறைகள் பொருந்தா.

## 4. 3 மீனாட்சிசுந்தரனாரின் கோவை நூல்கள்

மீனாட்சிசுந்தரனார் தலபுராணங்கள் பாடியதோடு அமைய வில்லை. எண்ணற்ற பல பிரபந்தங்களும் இயற்றினார். கோவை என்ற அகப்பொருள் பற்றிய இலக்கியமும் இவர் கவனத்தைக் கவர்ந்ததில் வியப்பில்லை. இவர் பாடிய கோவை நூல்கள் குளத்தூர்க்கோவை, வியாசைக்கோவை, சீகாழிக்கோவை என மூன்றாகும்.

### 4. 3. 1 குளத்தூர்க்கோவை

மீனாட்சிசுந்தரனார் எழுதிய முதல் கோவை நூல் இது. தம் இனிய நண்பராகவும், வள்ளலாகவும் விளங்கிய மாயூரம் முனிசீப் வேதநாயகம் பிள்ளையைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு 1853–ஆம் ஆண்டில் இயற்றி அரங்கேற்றப்பட்டது. 438பாடல்களைக் கொண்டது.

### 4. 3. 2 வியாசைக்கோவை

''சென்னையில் பெருங்கொடை வள்ளலாய் இருந்தவரும், மயிலாப்பூர்க் கபாலீசர் குளத்தின் தென்பாலுள்ள சித்திரச் சத்திரம் கட்டியவருமாகிய வியாசர்பாடி விநாயக முதலியார் மீது 120 ஆண்டுகட்கு முன் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை பாடியது. இதில் முதல் நூறு மட்டும் அவர் பாடினார். எஞ்சிய பாடல்கள் அவர் மாணாக்கர் கும்பகோணம் தமிழாசிரியராய் இருந்த தியாகராச செட்டியார் பாடினவை.''[12] இதே செய்தி உ. வே. சாமிநாதையராலும் குறிப்பிடப்படுகின்றது. எனவே ஆய்வுக்கு முதல் நூறு பாடல்கள் மட்டுமே எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

. 3 சீகாழிக்கோவை

சீகாழியில் எழுந்தருளியுள்ள பிரம்மபுரீசரைப் பாட்டுடைத் வராகக் கொண்டு, அத்தலக் கனவான்களின் ஆதரவால் -ஆம் ஆண்டில் சீகாழிக்கோவை இயற்றினார். இக்கோவை து பிற கோவை நூல்களைவிடச் செறிவுடையதாய் விளங்கு )து. 531 பாடல்கள் கொண்டது.

## மீனாட்சிசுந்தரனாரின் கோவை நூல்களில் அகத்துறைக் கூறுகள்

தொல்காப்பியம், இறையனாரகப்பொருள், நம்பியகப் ருள் போன்ற நூல்களை அடியொற்றியே கோவை இலக்கியங் ா அகத்துறைகள் அமைகின்றன: எனினும் பெரும்பாலான ாவை நூல்கள் நம்பியகப்பொருளைப் பெரிதும் அடியொற்றிக் ாப்படுகின்றன. மீனாட்சிசுந்தரனாரின் கோவை நூல்களில் ியகப்பொருளில் இல்லாத துறைகள் பல காணப்படுகின்றன. மிகைத் துறைகளை, ஆசிரியர் எங்கிருந்து பெற்றார் என்பது வுக்குரியது.

. 1 ''தானே அவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல்''[13]

னும் நூற்பாவில் 'காமப் புணர்ச்சி' என்பதற்கு உரை எழுதிய ீரர் இயற்கைப் புணர்ச்சி அல்லது தெய்வப் புணர்ச்சி என்றார். ற்கு விளக்கம் கூறுமிடத்துக் காட்சி, ஐயம், தெளிதல், தேறல் ஒரு சாரார் கூறும் உரை ஏற்புடைத்தன்று எனவும். ஏனெனில் )வ கைக்கிளைப்பாற்படும் எனவும், அகத்திணையில் கைக்கிளை தல் திணை மயக்கமாம் எனவும் கூறி மறுத்துள்ளார்.

ஆனால் கோவை நூல்களில் கைக்கிளையே முதலிடம் பெற்று ாங்குகின்றது. நம்பியகப்பொருளும் கைக்கிளை பற்றிக் கூறுகிறது.

திருக்கோவையாரின் பழைய உரைக்கு விளக்கம் எழுதிய ருமழைப்புலவர், ''ஆசிரியர் தொல்காப்பியனார் ஒரு தலைக் மத்தையே கைக்கிளைத் திணை என்று வரைந்தோதியிருப்பவும், ப்வுரையாசிரியரும் வேறு சில உரையாசிரியரும் இவற்றைக் கைக் ளைப்பாற் படுத்துதற்கு இலக்கணம் யாண்டுப் பெற்றா ன்றறிகின்றிலேம்''[41] என்று குறிப்பிட்டுக், கைக்கிளை என்பது ;திணையின் முதல் நிலையாகவும் கூறலாம் என ஏற்றுக் ாள்கிறார்.

இக்கருத்தையே, பிற்கால அக இலக்கண நூல்களுக்கும், கோவை இலக்கியங்களுக்கும் உரிய அமைதியாக ஏற்றுக் கொள்ளலாம். மீனாட்சிசுந்தரனாரும் தம் மூன்று நூல்களிலும் கைக்கிளை அமைத்தே நூலைத் தொடங்குகிறார்.

4.4.2 காமப் புணர்ச்சி என்று இறையனாரகப் பொருள் கூறியமைக்கு, அதன் உரையாசிரியர் மெய்யுறு புணர்ச்சி, சொற்பாடு, பிரிவச்சம், வன்புறை, தலைவியது அருமை அறிதல் என்று விளக்கங்கள் கூறியுள்ளார். இவையே பிற்கால நம்பியகப் பொருளில் களவிற்குரிய தனித்தனிக் கிளவித் தொகைகளாக விரிந்துள்ளன. நம்பியகப்பொருளைப் பின்பற்றி மீனாட்சிசுந்தரனாரும் கிளவித் தொகைகளை அமைத்துள்ளார்.

4.4.3 ''பாங்கனோரிற் குறிதலைப் பெய்தல்''[15] என்பதற்குப் பாங்கற் கூட்டம் என்று உரையாசிரியர் கூறி, அதற்குரிய விளக்கங்களாகக் கூறுவனவே நம்பியகப்பொருளில் பாங்கற் கூட்டம் என்னும் கிளவித் தொகையாக அமைந்து, தலைவன் கூற்றாகவும், பாங்கன் கூற்றாகவும் இடம்பெறுகின்றன.

இவற்றுள் 'வேட்கை தாங்கற் கருமை கூறல்'[16] என்ற துறை சீகாழிக்கோவையில், கிழவோன் பாங்கனை ஆண்டுச் செல்ல வேண்டும் என்றல் (சீகாழி. 57), தலைவியுருவு வெளிப்பட்டமை கண்டு தலைவன் ஐயுற்றிரங்கல் (சீகாழி. 67), பாங்கனை உள் மகிழ்ந்துரைத்தல் (சீகாழி. 78), என்ற மிகைத் துறைகளோடு விரிந்து'காணப்படுகின்றது.

4.4.4 நம்பியகப்பொருளில் பாங்கி மதிஉடன்பாட்டில் முன்னுற உணர்தல் ஒரு நெறியாகும். இது நாற்றம், தோற்றம். ஒழுக்கம், உண்டி, செய்வினை மறைப்பு, செலவு, பயில்வு என்பவற்றால் ஐயமுற்று ஓர்தலாகும். இவ்விரிவுகள் இறையனாரகப்பொருள் உரையினின்றும் நம்பியகப்பொருள் பெற்றவை. சீகாழிக்கோவையில் பாங்கி மதிஉடன்பாட்டில், 'நடுங்க நாட்டம்' (சீகாழி. 96) என்ற துறையிலமைந்த பாடல் உள்ளது.

''நாண நாட்டமும் நடுங்க நாட்டமும் அகத்திணை இலக்கணம் அன்று ... இவள் பெருநாணினளாகலானும் பேரச்சத்தினளாகலானும் இறந்து படுமாகலான் அவனேதத்திற்குக்

ஆனால், கோவை நூல்களில் இத்துறைகள் இடம் பெறுகின்றன. இதனை மாணிக்கவாசகர் தம் திருக்கோவையார் அதிகார வரலாற்றில் 'நன்னிலை நாண நடுங்க நாடல்' (8) என்றார். இதற்கு விளக்கம் எழுதப் புகுந்த பெருமழைப் புலவர், '' அஃதாவது தலைவி நன்னிலையளாயிருந்தே நாணவும், நடுங்கவும் நாடல் என்றவாறு. இவ்வாறு நன்னிலையில் நாணவும் நடுங்கவும் நாடலைச் சங்கச் சான்றோர் செய்யுளுள்ளும் காணலாம்'' [18] என்று குறிப்பிடுகின்றார். இதனை ஒட்டியே, நடுங்கநாட்டம் என்னும் துறை சீகாழிக் கோவையில் இடம் பெற்றது போலும்

குளத்தூர்க்கோவையில் முன்னுற உணர்தல் என்ற கிளவித் தொகையில் தோற்றத்தாலாராய்தல், ஒழுக்கத்தால் ஐயந்தீர்தல் என்பன மட்டுமே காணப்படுகின்றன. ஆனால் சீகாழிக்கோவையில் இவை பிறைதொழுகென்றல், கரந்துரைத்தல், கரவு நாட்டம், சுனை நயப்புரைத்தல், சுனை வியந்துரைத்தல் என விரிவாக இடம் பெறுகின்றன.

4.4.5 மதியுடம்பாட்டில், ''பதியும் பெயரும் பிறவும் வினாஅய்'' என இறையனா ரகப்பொருளிலும் (6) '' ஊர், பெயர், கெடுதியோ டொழிந்தவும் வினாவுழி''என நம்பியகப்பொருளிலும் (நம்பி. களவு. 24) கூறப்படுகின்றன. இவற்றுள் இறையனார் 'பிறவும்' என்று விதந்து கூறியமை, நம்பியகப்பொருளில் விரிவடைந்து கெடுதி வினாதல், ஒழிந்தது வினாதல் ஆயிற்று.

கெடுதி வினாதல் என்பது சீகாழிக்கோவையில் வேழம் வினாதல், பன்றி வினாதல், மரை வினாதல், கலைமான் வினாதல் மதமாவொடு மனம் வினாதல் என விரிவாக இடம்பெறுகிறது. குளத்தூர்க்கோவையில் மான் வினாதல், மனம் வினாதல் என்பன இடம் பெறுகின்றன. சீகாழிக் கோவையில் காணப்படும் வழி வினாதல், இடைவினாதல், மொழியாமை வினாதல் என்பவை இறையனாரகப்பொருள் உரையில் காணப்படுபவற்றின் வழி வந்தவை.

4.4.6 வண்டோச்சி மருங்கணைதல் என்ற துறை ஆசிரியரின் மூன்று கோவைகளிலும் காணப்படுகின்றது. ''இதனை வண்டோச்சி மெய்பயிறல் என்றும் மெய்தொட்டுப் பயிறல் என்றும் அழைப்பர்.''[19] நம்பியகப் பொருளில் இயற்கைப் புணர்ச்சியில் மெய்தொட்டுப் பயிறல் (களவு. 11) என்ற துறை காணப்படுகிறது. இதுவே கோவை நூல்களில் வண்டோச்சி மருங்கணைதல் ஆயிற்று எனலாம்

4. 4. 7 ''வெளிப்பட்ட பின்றையும் உரிய கிளவி''[20] என்னும் நூற்பாவிற்கு நக்கீரர் கூறும் உரைப்பகுதியில் செவிலிக்குரிய கூற்றுக்கள் இடம்பெறுகின்றன. நற்றாய் கூற்றுக்கள் உரையிலே தான் காணப்படுகின்றன. ஆனால் நம்பியகப் பொருள் செவிலி, நற்றாய், கூற்றுக்களைத் துறைகளாகச் சேர்த்துள்ளது 'வெளிப் படை' என இறையனார் கூறுவது அறத்தொடு நிற்றலாகும்.

மீனாட்சிசுந்தரனாரின் கோவை நூல்களில் செவிலி கூற்றாய் வருவனவும், நற்றாய் கூற்றாய் வருவனவும் நம்பியகப்பொருளைத் தழுவியே அமைகின்றன. அவை தவிர, மாவிரதியரை வினாதல், உய்த்துணர்ந்தோரை உரைமின் என்றல், புறவொடு புலம்பல் என்ற மிகையான துறைகள் சீகாழிக்கோவையில் காணப்படுகின்றன. இத்துறைகளைத் திருக்கோவையாரில்,

''வழிவருகின்ற மாவிரதியரை
மொழிமின்களென்று முன்னி மொழிந்தது'' (திருக். 242)

''சித்தந் தளர்ந்து தேடுங் கோடாய்
உய்த்துணர் வோரை உரைமி னென்றது'' (திருக். 236)

''காட்டுப் புறவொடு
வாட்டம் உரைத்தது'' (திருக். 240)

என்றமைந்த கொளுக்களினின்றும் பெற்றோர் என்று கருத வாய்ப்பு இருக்கிறது.

4. 4. 8. கண்டோர் கூற்று அமையுமிடத்து, அந்தணரையும், சான்றோரையும் முன்னிட்டு வரைந்து கொண்டுழிக் கண்டோர் மகிழ்ந்து கூறல் என்னும் துறை சீகாழிக் கோவையிலும் (சீகாழி. 440), குளத்தூர்க்கோவையிலும் (குளத்தூர்.371) காணப்படுகின்றது. இத்துறை இறையனாரகப்பொருள், நம்பியகப்பொருள் இரண்டிலும் கிடையாது. ஆனால் திருக்கோவையாரின் 'மணமுரசு கேட்டு மகிழ்ந்துரைத்தல்' (திருக். 296) என்ற பெயரோடு காணப்படுகின்றது. இது போன்றே தலைவி கூற்றாய் வருவனவற்றுள்ளும் மிகைத் துறைகள் திருக்கோவையார் வழி எழுந்தவையேயாகும்.

மேற்கண்டவற்றால் மீனாட்சிசுந்தரனார் தம் கோவை நூல்களில், இறையனார் அகப்பொருள் உரையில் காணப்படும் துறை விளக்கங்களையும், திருக்கோவையார் கொளுக்களையும் ஆங்காங்கே அமைத்துள்ளார் எனினும், அவர் மிகுதியும் பின்பற்றியது நம்பியகப் பொருட் துறைகளையே எனலாம்,

## 4.5. குளத்தூர்க் கோவை

சோழ நாட்டில் வேளாண் குளத்தூர் என்னும் மருத வளம் நிறைந்த ஊர் ஒன்று உண்டு. அது இன்றும் குளத்தூர் என்னும் பெயர் பெற்று விளங்குகிறது அவ்வூரில் பிறந்த வேதநாயகம் பிள்ளையைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு எழுந்த நூலே குளத்தூர்க்கோவையாகும். இந்நூலை மீனாட்சிசுந்தரனார் 1853-ஆம் ஆண்டில் இயற்றினார்.

### 4.5.1 குளத்தூர்

4.5.1.1 குளத்தூர்க்கோவை பெருவாரியான கோவை நூல்களைப் போலப் பாட்டுடைத் தலைவனின் ஊர்ப் பெயரால் பெயர் பெறுகிறது.

குளந்தை என்று இவ்வூரை ஆசிரியர் குறிக்கிறார். இது குளத்தூர் என்பதன் மருஉ. வேளாண்மையும், வேதநாயகர் பிறந்தமையுமே இவ்வூருக்குரிய சிறப்புக்கள். வேறு வரலாற்றுச் சிறப்போ, புராணச் சிறப்போ இவ்வூருக்கு இல்லை.

இலக்கிய இன்பம் கருதியோ, கற்பனை நயம் கருதியோ ஆசிரியர் இவ்வூரை மிகைப்படப் புகழவில்லை. குளத்தூர் நீர்வளமும், நிலவளமும் பெற்ற மருதநிலமாக விளங்குகிறது. எனினும் கோவை மரபிற்கேற்ப ஐந்நிலமும் இங்கு படைத்து மொழியப்படுகின்றன.

4.5.1.2 அகச்செய்திகளின் நிகழ்விடம்

குளத்தூர்க்கோவை எனப்பட்டமையின் கோவைக்குரிய அகச்செய்திகள் குளத்தூரில் நடப்பனவாகக் காட்டப்படுகின்றன.

பாங்கியிற் கூட்டத்தில் குறியிடத்து வந்து எதிர்ப்பட்ட தலைவியை நோக்கி, ''வேதநாயக வேள்வரைப்பால் ஓர் ஓவியம் போல நீ வந்து நின்றது என் தவப்பயனே''[21] என்கிறான் தலைவன். தலைவனும் தலைவியும் சந்திக்கும் இடமாக வேதநாயகரின் ஊர் பேசப்படுகிறது.

தான் தன் மனையில் தலைவியை மணம் புரிந்து கொண்ட தலைவன், அச்செய்தியைத் தோழிக்குக் கூறி, 'நுமர்க்கும் இயம்புக' என்கிறான். அப்பொழுது தோழி தான் முன்னரே அச்செய்தியினை எல்லோர்க்கும் கூறியமையினை,

''மன்னும் புகழிற் பொலிவேத நாயக மால்குளத்தூர்
என்னும் பதிநின் மனைவாய் மணநீ யியற்றியது

முன்னரே கூறினேன்''[22] என்கிறாள். இங்கு தலைவன் ஊர் குளத்தூர் என்பது பெறப்பட்டது.

### 4. 5. 1. 3 ஊர் உவமையாதல்

வளம் சான்ற பட்டினங்கள் மகளிர்க்கு உவமையாகும் இலக்கிய நெறியினைப் பழம் பாடல்களில் காணலாம். மீனாட்சி சுந்தரனாரும் தம் நூல்களில் அத்தகு உவமையைக் கையாள்கிறார்.

தலைவியின் பெயர் வினவுகின்ற தலைவன், ''கார் பொரு மந்திரம் பலசூழ் குளத்தூ ரன்ன பொற்றொடியீர்'' [23] என அழைக்கிறான். மற்றொரு பாடலும் (குளத்தூர். 292) குளத்தூரைத் தலைவிக்கு உவமையாகக் கூறுகிறது.

## 4. 5. 2 பாட்டுடைத் தலைவர்

### 4. 5. 2. 1 வேதநாயகரின் சிறப்பு

4.5.2.1.1 வேதநாயகம் பிள்ளையவர்கள் நீதிபதியாகப் பணியாற்றிய முதல் இந்தியர் ஆவார். [24] குளத்தூரில் வேளாண் குலத்தில் பிறந்தவர். மாயூரத்தில் வாழ்ந்தமையின் மாயூரம் முன்சீப் வேதநாயகம் பிள்ளை எனப்பட்டார். கிறித்தவராக இருந்தாலும் மிகச் சிறந்த தமிழ்ப் பற்றுக் கொண்டவர். இவர் பாடிய நீதிநூல் திருக்குறள் வரிசையில் வைத்து எண்ணத்தக்கது. சீரிய நட்பும், கொடைத் தன்மையும், தமிழ்ப் பற்றும் கொண்ட இவரது சிறப்புக் களைக் குளத்தூர்க்கோவை பாராட்டுகிறது.

4. 5. 2. 1. 2 மீனாட்சிசுந்தரனாரின் நெருங்கிய நண்பர் வேதநாயகம் பிள்ளை. இருவருமே கவிபாடும் ஆற்றல் உடையவர்கள். இவர்கள் நட்பின் விளைவாகப் பிறந்த தனிப் பாடல்கள் பல. அவை தனிச் செய்யுட் சிந்தாமணியுள் காணப்படுகின்றன. தருமபுர ஆதீனத்தின் சார்பில் ஒரு வழக்கில் தனக்கு உதவுமாறு மீனாட்சிசுந்தரனார் வேதநாயகரை அணுகிய பொழுது, அவர் பேருதவி புரிந்தார். அதன் பயனாய் தருமபுர ஆதீனம் வென்றது. இதனால் இவ்விருவர்தம் நட்பும் மிகவும் ஆழமானது.

4. 5. 2. 1. 3 வேதநாயகரைப் பாராட்ட விழைந்த மீனாட்சிசுந்தரனார், அவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு குளத்தூர்க் கோவையை இயற்றினார். அரங்கேற்றத்தின் பொழுது தக்க பரிசளித்துச் சிறப்புச் செய்தார் வேதநாயகர்.

### 4. 5. 2. 2 பாராட்டும் உத்திகள்

இந்நூல் அமைப்பால் அகப்பொருட் கோவையாகவும், நோக்கால் பாட்டுடைத் தலைவனின் சிறப்புக்களைப் பாராட்டுவதாகவும் உள்ளது. தம் கோவையில் வேதநாயகரைப் பாராட்ட ஆசிரியர் கையாளும் உத்திகளைக் கீழ்க் கண்டவாறு கூறலாம்,




### 4. 5. 2. 2. 1 நிகழ்விடத்தோடு தொடர்புபடுத்திப் புகழ்தல்

அகச்செய்திகளின் நிகழ்விடமாகக் குளத்தூர் காட்டப்படுகிறது என்பது முன்னரே கூறப்பட்டது.

> ''கோனாடன் மேழிக் கொடியாளன்
> மாலைக் குவளையினான்
> வானாட னேரும் புகழ்வேத நாயக
> வள்ளல் வெற்பில்,

தேனாடு பூங்குழலாய் உன்னைப் பிரியேன்''[25] என்று தலைவியிடம் தலைவன் கூறுகின்றான். இங்கு 'வேதநாயக வள்ளல் வெற்பில் நின்னைப் பிரியேன்' என்று கூறும் தலைவன், பாட்டுடைத் தலைவர்க்கு அடைமொழியாகக் கூறுவன அவர்தம் குலச்சிறப்புக் கூறுவனவாக அமைகின்றன. ''இவருடைய முன்னோராகிய மதுர நாயகம் பிள்ளை அரசர்க்கு முடிசூட்டும் உயர்பணி செய்துவந்த பெரியோர். எனவே இவர்கள் வாழ்ந்த நாட்டைக் கோனாடு (கோன்–அரசன்) என்றழைத்தனர்''[26] எனப் பேராசிரியர் மா. சேசையா இவர் பிறந்த நாடுபற்றிக் குறிப்பிடுகின்றார். அவ்வாறே கோனாடன் என்ற குறிப்பும் அமைகின்றது. மேழிக் கொடி என்பது கலப்பைக் கொடி. அது வேளாளர்க்குரியது; குவளை மாலையும் வேளாளர்க்குரியது. இவ்வாறு வேதநாயகரின் நாடும் குலமும் தலத்தோடு இணைத்துக் கூறப்படுகின்றன.

> ''அருளிற் பெரியன் பொருளிற் பெரிய னமைந்த பன்னூற்
> றெருளிற் பெரிய னெனும் வேத நாயகச் சேய்வரைக்கே''
> (குளத்தூர். 141)

எனுமிடத்தில் வேதநாயகரின் சிறப்புக்கள் நிகழிடமாகக் குளத்தூரைக் கொண்டு புகழப்படுகின்றன. இவ்வாறு அமைந்த பாடல்கள் பல.

### 4. 5. 2. 2. 2 உவமையாக்கிப் புகழ்தல்

#### 4. 5. 2. 2. 2. 1 அகச்செய்திகளுக்கு உவமையாக்குதல்

அகப்பொருட்கோவை மரபுக்கு ஏற்ப அகப்பொருட் காட்சிகள் அமைகின்றன. பாட்டுடைத் தலைவனின் சிறப்பியல்புகளை அக் காட்சிகளோடு இணைக்க வேண்டும் என்பது ஆசிரியர் நோக்கமாக அமைகிறது.

'மெய்யிது பொய்யிது எனத் திருத்தமுற வேதநாயகர் வழக்கு முடிவு எழுதுவது போலத் தலைவியின் கண், குழல், மார்பு, அல்குல் என்பவை மெய்யென்றும் அவள் இடைமட்டும் பொய்யென்றும் அவள் உருவத்தை எழுதுவேன்'[27] எனத் தலைவன் தன் ஆற்றலைக் கூறுகிறான். இங்கு மடலேறும் தலைவனின் ஓவியக் கலையாற்றலுக்கு வேதநாயக்கர் நீதிகூறும் பாங்கு உவமையாகின்றது.

தலைவியின் நட்பினைப் பெறாது கலங்குகின்றான் தலைவன் தன்நிலையினை எண்ணிப்பார்க்கின்றான். 'வேதநாயகம் பிள்ளையின் பால் நட்புக்கொள்ளாத பாவிகளைப் போலஉன் நட்பினைப் பெறாத நானும் பாவியாவேன்' எனத் தன்னையே பழித்துக் கூறிக் கொள்கிறான். பாட்டுடைத் தலைவனின் நட்பின் சிறப்பு அது கிட்டாதார் இழிவும் தலைவியின் நட்பிற்கும் அது கிட்டாத தலைவனின் நிலைக்கும் உவமையாகின்றன.

தலைவியின் எழில் நலத்தைப் பாங்கனிடம் புனைந்துரைக்கின்றான் தலைவன். அப்பொழுது வேதநாயகரின் சிறப்பியல்புகளே தலைவியின் உறுப்புக்களுக்கு உவமையாகின்றன. 'வேதநாயகர் தம் மார்பிலணிந்த மாலையிலுள்ள மலர் போன்று மலர்ந்த கண்கள்; அவரைப் பகைத்தார் மெலிவது போன்று மெலிந்த இடை; அவரை நட்டார் பெற்றது போன்று செருக்குப் பெற்று, இறுமாப்புடன் விளங்கும் கொங்கைகள் கொண்டவள் தலைவி'[28] எனத் தலைவியின் அழகு வேதநாயகரோடு உவமைப்படுத்திப் பேசப்பட்டுள்ளது.

'வேதநாயகரின் நட்பினை விரும்பிப் பெறாதவர் பொலிவிழத்தல் போல் தலைவன் வந்து காவாமையினால் என் கட்டழகு குலைந்தது'[29] எனத் தலைவி கவினழிபு உரைத்தலும், தலைவியின் கூந்தல் மலர் வாட்டம் வேதநாயகரைக் காணாத வறியவர் வாட்டத்திற்கு உவமையாதலும்[30] சிறப்புடையன.

### 4.5.2.2.2 இயற்கைப் பொருளுக்கு உவமையாதல்

இரவுக் குறிக்கு இடையீடாக நிலவு எழுகின்றது. இரவிலே மான்தேர் கடவித் தனிவருகிறான் தலைவன். அவர்களது களவு ஒழுக்கத்தை வெளிக்காட்டுவதாக நிலவு ஒளியோடு உதயமானது. இக்காட்சியை 'உலகத்தை விளக்கமுறச் செய்கின்ற வேதநாயகரின் புகழ்போலக் கதிர்வீசி நெடுவான் முகட்டில் நிலவு எழுந்தது'[3] என்கிறார்.

சூல் கொண்ட மேகங்கள் திரண்டு வரக் கார்காலம் தொடங்கியது. இக்கார்ப்பருவங் கண்டு புலம்புகிறாள் தலைவி. வேதநாயகரின் பொக்கிஷ அறைபுகுந்த வறிஞர்கள் தங்களுக்கு வேண்டிய செல்வத்தை வேண்டியாங்கு அள்ளி வருதல்போலக் கடல் நீரை மேகம் வாரி வந்ததே! இதற்கென் செய்வேன்[34] எனத் தவிக்கின்றாள். கார் கால மேகத்தின் திரட்சிக்கு வேதநாயகரிடம் பொருள் பெற்ற வறிஞர் நிலை உவமையாயிற்று.

இவ்வாறு இயற்கை வருணனைகளில் கூடப் பாட்டுடைத் தலைவனின் புகழ் பாடுகிறார்.

## 4. 5. 3 அக மரபுகள்

### 4. 5. 3. 1 கூற்றுக்கள்

குளத்தூர்க் கோவையில் கைக்கிளை முதலாகப் பொருள்வயிற் பிரிவு ஈறாக 33 கிளவித் தொகைகள் இடம் பெறுகின்றன. கைக்கிளை முதல் உடன்போக்கிடையீடு வரை களவியலும், வரைதல் முதல் பொருள்வயின் பிரிவு வரை கற்பியலும் பேசப்படுகின்றன. 438 துறைப்பாடல்கள் காணப்படுகின்றன. கூற்று வாரியான பகுப்பு:

| | | | |
|---|---|---|---|
| தோழி கூற்று | 165 | கண்டோர் கூற்று | 11 |
| தலைவன் கூற்று | 133 | பரத்தையர் கூற்று | 2 |
| தலைவி கூற்று | 78 | பாணன் கூற்று | 1 |
| செவிலி கூற்று | 19 | பாங்கியர் கூற்று | 1 |
| நற்றாய் கூற்று | 14 | வாயில்கள் கூற்று | 1 |
| பாங்கன் கூற்று | 13 | | |

#### 4. 5. 3.1. 1 தோழி கூற்று

தோழி கூற்று எண்ணிக்கையில் மிகுந்துள்ளது. தலைவனைக் கண்டு பேசி, அவன் உள்ள நிலையறிந்து உதவுகிறாள்; தலைவியின் மனக் கருத்தறிந்து அவளை உடன்படச் செய்கிறாள்; களவு, கற்பு என்ற இரு காலத்திலும் தலைவனுக்கும் தலைவிக்கும் பாலமாய்

அமைகிறாள்; செவிலி நற்றாய் போன்றோருக்குத் தலைவியின் மனத்தை உணர்த்துபவளாய் நிற்கிறாள். இவ்வாறு பல நிலைகளில் தோழி இயங்குவதால் தோழி கூற்றுப் பாடல்கள் மிகுந்துள்ளன.

## 4. 5. 3. 1. 2 தலைவன் கூற்று

கைக்கிளை, இயற்கைப்புணர்ச்சி, வன்புறை, தெளிவு, பிரிவுழி மகிழ்ச்சி, பிரிவுழிக் கலங்கல், இடந்தலைப் பாடு என்ற ஏழு கிளவித் தொகைகளிலும் முழுமையும் தலைவன் கூற்றே இடம் பெறுகின்றன.

பாங்கற் கூட்டம், பாங்கி மதியுடன்பாடு, பாங்கியிற் கூட்டம் ஆகிய பகுதிகளில் தலைவன் பாங்கனோடும், பாங்கியோடும் உரையாடும் போக்கில் கூற்றுக்கள் அமைந்துள்ளன.

இதன் பின்னர்த் தலைவன் கூற்றுக்கள் நிகழுமிடங்கள் வரவரக் குறைந்து விடுகின்றன. தலைவியை அடைதற்கு முன் அவன் உள்ளத்தில் இருந்த பரபரப்பு உணர்வினால் மிகுதியாகப் பேசுதலும், பின் பாங்கன் பாங்கி உதவியால் தலைவியை அடைந்த விடத்து அவ்வுணர்வு ஓரளவு சமனப் பட்ட நிலையில் கூற்றுக்கள் ஓரளவு குறைதலும், திருமணத்தின் பின் இல்வாழ்க்கையில் பரத்தையர் ஒழுக்கத்தினால் விலகிச் செல்லுமிடத்து அவன் கூற்றுக் கள் மிகுதியும் குறைதலுமாகக் காட்டப்படும் இக்கூற்றமைப்பு இயல்பான உளவியல் போக்கில் அமைந்துள்ளது.

## 4. 5. 3. 1. 3 தலைவி கூற்று

தலைவி கூற்றாக அமைவன எல்லாம் அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் பெண்மைக் குணங்கட்கு ஏற்பவே அமைகின்றன. களவுக் காலத்துத் தலைவனைக் கண்டவிடத்துத் தலைவி பேசுவனவாக அமைவன மிகவும் குறைவே. தலைவனைப் பிரிவுழிக் கலங்கலும், அஞ்சுதலும், அறத்தொடு நிற்றலும், தோழியொடும் தனித்தும் புலம்பலும் தலைவி கூற்றாக அமைகின்றன.

## 4. 5. 3. 2 கூற்றுக்கள் வழி மாந்தர் இயல்பு

4. 5. 3. 2. 1 தலைவியின் அன்புக்குப் பாத்திரமான தலைவன் பேராண்மை மிக்கவன். 'செம்பருந்துகட்கூண் செய்அம்பினை உடையவன்''[38] சொல்லாற்றல் மிக்கவன். 'உயர்ந்த குலத்தோன்ற

லாகிய நீ குறக்குலத் தலைவியிடம காதல் கொள்ளுதல் தகாது[34] எனத் தோழி தலைவியின் குலவேறுபாட்டினைக் கூறி மறுக்கிறாள். அதற்குத் தலைவன் 'உயர்ந்த கதிரவன் சேற்றில் மலரும் தாமரையை விரும்புவதில் நாம் தவறு காண்பதில்லையே. அது போன்றதுதான் என் காதலும்'[35] என உரைக்கின்றான்.

குலவேறுபாடற்ற சமுதாயத்தில்தான் இத்தகு அகச்செய்திகள் பேசப்படும். ஆனால் மீனாட்சிசுந்தரனாரின் காலச் சூழல் சாதி வேறுபாடு மிகுதியாகக் காணப்பட்ட காலம். அகத்திணை மரபு கருதி இவ்வாறு தலைவன் கூற்றினை அமைத்துள்ளமை போற்றுதற் குரியது.

4.5.3.2.2 தலைவியின் கூற்றுக்கள் அவளுடைய அன்பு உள்ளத்தைப் புலப்படுத்துவனவாக அமைகின்றன. ஈருடல் ஓருயிர் என்ற நிலை இல்லாமல், உடலும் ஒன்றே என்று வாழவிரும்பும் தலைவியின் உள்ளம் படைத்தவனையே 'பாவி' எனப் பழிக்கிறது.

> '' ஆவியொன் றாகஅமைந்தது போன்மெய்யுமன்று செய்த
> பாவியொன் றாகப் படைத்திலனே'' [36]

என வருந்துகிறாள்.

பஞ்சிற்படினும் பதைக்கும் மென்மையான பாதங்கள் உடை யவள் தலைவி (குளத்தூர். 310). அதனால் அவளை உடன் போக்கிற்கு அழைத்துச் செல்ல மறுக்கிறான் தலைவன். ஆனால் அவளோ, 'பாலைக் காடோ புறத்தளவே சுடும். ஆனால் அகத்தையும் சுடுமே இவ்வில்லம், என வருந்துகிறாள்.

இற்செறிக்கப்பட்ட தலைவி புலம்புவது மிக இயல்பாக அமைகின்றது. 'தினை விளைகிறது என்று மகிழ்ந்திருந்தோமே! நம் தீவினையல்லவா விளைந்திருக்கிறது[37] என வருந்துவது நாம் அன்றாடம் வாழ்வியலில் காணும் பெண்ணியல்பாகவே அமைகிறது.

4.5.3.2.3 தோழி கூற்றுக்கள் அவளது நனி நாகரிகத்தையும் பேரறிவையும் காட்டுகின்றன.

தலைவனோடு இன்புறுவதற்காகத் தலைவியைக் கொண்டு போய்க் குறியிடத்து விடும் தோழி, தலைவியின் நாண உணர்வினை அறிந்தோ, அல்லது தான் நாணியோ நாகரிகமாகப் பேசுகிறாள். '' நான் மலர் பறித்து வருவேன். அதுவரை நீ இங்குள்ள மயில் கூட்டம் நிலவின் ஒளி வெள்ளத்தில் கலந்து மகிழ்வதைக் கண்டு இரு'' [38] என்று கூறிப் பிரிகின்றாள். 'தலைவனின் அன்பு வெள்ளத்தில் கலந்து மகிழ்க, என்பது தோழி கூற்றின் உட் கருத் தாக அமைகின்றது.

பிரிவுக்காலத்தில் வருந்தும் தலைவியிடம் ''இறப்பும் பிறப்பும் மாறிமாறி வருதல் இயல்பு. அதுபோலப் பிரிந்தவர் கூடலும், கூடியவர் பிரிதலும் இயல்பாகக் கொள்ளல்வேண்டும்''[39] என்று கூறித் தேற்றுவது அவளது உலகியல் அறிவைப் புலப்படுத்துகிறது.

## 4. 5. 3. 3 முதல், கரு, உரிப் பொருள்கள்

அகச்செய்திகள் முழுமையும் வேதநாயக வேள்வரைவாய் நடந்ததாகக் காட்டப்பட்டாலும் ஐந்திணைக்கோவை என்பதால் ஐவகை நிலங்களும் படைத்துமொழியப்படுகின்றன.

### 4. 5. 3. 3. 1 குறிஞ்சி

கூடலும் கூடல் நிமித்தமும் குறிஞ்சிக்குரியன. இங்கு தலைவன், 'வேதநாயக வேள் வரையில் பொன்னிறப் பாறைகளில் மாதவிப் பந்தரினின்றும் உதிர்ந்த மலர்கள் அழகிய பாயலாய் அமைந்துள்ள இவ்விடம் நாம் இன்னிசையோர் மணம் இனிதாற்று தற்குரியது'[40] என்கிறான். இன்னிசையோர் மணம் என்பது கந்தர்வ மணம். அதற்குரிய குறிஞ்சி நிலக் கருப் பொருள் கூறப்படுகின்றது. குறிஞ்சி நிலமக்கள் வாழ்வியலும் பேசப்படுகிறது. அந்நில மகளிர் தளிர் கொய்தும், அருவியாடியும், சோலைகளில் விளையாடுவர்[41] முத்துமாலைகளையும் வேங்கைமலர்மாலைகளையும் சூடுவர்; சந்தனம் பூசுவர்; குறிஞ்சிப் பண்பாடுவர். படர்சுனை புக்காடுவர். பிண்டி நிழலில் விளையாடுவர்.[42] பாலில் சமைத்த தினைமூரலும், வேட்டையாடி வந்த முயல்கறியும் தேனும் உணவாகக் கொள்வர் என்பன போன்ற செய்திகள் பேசப்படுகின்றன.

### 4. 5. 3. 3. 2 முல்லை

தலைவன் ஓதுதற்குப் பிரிந்த காலத்தில் அவன் வரவினை எதிர்பார்த்திருந்து வருந்தும் தலைவியின் நிலை, முல்லை ஒழுக்கத்தைக் குறிக்கிறது. கார்கால வருணனைகள் முல்லைக்குரிய பருவ வருணனைகளாக அமைகின்றன, 'கடல்நீர் மிகுதியாக உண்ட மேகம், சாபங்கோட்டிச் சினங்கொள் அம்புமழை பொழி கின்றதே'[43] எனத் தலைவி கார்ப்பருவங் கண்டு புலம்புதல் முல்லை சான்ற கற்பினைக் காட்டுகின்றது.

### 4. 5. 3. 3. 3 நெய்தல்

'வேதநாயகர் நாட்டிலமைந்த கடலே! நிலவையும் படுக்கை யையும் நீ வெறுத்தாய்; பசந்த நிறம் பெற்றாய்; அலைக்கரங்களால் வளையாகிய சங்குகளை எறிகின்றாய்' இரவிலும் உறங்காய்; நீயும்

நின் கணவனைப் பிரிந்தாய் கொல்?'[45] எனத் தன் உள்ள நிலையைக் கடல்பால் காணும் தலைவியின் மனநிலை நெய்தல் ஒழுக்கத்தைக் காட்டுகின்றது.

## 4. 5. 3. 3. 4 மருதம்

அகத்திணைச் செய்திகளின் நிகழ்விடமாக அமையும் குளத்தூர் மருத நிலவளம் சான்றது. 'அறல்மீன் சிரல்கவர் செய் குளத்தூர்'[45] எனவும், 'விண்டொட்டுநிற்க நெற்போர் புரிகுளத்தூர்'[46] எனவும் குளத்தூரின் மருதவளம் பேசப்படுகின்றது.

மருதநிலத்திற்குரிய பரத்தையர் ஒழுக்கமும் இக்கோவையில் பேசப்படுகிறது. 'விழிவாய் விலைக் காரிகையர்'[47] எனப் பொது மகளிரைக் குறிப்பிடுகின்றார். தலைவனின்புற ஒழுக்கம் மிகுந்திருந்த தன்மை ஒரு பாடலில் அங்கதச் சுவையோடு கூறப்படுகிறது. இக் காட்சியில் இடம் பெறுவோர் நால்வர். தெருவில் விளையாடுகின்றது ஒரு குழந்தை. அதனைக்கண்டு, வாரி எடுத்து முத்தம் கொடுக்கிறாள் ஒருபரத்தை. இக்காட்சியைக் கண்ட ஒரு பெண், 'இவள் உன் சிற்றன்னை என்று குழந்தையிடம் கூறுகிறாள். அதுகேட்டஇன்னொரு பெண், 'இவள் போலும் சிற்றன்னைகள் இன்னும்பலர் இவ்வூரில் உளர்' என்று இடக்காகக் கூறுகிறாள்.' ஒருநாடகம் போலமைக்கப் பட்ட இக்காட்சி தலைவனின் புறவொழுக்கினையும், ஊர்ப் பெண்டி ரின் வம்பு பேசும் இயல்பையும் புலப்படுத்துகின்றது.

## 4. 5. 3. 3. 5 பாலை

தலைவன் தலைவியை உடன்போக்காக அழைத்துச் செல்லு மிடத்துப் பாலைக் காடுபற்றிப் பேசப்படுகிறது. 'பஞ்சும் அஞ்சும் என் மெல்லடிப் பாவைவெம் பரல்செறி கானம் எவ்வாறு ஆற்றுவாள்'[48] எனவும் 'மனைவாயடுபுலிப் பார்வைக்கு அஞ்சும் என் மகள், சுரத்தில் முழங்கிவரும் வெம்புலியை எவ்வாறு நோக்குவாள்'[49] எனவும் நற்றாய் புலம்பும் பகுதிகள் பாலைக் காட்டின் வெம்மையைக் காட்டுவன.

4. 5. 3. 3. 6 அகமரபுக்கேற்ப ஐந்திணையும், அவற்றுக்குரிய கரு, உரிப் பொருள்களும் ஆங்காங்கே விளக்கம் பெறுகின்றன. சங்கப் பாடல்கள் போல் முதல், கரு, உரிப் பொருட்களுக்கு முதன்மையிடம் தரப்படவில்லை; எனினும் அவை புறக்கணிக்கப்படாமை குறிப்பிடத் தக்கது.

## 4. 5. 3. 4 உள்ளுறை உவமம்

உரிப்பொருளை விளக்கச் சங்கச் சான்றோர் கருப் பொருட் காட்சிகளை உள்ளுறை உவமங்களாக அமைத்தனர்.

தான் கூற வந்த அகவொழுக்கத்தை உட்பொதிந்து கூறும் நாகரிகப் பண்பின் வெளிப்பாடே இவ்வுள்ளுறை உவமங்கள்.

தெளிந்த நீர் இருக்கும் பொழுது அதனை உட்கொள்ளாத எருமை, கலங்கல் நீரில் திளைத்து மகிழும் வயலூரன் (குளத்தூர். 385) எனத் தலைவனைக் குறிக்கிறாள் தலைவி. இங்குக்கலங்கல் நீரை விரும்பும் எருமை தலைவனுக்கும், கலங்கல் நீர் பரத்தையர்க்கும், தெளிந்த நீர் தலைவிக்கும் உள்ளுறையாக அமைந்தன.

மீனாட்சிசுந்தரனார் பயன்படுத்தும் உள்ளுறை உவமங்கள் பற்றிய செய்தியின் விரிவு 'அணிநலன்' என்ற இயலில் ஆராயப் பட்டுள்ளது.

## 4. 6 வியாசைக்கோவை

19- ஆம் நூற்றாண்டில் சென்னை நகரில் பெருவள்ளலாய் விளங்கியவர் விநாயகமுதலியார் என்பவர். இவர் மயிலாப்பூர் கபாலீசுவரர் கோயில் குளத்தின் தென்பகுதியில் சித்திரச் சத்திரம் என்னும் சத்திரம் அமைத்து, அன்னதானம் செய்தவர்.

சென்னை சென்றிருந்த பொழுது மீனாட்சிசுந்தரனார். விநாயகமுதலியாரின் சத்திரத்தில் தங்கும் வாய்ப்பு ஏற்பட்டது. விநாயகமுதலியார் ஏற்படுத்தியிருந்த அறக்கட்டளையில் உள்ளம் மகிழ்ந்த மீனாட்சிசுந்தரனார் அச்சத்திரத்தைப் புகழ்ந்து சித்திரச் சத்திரப் புகழ்ச்சிமாலை எனும் நூல் ஒன்று இயற்றினார். பின்னர், அவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு வியாசைக்கோவை இயற்றத் தொடங்கி முதல் நூறு பாடல்கள் மட்டும் எழுதினார். தம் மாணவர் வித்துவான் தியாகராச செட்டியாரைக் கொண்டு இந்நூலை முடிக்கச் செய்தார் என்பது முன்னர்க் கூறப்பட்டது, விநாயகமுதலியார் வேண்டுகோள்படி மயிலைப்புராணமும் பாடினார். அந்நூல்முற்றுப்பெறவில்லை.

### 4. 6. 1 வியாசை

4. 6. 1. 1 வியாசை என்பது விநாயகமுதலியார் பிறந்த ஊராகிய வியாசர்பாடி என்பதன் மரூஉ. இது சென்னை மாவட்டத்தில் அமைந்த ஒரு பகுதி. விநாயகமுதலியார் பிறந்தமையால் மட்டுமே பெருமை பெறும் ஊர். வேறு வரலாற்றுச் சிறப்பு ஏதும் காணப் படவில்லை. தலத்தால் பெயர் பெறும் கோவை மரபு பற்றி இந்நூல் வியாசைக்கோவை எனப் பெயர் பெற்றுள்ளது. வியாசைக்கோவை யில் ஊர்ச் சிறப்பு மிகுதியாகப் பேசப்படவில்லை. மாடமாளிகைகள்

பற்றியும் வயல்வளம் பற்றிபும் பேசுவன இலக்கியக் கற்பனைக ளாகவே அமைகின்றன.

### 4.6.1.2 அகச்செய்திகளின் நிகழ்விடம்

கோவையில் அமையும் அகச்செய்திகள் வியாசையில் நடந்தவையாகக் காட்டப்படுகின்றன. 'பட்டார் குவளைத் தொடையான் விநாயக வள்ளல் வெற்பில், தலைவியின் மெய் தொட்டுப் பயிலும் இன்பம் எனைப்போல் பெற்றார் யார்?[50] எனத் தலைவன் இன்புறுவதாக வரும் பகுதி, மெய் தொட்டுப் பயிறல் நடந்த வியாசை வெற்பைப் பின்னணியாகக் காட்டுகிறது. வேளாளர் குலத்தில் பிறந்த விநாயகமுதலியாரின் குவளை மலர்மாலையும் தலத்தோடு இணைத்துப் பேசப்படுகிறது.

' அருச்சுனமால் சேய் விநாயகச் செம்மல் வெற்பில், தலைவி யை நினைத்துத் தலைவன் இரங்குவதாக அமைக்கிறார். தலைவன் நீடுநினைந்து இரங்கும் இடம் ' விநாயகச் செம்மல் வெற்பு' என்று காட்டப்படுகிறது. விநாயகமுதலியாரின் தந்தை பெயர் அருச்சுன மால் என்பதும் இங்குப் பேசப்படுகிறது.

ஐந்திணைக்குரிய ஐவகை நிலமும், கரு உரிப் பொருள்களும் முதல் நூறு பாடல்களில் அமையவில்லை. விநாயக மால் வரை, வெற்பு, சிலம்பு என்றும், விநாயக பூபன் தொண்டைநாடு என்றும் குறிஞ்சிநிலம் மட்டுமே குறிக்கப்படுகின்றது.

### 4.6.1.3 தலம் உவமையாதல்

நலமிக்க ஊர், மகளிர்க்கு உவமையாகும் இலக்கிய மரபுப்படி இங்கு வியாசை நகர் தலைவிக்கு இரண்டு பாடல்களில் உவமை யாக்கப்பட்டுள்ளது.

> ''மெய்யுங் கடிுத லிலாவன்பும் பூண்ட விநாயகவேள்
> செய்யுங் கடிதட முஞ்சூழ் நன்னாடன்ன சேயிழையீர்''[51]

என்று தலைவியைத் தலைவன் அழைக்கிறான். வயல் வளமும், மிக்க காவலும் கொண்ட வியாசைநகர் போன்றவளே என்னுமிடத்துத் தலைவியின் மிக்க எழிலும், அதற்கேற்ற காவலும் குறிப்பாய் உணர்த்தப்படுகின்றன. அதே போன்று ''விநாயக பூபன் வரை யனையாய்''[52] என்றும் தோழியால் தலைவி அழைக்கப்படுகிறாள்.

### 4.6.2 பாட்டுடைத் தலைவன்

இயற்கைப் புணர்ச்சி எய்திய தலைவி தன் நாணழிவிற்காக இரங்குகிறாள்.

> ''பாராய் திருவிடை யார்கோத் திரவுற் பவன்குவளைத்
> தாரார் புயத்தன் விநாயக பூபன் றனையடுத்துச்
> சேரார்தம் வாழ்க்கை யெனநாணந் தான்சென்று
> தேய்ந்தது''[53]

என்று விநாயகமுதலியாரைச் சேரார்தம் தேய்வினைத் தன் நாண் அழிவிற்கு உவமையாக்குகிறாள். பாட்டுடைத் தலைவனின் வள்ளல் தன்மையும், சேரார் பெறும் துன்பமும் கூறிச் சேர்ந்தார் பெறும் இன்பம் உய்த்துணரப்பட்டது. தவிர, 'திருவிடையார் கோத்திர உற்பவன்' எனப் பாட்டுடைத் தலைவரின் கோத்திரமும் குறிப்பிடப் படுகிறது.

தலைவிக்குத் தானே அணிசெய்யும் தலைவன் அவள் நாணியது உணர்ந்து தெளிவிக்கிறான். 'கூராழியும் சங்கமும் ஏந்தியிருப்பதொன்றே திருமாலுக்கும் விநாயகமுதலியாருக்கும் உள்ள வேறுபாடு; இருவரும் காத்தல் தொழிலில் ஒத்தவரே. அது போலக் கையில் ஆழியும் (மோதிரம்) சங்கும் (வளையல்) அணிந் திருப்பது ஒன்றே உன் தோழிக்கும் எனக்கும் உள்ளவேறுபாடு. அணிசெய்யும் தொழிலில் இருவரும் ஒத்தவரே'[54] எனக் கூறுகிறான். இங்கு காத்தல் தெய்வமாகிய திருமால் பாட்டுடைத் தலைவனுக்கு உவமையாகி, அவ்விருவர் நிலை தோழிக்கும், தலைவனுக்கும் உவமையாயிற்று.

தோழியின் உதவியை நாடிவந்த தலைவன் தன்னிலை கூறுகின்றான். 'விநாயக தாருவெனும் அன்னை அல்லாது, கலிநோய் தவிர்க்க வேறு கதி இல்லாதது போல, என் காமநோய் தீர்க்க உன்னையன்றி வேறு கதி உண்டோ'[55] எனத் தோழியை வினவுகின்றான். இங்கு பாட்டுடைத் தலைவனின் அருளியல் தோழியின் அருளியலுக்கு உவமையாகின்றது.

தலைவியைப் புணர்ந்து புகழும் தலைவன் 'விநாயக பூபனுக்குக் கயிலை இறைவன் எத்தகு அன்பிற்குரியனோ, அத்தகையவள் தலைவி எனக்கு'[56] என்கிறான். சிற்றின்பத்திற்குப் பேரின்பம் உவமையாகின்றது. பாட்டுடைத் தலைவனின் இறைப் பற்றும் விளக்கம் பெறுகிறது.

### 4. 6. 3 அகமரபுகள்

வியாசைக்கோவையின் முதல் நூறு பாடல்களை மட்டும் கொண்டு பார்க்குமிடத்து, முழுமையான அகமரபுகளைக் காண வியலாது. கைக்கிளை முதலாகப் பாங்கியிற் கூட்டம் வரையிலும் பத்துக் கிளவித்தொகைகள் இதனுள் அடங்குகின்றன. பாங்கியிற் கூட்டம் முழுமை பெறவில்லை.

4. 6. 3. 1 பெரும்பாலும் தலைவன் கூற்றுக்களும், பாங்கற் கூட்டத்தில் பாங்கன் கூற்றுக்களும், பாங்கியிற் கூட்டம், பாங்கி மதியுடன்பாடு என்பவற்றில் தோழி கூற்றுக்களும், தலைவி கூற்றுக் களும் இடம் பெறுகின்றன.

4. 6. 3. 1. 1 இக்கூற்றுக்கள் கூறுவோர் தம்மியல்புகளைப் புலப் படுத்துவனவாக அமைகின்றன. தலைவி, தலைவன் முன் தன் நாணம் தோற்றுவிடும் இயல்பை மிக நயமாகக் கூறுகிறாள். 'நம் நாணம் பெறுநாண் (பாடலில் உள்ளபடி) எனினும் தலைவனின் மையலாகிய மதயானையைக் கட்டித் தடுக்கும் ஆற்றல் இல்லாது, தாமரைத் தண்டின் நூல்போல் மெலிகின்றதே'[75] என்கிறாள். அவள்தன் பெறுநாண் தலைவன் முன்னிலையில் தாமரை நூல் போலானது எனப், பெறுநாண் என்ற சொல் கயிறு, நாணம் இரண்டிற்கும் சிலேடையாகித் தலைவியின் மென்மை உணர்வைப் புலப்படுத்து கிறது.

4. 6. 3. 1. 2. தலைவியின் மீது காதல் கொண்ட தலைவன் தன் மையலைத் தீர்த்தற்கு உரிய வழியினை ஆராய்கிறான். அப்பொழுது ஆயவெள்ளத்து இடைநிற்கும் தலைவியின் பார்வை ஒரு தோழியின் முகத்தில் சென்று பதிவதைப் பார்க்கின்றான். 'இவர் கண்ணென்னும் கயல் ஓர் பூங்கொடி வாண் முகம் என்னும் பெருந்தடம் போய்விழுமே' எனக்கூறி அத்தோழியையே வாயிலாக எண்ணி மகிழ்கிறான். தலைவியின் பார்வையாகிய மீன், தோழியின் முகமாகிய தடத்தில் வீழ்ந்தது எனும் உருவகம் இருவர்தம் நட்பின் நெருக்கத்தைக் காட்டுவதாக அமைகிறது.

இவ்வாறுஅகமரபுக்கேற்ற செய்திகளை வியாசைக்கோவையில் பல பாடல்களில் காணலாம்.

## 4. 7. சீகாழிக்கோவை

சீகாழிக்கோவையில், சீகாழியில் எழுந்தருளியிருக்கும் பிரம்ம புரீசரே பாட்டுடைத் தலைவர். சீகாழிக் தலம் சைவத் தலங்களில் சிறப்புப் பெற்ற ஒன்று. இக்கோவை நூலில் தலமும், பாட்டுடைத்

கோவைக்குரிய அக மரபுகள் எந்நிலையில் காக்கப்பட்டுள்ளன என்பது இப்பகுதியில் விளக்கப்படுகின்றது.

தலைவரும் எவ்வாறு போற்றப்படுகின்றனர்,

## 4. 7. 1. சீகாழி

சோழ நாட்டில் கழுமல வளநாடு என்ற நாட்டின் தலைநகராக விளங்கியது சீகாழி. காவிரிக்கு வடகரையிலுள்ள 63 சிவத்தலங்களின் வரிசையில் சீகாழி 14-வது திருத்தலமாகும்.

இறைவன் : பிரமபுரீசர் (திருத் தோணியப்பர்)
இறைவி : திருநிலைநாயகி (பெரிய நாயகி)
தீர்த்தம் : பிரமதீர்த்தம் (கழுமல ஆறு)

### 4. 7. 1. 1 பெயர்க் காரணம்

4. 7. 1. 1. 1 ''காளியினால் பூசிக்கப்பட்ட தலமாதலின் ஸ்ரீ காளிபுரம் என்ற பெயர் அமைந்தது. அது ஸ்ரீ காளியாகி நாளடைவில் சீகாழியாயிற்று''[58] என்பர்.

4. 7. 1. 1. 2 பன்னிரு திருப் பெயர்களைப் பெற்றது சீகாழி. இதனை,

''பிரம்மபுரம் வேணுபுரம் பெரும்புகலி வெங்குருநீர்ப்
பொருவில் திருத்தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவுஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்''[58]

எனச் சேக்கிழார் குறித்துச் செல்கிறார். திருஞானசம்பந்தர் இப் பன்னிரு பெயர்களையும் தம் பாடலில் மிகுதியாகப் பாடியுள்ளார். 'பல்பெயர்ப் பத்து'' என்ற பதிகம் முதல் திருமுறையில் அமைந் துள்ளது. இதன் ஒவ்வொரு பாடலும் இப்பன்னிரு பெயர்களையும் குறித்துச் செல்கிறது.

''இப்பன்னிரு திருப்பெயர்களும் பொருட்டன்மையிலே ஒன்றாகிய ஒரே தலத்தைக் குறிப்பனவாயினும் வெவ்வேறு காரணம் பற்றி வெவ்வேறு காலங்களிலே அத்திருத்தலத்திற்கு அமைந்த பெயர்களாம்''[60] என்பர் (காண்க : பின்னிணைப்பு எண் 3).

4. 7. 1. 1. 3 சீகாழிக்கோவையில் மீனாட்சிசுந்தரனார் இப்பன்னிரு பெயர்களின் காரணத்தைக் குறிக்கவில்லை. ஆனால், ''பன்னிரு நாமப் பதி'' (சீகாழி, 45, 258) என்று இரண்டு இடங்களில் குறிப்பிடுகின்றார்.

### 4.7.1.2 கோயில் சிறப்பு

திருமலை என்ற கட்டுமலையின்மேல் பெரிய திருவுருவத்துடன் தோணியப்பர் எழுந்தருளியுள்ளார். சட்டையப்பர் காரிய சித்தி தருபவர். இவருக்குத் தனிக் கோயில் உள்ளது. தேவஸ்தானத்திற்கே சட்டையப்பர் தேவஸ்தானம் எனப் பெயர் வழங்குகின்றது. பிரம்மலிங்கர் கோயில், திருநிலைநாயகி கோயில், திருஞான சம்பந்தர் கோயில் ஆகியனவும் உள்ளன. காழிச் சீராம விண்ணகரம் என்ற பெருமாள் கோயிலும் உண்டு.

### 4.7.1.3 விழாச்சிறப்பு

சித்திரை மாதம் இரண்டாம் நாள் விழா திருமுலைப்பால் திருவிழா எனப்படுகிறது. இது திருஞானசம்பந்தர் இறைவியிடம் ஞானப்பால் பெற்ற நிகழ்ச்சியைச் சிறப்பிப்பதாக அமைந்துள்ளது.

### 4.7.1.4 தேவாரம் பெற்ற தலம்

சீகாழி திருஞான சம்பந்தரும் சுணநாதரும் அவதரித்த சிறப்புடையது. சம்பந்தர் இறைவியிடம் ஞானப் பாலுண்டு, தோடுடைய செவியன் என்ற முதல் பதிகம் பாடியதும் இத்தலத்தில்தான். சம்பந்தரால் 67 பதிகங்களும், அப்பரால் 3 பதிகங்களும், சுந்தரரால் 1 பதிகமும், ஆக 71 தேவாரப் பதிகங்களைப் பெற்றுள்ளது இத்தலம்.

### 4.7.1.5 பாடல் பெற்ற தலம்

பட்டினத்தடிகளால் திருக்கழுமல மும்மணிக்கோவையும், வடுகநாத தேசிகரால் காழியந்தாதியும், அருணாசலக் கவிராயரால் சீகாழித்தல புராணமும் பாடப்பட்டுள்ளன. பழைய உலா ஒன்றும் இருந்ததாகக் கூறப்படுகிறது. 18 ஆம் நூற்றாண்டில் அருணாசலக்கவிராயரால் சீகாழிக்கோவை ஒன்றும் எழுதப்பட்டதாக ந. வீ. செயராமன் குறிப்பிடுகின்றார்.[61] இந்நூல் பற்றிய வேறு செய்திகள் கிடைத்தில.

### 4.7.1.6 கோவையில் சீகாழி

மேலே குறித்த சீகாழி பற்றிய செய்திகளுள் சீகாழிக் கோவையில் கூறப்பட்டவை சிலவே. எனினும் மூர்த்தி, தலம், தீர்த்தம் எனும் இவற்றின் சிறப்பு ஓரளவு பேசப்படுகின்றன.

#### 4.7.1.6.1 மூர்த்தச்சிறப்பு

4.7.1.6.1.1 இத்தலத்தில் எழுந்தருளிய விநாயகர் ஆபத்துக்காத்த விநாயகர் எனப்படுகின்றார். இவரைக் காப்புச் செய்யுள் மூன்றிலும் போற்றிய ஆசிரியர் 84, 288 ஆகிய பாடல்களிலும் போற்றுகின்றார்.

4. 7. 1. 6. 1. 2 சீகாழியிலுள்ள சட்டைநாதர் திருக்கோலம் சிறப்புக் குரியது. நிலம் கடந்த காரணத்தினால் திருமால் தருக்குளி அதனைக் குறைப்பதற்காக அவருடைய தோலை உரித்துச் சட்டை யாக அணிந்தவர் சட்டைநாதர். இச்செய்தியை 332-வது பாடல் தருகிறது. சட்டைநாதர் பற்றிய குறிப்புக்களை 1, 45, 88, 201, 202, 216, 284, 332, 351, 403, 438 ஆகிய பாடல்களில் காணலாம்.

4. 7. 1. 6. 1. 3 இங்கு இறைவன் திருநிலைநாயகியை இடப் பக்கத்தே கொண்டு அமர்ந்துள்ளான். நிலைநங்கையும் இறைவனும் அமர, நடுவே முருகப் பெருமான் அமர்ந்திருக்கும் சோமாஸ்கந்தர் வடிவம் 36-வது பாடலில் குறிக்கப்படுகிறது.

4. 7. 1. 6. 1. 4 பொது இறையாகிய சிவபெருமானின் பெருமை களும் புராணச் செய்திகளுமே பெரிதும் பேசப்படுகின்றன. தலத்துக் குரிய இறைவனாகிய தோணியப்பரைப் பற்றியோ, பிரமபுரீசனைப் பற்றியோ தனியே எடுத்து விளக்கும் புராணச் செய்திகள் காணப் படவில்லை.

## 4. 7. 1. 6. 2. தலச்சிறப்பு

4. 7. 1. 6. 2. 1 திருமகளும், கலைமகளும் உறைதற்குரிய இடம் கழுமலம். (3, 414, 424) ; திருமாலும் பிரமனும் பூசித்துப் பயன் பட்ட திருத்தலம் (147) அமரர்கள் வணங்கும் கழுமலம் என்பன போன்ற செய்திகள் தேவர்களும் இத்தலத்தை வழிபட்ட பெருமை யினைக் காட்டுகின்றன.

4. 7. 1. 6. 2. 2 திருஞான சம்பந்தர் ஞானப்பால் உண்ட செய்தி பல பாடல்களில் இடம் பெறுகின்றது. இவரது பதிகங்களுள் திருவெழுகூற்றிருக்கை (56), திருமாலைமாற்றுப் பதிகம் (89), திருநீலகண்டத் தமிழ் (515) என்பன தலப் பெருமையோடு இணைத்துப் பேசப்படுகின்றன.

## 4. 7. 1. 6. 2. 3 அமைப்பிடம் காட்டல்

உடன்போக்கில் அழைத்துச் செல்லும் தலைவன், தலை விக்குத் ‘ தன் ஊர் அணிமை சாற்றல்‘ என்ற துறையில் சீகாழி எங்கு அமைந்துள்ளது என்ற குறிப்புக் காட்டப்படுகின்றது. உடல் நோயை மண்ணிட்டு நீக்கும் சிறப்புடைய புள்ளிருக்கு வேளூரைக் கடந்து சென்றால், அதனை அடுத்துக் கடல் சூழ்வது போல் பொழில் சூழ் காளி அமைந்துள்ளது’[63] என்ற தலைவன் கூற்று

புள்ளிருக்கு வேளூருக்கு அடுத்துச் சீகாழி அமைந்துள்ளதைக் குறிக்கிறது. இவ்விடத்தில் சீகாழிக்கு வழிகாட்டுவதற்கு மற்றொரு சைவத் தலத்தையே ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

## 4.7. 1. 6. 2. 4 இயற்கை வளம்

சோழ நாட்டின் இயல்புக்கேற்ப வயல் வளம் பெற்ற தலம் சீகாழி. இதன் வளம் அழகிய வருணனைகளாக அமைந்துள்ளன.

காய் மாறிலாத் தென்னங்காச் சோலை[63] என மாறாது காய்க்கும் தென்னஞ்சோலைகள் குறிப்பிடப்படுகின்றன.

''மடையெங்கு முத்தஞ் சொரிந்தற றேக்கி வளைகழனிப்
புடையெங்கு நீந்தும் புகலி''[64]

என்பன போல வரும் பகுதிகள் இலக்கியத்துக்கே உரிய உயர்வு நவிற்சியும் கற்பனையும் கலந்த பாராட்டுரைகளாக அமைகின்றனவே யன்றி, உண்மையான வருணனையாக, இயல்பு நவிற்சியாக இல்லை.

## 4. 7. 1. 6. 2. 5 தலப்பயன்

இத்திருத்தலத்தில் வாழ்வதே தவப் பயனாகும். ஏனெனில் இது தன்னைத் தொழுபவர் தம் தீவினைகளை மாய்த்து அருளும் நலமலிபுகலி எனப்படும் (87, 113) சிறப்புடையது. இங்கு வாழும் மக்களுக்கு மரணபயம் கிடையாது. அவர்களும் 'வெற்று அகட்டுக்கு அன்னம் ஈபவர் (154)' எனப் போற்றப்படுகின்றனர்.

## 4. 7. 1. 6. 3 அகச்செய்திகளின் நிகழ்விடம்

அகப்பொருள்கோவையாதலால் தாம் பாடவந்த அகக்காட்சிகளைச் சீகாழியில் நடப்பதாக அமைத்துக் காட்டுகின்றார்.

''... காழிவாணன் முதுகிரிவாய்
அடியைந் தெடுத்துவைத் தைங்காத மென்றஞ்சும்
ஆயிழை''[65]

என்னுமிடத்துச் சீகாழி வரையில் உடன்போக்காகச் செல்லும் தலைவியின் மென்மைத் தன்மை தலத்தோடு இணைத்துக் கூறப்படுகிறது.

பாங்கியிற் கூட்டத்தில் தலைவியை உய்த்து நீங்கும் தோழி தலைமகனிடம், 'சற்று ஆய்பவர்க்கும் பெரும்பயன் நல்கும் தனி முதல்வன் விரும்பி உறைகின்ற தோணிபுர மலைச்சாரலில் செவிலி, நற்றாய், நான் என யாருமேயன்றித் தனித்து நிற்கிறாள், தலைவி,

நீசென்று தண்ணளி செய்க''[66] என்கிறாள். இறைவனின் அருளியலும், அவன் உறைகின்ற தலமும் கூறித், தலைவனும் தலைவியும் புணர்தற்குரிய இடமாகத் தோணிபுரத்தை அமைக்கின்றார், ஆசிரியர்.

நாளை மடலேறுவேன் எனக் கூறும் தலைவன் ''ஒன்பா னுருவு முளனா கியுமுரு வொன்றுமிலா னன்பான் மலிபு கலியுங்கள் வீதியினாளை மடல் ஏறுவேன்''[67] என்கிறான். உயிர்களின் பொருட்டு ஒன்பது வடிவினன் எனினும் தன்னளவில் நாமம், உருவம் ஒன்றுமில்லாத இறைவன் சிறப்பு அத்தலத்தோடு இணைக்கப்பட்டுத், தலைவன் மடல் ஏறும் இடமாகச் சீகாழி காட்டப்படுகிறது.

''அருவர் உருவ ரருவுரு வாளரவிர் புகலிச் செழும் புனத்தே வருவர் ஒருவர்''[68] என இறைவனின் அருவுருவத் திருமேனியியல்பும், புகலிச்செழும் புனமும் தலைவனின் வருகையோடு இணைக்கப்படுகின்றன.

இவ்வாறு நிகழிடமாகச் சீகாழியை அமைத்தமையின் இறையியல்பும் அகச்செய்திகளும் பல பாடல்களில் சீகாழியோடு இணைத்துப் பேசப்படுகின்றன.

### 4.7.1.6.4 சீகாழி உவமையாதல்

வளம் சான்ற ஊரினைப் பெண்ணுக்கு உவமித்தல் இலக்கிய மரபு. அம்மரபை ஒட்டிச் சீகாழிக்கோவையிலும் தலைவி, செவிலி. நற்றாய், பாங்கியர் அனைவரும் சீகாழியோடு உவமித்துப் பேசப் படுகின்றனர்.

''நீரார்க்குஞ் சடைக் காழியன்னீர்''[69] எனத் தலைவியை முன்னிலைப்படுத்தி அழைக்கிறான் தலைவன். இதுபோன்ற விடங்களில் தலைவிக்கு சீகாழி உவமையாகின்றது. ''மின்பயலார் புகலியன்னாய்''[70] என்பது செவிலி நற்றாயை அழைப்பதாகவும், ''திருமேனிப் பிரானமர் காழியன்னாய்''[71] என்பது நற்றாய் செவிலியை அழைப்பதாகவும், 'சதுக்கொள் உருவார் புகலி யன்னீர்'[72] என்பது முன்செல்வோர் பாங்கியரை அழைப்பதாகவும் அமைந்துள்ளன. ஒருமை, பன்மை எனும் இருநிலையிலும் சீகாழி மகளிர்க்கு உவமையாகியுள்ளது.

### 4.7.1.6.5 சீகாழியும் பிற தலமும்

சீகாழி இறைவனாகிய பிரமபுரீசனே பாட்டுடைத் தலைவன் எனினும் பொது இறைவனாகிய சிவனின் பெருமை இந்நூல்

முழுதும் பேசப்படுகின்றது. எனவே சிவன் உறைகின்ற, அருளிச் செயல்கள் புரிந்த, சைவத் தலங்கள் பல இக்கோவையில் பேசப் படுகின்றன. அத்தலங்களும், சிவனும் சீகாழியோடு இணைத்துப் புகழப்படுகின்றனர்.

''வளம் உலையாத புகலிப்பிரான் வெள்ளிமால்வரைவாய்'' (94)
''மலைமீது தோணி யுறைவார் குற்றாலவரைத்தலை'' (95)
''கனக்கா வலர்செறி காழியில் வாழ்நுதல் கண்ணரெண்ணு
மினக்கா வலர்திருக் காளத்தி மால்வரை யேந்திழையீர்'' (101)

எனவருமிடங்களில் சீகாழித் தல இறைவன் உறையும் வெள்ளிமால் வரை, குற்றாலம், காளத்திமலை என்பன அகச்செய்திகளின் நிகழ் விடங்களாக ஆக்கப்படுகின்றன.

''துருத்தி யவாஞ் சண்பை நாயகர்'' (155)
''மலர்ப்புன் கண்மையாளர் திருத்தோணியப்பர்'' (259)

என்பன போன்ற இடங்களில் சீகாழி நாதன் விரும்பி உறைகின்ற திருப்பூந் துருத்தி (குற்றாலம்), திருப்புன்கூர் எனப் பிறசைவத் தலங்கள் சீகாழியோடு இணைத்துப் பேசப்படுகின்றன.

''...கொம்பில், கோழிக்கு நாயகர் மேவிய
வீழிக்குங் கூடலுக்குங் கோழிக்கு முன்புடையார்'' (254)

எனவரும் பாடல் தலைவனின் இறைப்பற்றை விளக்கப் புகுந்து, நாதர் வீற்றிருக்கும் திருவீழிமிழலை, மதுரை, உறையூர் ஆகிய திருப்பதிகளைக் குறிக்கின்றது.

இவைதவிர, திருக்கடையூர் (342). திருவிடைமருதூர். (358) மூவலூர், திருவையாறு குடமூக்கு, பவானி (512) ஆகிய தலங்களும் சீகாழி இறைவன் அமர்கின்ற தலங்களாகக் குறிக்கப்படுகின்றன.

### 4. 7. 1. 6. 6 தீர்த்தச் சிறப்பு

இத்தலத்தில் கழுமல ஆறு ஓடுகின்றது. இதனைப் பிரம தீர்த்தம் எனவும் கூறுவர். இதுபற்றித் தனியே பாடும் குறிப்பு இக்கோவையில் இடம்பெறவில்லை.

### 4. 7. 1. 6. 6. 1 மூர்த்தம், தலம், தீர்த்தம்

மூர்த்தம், தலம், தீர்த்தம் மூன்றினையும் இணைத்து ஒரு பாடல் அமைகின்றது. உடன்போக்காகத் தலைவியை அழைத்துச் செல்லும் தலைவன் தன் பதியை அடைந்ததும், அப்பதியின் சிறப்புக்

''திகழும் பிரம்ம புரமிஃ தப்பெயர் தீர்த்தமிது
நிகழும் பிரமலிங்க கேசரி லீது நிலையழகி
புகழுமி லீதிது தோணிப் பிரானில் புகுந்துயரெற்
ககழும் வடுகனி லீதிது சம்பந்தனாரின் மின்னே''[7]

எனச் சுட்டுமிடத்துப் பிரமபுரம், பிரமதீர்த்தம், பிரமலிங்கேசர் கோயில், திருநிலையழகி கோயில், தோணி புரத்தீசர் கோயில், சட்டைநாதர் கோயில், திருஞான சம்பந்தர் கோயில் ஆகியன குறிப்பிடப்படுகின்றன. சீகாழியின் மொத்தச் சிறப்பும் இவ்வொரு பாடலில் பேசப்படுகிறது.

## 4. 7. 2 பாட்டுடைத் தலைவன் சிறப்பு

சீகாழித் தல இறைவன் பிரமபுரீசன். பிரமபுரீசன். தோணியப்பர், சட்டைநாதர் போன்ற பெயர்களும் சிறப்புச் செய்திகளும் நூலில் இடம் பெறுகின்றன. எனினும் பாடுபொருள் முழுமுதல் கடவுளாகிய சிவ பெருமானாகையால், சிவனின் இறையியல்பு நூல் முழுதும் பேசப்படுகின்றது.

சிவபிரானைப் பாராட்டும் நெறிகளாக இவர் கையாளும் உத்தி உவமையாக அமைகிறது.

1. இயற்கைப் பொருளுக்கு உவமையாக்குதல்
2. அகச் செய்திகளுக்கு உவமையாக்குதல்
3. அடியவர்க் கருளியமை உவமையாதல்
4. புராணச் செய்திகள் உவமையாதல்

இதனைக் கீழ்க்கண்டவாறு கூறலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| இயற்கை<br>அகச்செய்தி | உவமை — சிவன் | } | நிகழிடம்<br>(சீகாழி) | { தலைவன்<br>தலைவி<br>பிறமாந்தர் |
| அடியவர்<br>வரலாறு<br>புராணம் | உவமை —அகச் செய்தி | | | |

இயற்கைப் பொருட்கள், அகச்செய்திகள் ஆகியவை சிவனுக்கும், அடியவர் வரலாறு, புராணச் செய்திகள் ஆகியவை அகச்செய்திகட்கும் உவமையாக்கப்பட்டு, நிகழிடமாகிய சீகாழியோடிணைந்து அகத்திணை மாந்தர்களோடு இணைக்கப்படுகின்றன.

### 4. 7. 2. 1 இயற்கைப் பொருளுக்கு உவமையாதல்

அகத்திணைக்குரிய நிலம், பொழுது, கருப்பொருள்கள் ஆகியவற்றைக் கூறவரும் இடங்களில் பாட்டுடைத் தலைவனின் சிறப்பியல்புகள் உவமையாகப் பயன்படுத்தப்படுகின்றன.

தலைவனும் தலைவியும் இயற்கைப் புணர்ச்சி உற்ற இடத்தைக் குறிப்பிடும் இடத்து, ''அன்னிழல் கண்டர் அருள் குளிர்ந்தது சோலை''[74] எனவும், 'ஞானியர் தவம் செய்யும் பாலை அவன் நுதல்விழிபோல் அழல் நிறைசுரம்[57] எனவும் இவைனின் கண்டமும், நுதல்விழியும் உவமையாக அமைந்துள்ளன.

கார்காலம் வந்தும் தலைவன் வந்திலன். கார்கால வரவினை இயற்கை மாறுபாடுகள் உணர்த்துகின்றன. அவ்வியற்கை வருணனைக்கும் இறைவனின் தோற்றம் உவமையாதல் சிறப்புடையது.

'புகலிப் பிரான் திருநீறுபோல இக்கானத்துத் தோன்றிய முல்லை விளர்த்தது; அவன் மேனியின் வலப்பக்கம் போலச் சிவந்து மலர்ந்தன கொன்றை; இடப்பக்கத்தைப் போல் தலைவியின் மேனி பசந்தது; அவன் கண்டத்தைப்போல் மேகம் கறுத்தது[76] என இயற்கைப் பொருளுக்கு உவமையாக்கி இறைவனைப் புகழ்கிறார் ஆசிரியர்.

### 4. 7. 2. 2 அகச்செய்திக்கு உவமையாதல்

தலைவனின் பிரிவு காரணமாகத் தலைவியின் மேனி மெலிவது இறைவன் அருளொடு இணைத்துக் கூறப்படுகின்றது. இறைவனின் கழல் நினைவார்க்கு உலக அச்சம் கழலுதல் போலத் தலைவியின் வளை கழன்றது; அவன் தாள்மீது கொண்ட அன்பு எங்கும்நிறைவது போல அவள்மேனியெங்கும் பசலை நிறைந்தது.[77]

உடன்போக்கிடையீடு என்ற துறையில் உடன் போக்காகச் சென்ற தலைவனையும் தலைவியையும் இடைச் சுரத்தில் தமர் வளைத்துக் கொள்கின்றனர். இதற்குப் ''புகலிப் பிரானையுன்னாரை வளைக்கும் வெய்யகலியுங் கடுவினை யும்போல வளைத்தனர்''[78] என்கிறார்.

அடியவர்இருக்கும் இடம்தேடிச் சென்று அருள்பவன்இறைவன் இதனைத் தலைவனின் இயல்போடு பொருத்திக்காட்டுகிறாள்தோழி. இரவுக்குறியில் குறித்தஇடத்தில் வந்து அருள் செய்திலன் தலைவன். 'புகலிப் பெருமான் அன்பர் வழுத்தும் குறியிடத்தே வந்து அருளுதல் போல் தலைவி கூறிய குறியிடத்தே நீஏன் வரவில்லை?'[79] என வினவு

கிறாள் தோழி. அடியார்க்குத் தன்னிடத்தினின்று இறங்கி வந்து அருளும் இறையியல்பு இங்கு உவமையாகின்றது.

### 4.7.2.3 அடியார்க்கருளியமை உவமையாதல்

''இறைவன் தன் திருக்கோலத்தை காட்டினான் என்னும் போது (1) பல அடியவர்களுக்குப் பல நிலைகளில் தன் வடிவினைக் காட்டியமை, (2) பல்வேறு கோலங்களைத் தாங்கி நின்று பல அருட் செயல்களைச் செய்து நம்மை உய்யக் கொண்டுள்ளமை என்னும் இரண்டையும் குறிப்பிடுவர் ... இவற்றைத் தோன்றிமறைந்த வரலாற்றுத் திருக்கோலங்களாகக் கொள்வதில்லை. புராணங்கள் நிலையான உண்மையினைப் பேசுவன; ஒரு குறிப்பிட்ட காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியைப் பேசுவனவல்ல என்பர். எனவே புராணத் திருக்கோலங்களையே பெரிதும் வழிபாட்டுத் திருவுருவங் களாகக் கருதுவர்''[80]

எனவே வரலாறுகளும் புராணங்களும் இறைவனின் ஒப்பற்ற தன்மையை வெவ்வேறு கோணங்களில் தரும் கருவிகள் எனலாம். அடியவர் தம் வரலாறுகளில் இறைவன் அருளிச்செய்த செயல்கள் பல இங்கு கோவைச் செய்திகளுக்கு உவமையாகின்றன.

இரவுக்குறியிடையீடுபட்ட தலைமகன் புலந்து போகிறான். அவன் புலம்புமிடத்து, 'என் நெஞ்சமே! காழிப்பிரான் அருள் மாறு பட்ட நூலேயென அலைத் தாய்'[81] என வருந்துகிறான். இறையருள் பெறாத வேற்றுச்சமய நூல்கள் அனல், புனல் வாதங்களில் அலைப் புண்டதைப் போலத் தானும் அலைப்புறுவதாக எண்ணுகிறான். சமணரை அனல் புனல் வாதங்களில் வென்ற ஞானசம்பந்தர் வரலாறும் இறைவனின் அருளும் அழகுற இணைக்கப்படுகின்றன.

உடன்போக்காகச் சென்ற தலைமகனும் தலைமகளும், இடைச் சுரத்திலே பொழிலைக் காண்கின்றனர். 'சுந்தரருக்கும் ஞானசம்பந்த ருக்கும் இறைவன் அருளிய பந்தரைப் போல, நமக்கும் நிழல்தரும் சோலை ஒன்றைக் காழிப்பிரான் அமைத்துத் தந்தனன் போலும்'[82] என மகிழ்கின்றனர்.

'புகலிப் பிரான் பொன்னடிச் சிலம்பு காட்டும் ஒலிகேட்டன்றி வாழாதவர் சேரமான் பெருமாள். அது போலத் தலைவனின் கோட்டொலி கேட்டன்றி உயிர் வாழாள் தலைவி'[83] எனக் கூறு மிடத்து இறைவன் சேரமானுக்குத் தினந்தோறும் சிலம்பொலி அருளிய சிறப்பு இடம் பெறுகிறது.

குண்டையூர்க் கிழாரின் நெல்லினைப் பூதகணங்களைக் கொண்டு சுந்தரர் இல்லத்தின்முன் குவிக்கச் செய்தமை போலத் தலைவன் தலைவிக்கு முலைவிலையாக விடுத்த பொருள் குவிந்துள்ளது[84] எனத் தோழி கூற்றில் சுந்தரர் வரலாறும் தன் தோழருக்காக இறைவன்தன் பூத கணங்களை அனுப்பிய செய்தியும் பேசப்படுகின்றன.

இவை போன்ற பல அருளிச் செயல்கள் அகச்செய்திகளுக்கு உவமையாகப் பல பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

## 4.7.2.4 புராணச் செய்திகள் உவமையாதல்

இறைவன் திரிபுரம் எரித்த செய்தி மிக அழகாக அகச் செய்தியோடு ஒப்பிடப்படுகிறது. 'வெள்ளான் கொடியுடைக் காழிநாதர் குறுநகை முப்புரம் எரித்தது. தலைவி செய்த குறுநகை என்னையும் என் குலத்துள்ளாரையும் உய்வித்தது. ஆதலின் இந்நகைக்கு அந்நகை ஒவ்வாது,[85] எனத் தலைவியின் முறுவல் குறிப்புணர்ந்த தலைவன் கூறுகிறான்.

பிறிதோரிடத்தில். 'திரிபுரத்தைப் படைக்கருவிகள் இல்லாமல் தன் நகைப்பாலேயே அழித்த சிவபிரான் போலத் தலைவியின் முலையாகிய யானையையும், இடையாகிய சிங்கத்தையும் படையின்றி வென்றவன் நம் தலைவன்'[86] எனப் பாங்கன் தலைவனை வியக்கின்ற இடத்தில் திரிபுரம் எரித்தமை உவமையாயிற்று.

இடந்தலைப்பாட்டில் அசோகமர நிழலில் தனித்து நிற்கிறாள் தலைவி. அவள் நிலைக்கண்டு தன் தளர்வகன்ற தலைவன், 'கல்லால மர நிழலில் சனகர் முதல் நால்வர்க்கும் அருளுறைத்த சீகாழி யோகியை விட இவ்வசோக மர நிழலில் தனித்துநிற்கும் யோகியர் மிக்கவர் என்கிறான். தனித்து நிற்பதால் மிக்கவள் என்கிறான். தலைவியின் மிகுதிப்பாடு, இறைவன் ஞானோபதேசம் செய்த செயலோடு ஒப்பிட்டுக் கூறப்படுகிறது.

இவை தவிர, எண்ணற்ற பிரமர்களைத் தோற்றுவித்து ஆட்கொண்டமை (காப்பு. 2), பிரமனின் தலையைக் கையிலேந்தியமை. திருமாலை ஆனேறாகக் கொண்டமை, திருமாலின் கண்மலரைப் பாதத்தில் அணிந்தமை ஆகிய பல புராணச் செய்திகள் பலபாடல்களில் தலத்தோடும் அகச்செய்தியோடும் இணைக்கப்பட்டுள்ளன.

#### 4. 7. 3. 1 கூற்றுக்கள்

நம்பியகப்பொருள் கூறும் கைக்கிளை முதல் பொருள்வயிற் பிரிவு ஈறாக உள்ள முப்பத்து மூன்று கிளவித்தொகைகளுப் சீகாழிக்கோவையிலும் இடம்பெறுகின்றன. இவற்றுள் 531 துறை யிலமைந்த பாடல்கள் உள்ளன. இவற்றைக் கூற்று அடிப்படையில் பின்வருமாறு பகுக்கலாம்:

| | | | |
|---|---|---|---|
| தோழி கூற்று | — 179 | பாணன் கூற்று | — 2 |
| தலைவன் கூற்று | — 168 | கண்டோர்கூற்று | — 12 |
| தலைவி கூற்று | — 109 | பரத்தையர் கூற்று | — 2 |
| செவிலி கூற்று | — 24 | வாயில்கள் கூற்று | — 1 |
| நற்றாய் கூற்று | — 17 | பாங்கியர் கூற்று | — 1 |
| பாங்கன் கூற்று | — 15 | காமக்கிழத்திகூற்று | — 1 |

சீகாழிக்கோவையில் ஆசிரியர் புதிதாகச் சில துறைகளை அமைத்துக் கொண்டபின் கூற்று எண்ணிக்கைகள் குளத்தூர் கோவையைவிட மிகுந்துள்ளன.

காமக்கிழத்தி வாயில் வேண்டலும், தலைவி காமக்கிழத்தியொ( பகர்தலும் சீகாழிக்கோவையில் மட்டுமே காணப்படுகின்றன.

#### 4. 7. 3. 2 கூற்றுக்கள் வழி அறியலாகும் பண்புகள்

4. 7. 3. 2. 1 வீரமும் ஆற்றலும் உடையவன் தலைவன். நாட வருகின்ற வழியிலிருக்கும் தடைகளைப் பொருட்படுத்தாத வீர உடையவன். புல்லே புலி என்றும், அறுகே சிங்கம் என்றும் ஆம்பல் களிறு என்றும் எண்ணும் திண்மை உள்ளம் உடையவன். (207 ''சேரார் உயிர் உண்டுழல் வடிவேலுடைச் செம்மல்'' (421) என்: தோழியால் பாராட்டப் படுபவன். ''புகலி முத ல்வன் அடியாரை நீங்கியிருக்கினுங் கொங்கை யடர் மருங்குல் துடியாரை நீங்கியிரு கிலேன்'' (296) எனக் கூறும் அன்புள்ளம் கொண்டவன்.

4.7.3.2.2 தலைவியின் மென்மையும், இளமையும் தோ கூற்றுக்கள் வழிப் புலப்படுகின்றன. ''பூமேல் மிதிப்பினுந் தீமே மிதிப்பதுபோல் பதைப்பாள்'' (405), ''பூனையை ஒவியத்தி காணினும் அஞ்சி நடுங்குவாள்'' ( 407)என்பன போன்ற கூற்றுக்க தலைவியின் பேதமைத் தன்மையை உணர்த்துகின்றன.

சூளுரைத்த தலைவன் பொய்த்தனன். ஆனால் தலை அவனிடம் தவறு காணவில்லை. அவன் சூள் பொய்த்தமைக்கு

தன்விதியே காரணம் என்கிறாள் (309). தலைவன் நாட்டினின்று வரும் புனல் ஆடித் தன் வெப்பம் தீர விழைகின்றாள் (311) என அமைவன அவளது பெண்மைக் குணத்தை உணர்த்துவன.

4.7.3.2.3 'தோழிதானே செவிலியது மகளே' என்பது தொல்காப்பியம். தலைவியின் களவு, கற்பு என்ற இருநிலைகளிலும் பேரிடம் பெறுபவள் தோழி. இவள் ''தாவாப் பெருங் குணத் தோழி'' (112) எனச் சீகாழிக்கோவையில் பாராட்டப்படுகிறாள்.

தோழி கேட்பார்ப்பிணிக்கும் பேச்சாற்றல் மிக்கவள். பிரிவு என்ற சொல்லுக்கே அஞ்சுபவள், தலைவி. அவளிடம் தலைவனின் பிரிவினைப், ''பெண்ணே! உன் குழைகளைக் கடைக்கண் தொட்டு மீளுமுன் வருவேன் என்று கூறித் தலைவன் சென்றுள்ளான் (298) என நயமாகக் கூறுகிறாள், தோழி. அதே போலத் தலைவனிடம் கூறும்போது, ''சென்றார் எனுமுனம் வந்தார் என வந்துசேர் அண்ணலே'' (297) எனக் கூறி விடை கொடுக்கிறாள்.

## 4. 7. 3. 3 முதல் கரு உரிப்பொருள்கள்

சங்கப்பாடல்கள் போல முதல் கரு உரிப்பொருள்கள் மிகுந்த சிறப்பிடம் பெறவில்லை. எனினும் அகமரபுக்கேற்பச் சில இடங்களில் பொலிவு பெறுகின்றன.

சீகாழிக்கோவையில் முதல்பாடல் 'காட்சி' என்னும் துறையிலமைந்தது.

''பூமேவு கஞ்சமு மேந்தெழி னீலமும் பூந்தளவு
மாமேவு கோங்கமும் பாங்கமர் காந்தளும் வாய்ந்தறிஞர்
நாமேவு கொம்பரொன் றுற்றது வானிலை நங்கை பங்கர்
தேமேவு கொன்றைச் சடையாளர் காழிச் சிலம்பகத்தே''

எனும் அப்பாடல் திருக்கோவையாரின் முதல் பாடலை நினைவுறுத்துகின்றது. அங்கு, 'திருவளர் தாமரை' எனத் தொடங்குவது போல இங்கும் 'பூமேவு கஞ்சம்' எனத் தொடங்குகிறார். ''இங்கு குறிக்கப்படும் தாமரை, நீலம், முல்லை, கோங்கம், காந்தள் ஆகியன முறையே மருதம், நெய்தல், முல்லை, பாலை, குறிஞ்சிக்குரியன. காந்தளில் முடித்தார், இந்நூல் முழுதும் புணர்தலும் புணர்தல் நிமித்தமுமே யாதல் பற்றி''[87] என்று விளக்குவர்.

இவ்வாறு முதல் பாடலே ஐந்து திணைக்குமுரிய முதல், கரு, உரிப்பொருள்கள் உணர்த்தும் எனக்கொள்ளலாம். சீகாழி மருதநிலம் சார்ந்தது. இருப்பினும் கோவைச் செய்திகளுக்கேற்ப ஐவகை நிலத்தையும், நிலச்செய்திகளையும் படைத்துமொழிகின்றார்.

### 4. 7. 3. 3. 1 குறிஞ்சி

> ''வரையேறு நீர்ச்சுனை யாடுவர் சூடுவர் வான்கணிப்பூ
> விரையேறு சந்தனம் பூசுவர் பேசுவர் மென்குறிஞ்சி''[44]

எனச் சுனைநீராடலும், குறிஞ்சிநில மலர்களைச் சூடலும், சந்தனம் பூசலும், அந்நில ஒழுக்கமாகிய கூடலும் கூடல் நிமித்தமும் பற்றி மென்மையாகப் பேசி மகிழ்வதும் அக்குறிஞ்சி நில மகளிர்தம் பொழுதுபோக்குகளாகக் காட்டப்படுகின்றன. தேனும், கடியுழை ஊனும் உணவாகக் கொள்வர் (181), மான உணர்வு மிக்கவர்கள் (159) என்பன போன்ற செய்திகள் குறிஞ்சி நில மக்கள்தம் வாழ்வியல் காட்டுகின்றன.

தலைவன் தான் வாழும் ஊரைக் குறிப்பிடும் இடத்துச், ''சண்பை பாங்குறுமென் வயலமர் வஞ்சி, நின் குன்றம ராணை மருவும்'' (32) என்கிறான். இங்கு, சீகாழியின் அருகே அமைந்த மருதநிலத்திலுள்ள வஞ்சிக்கொடி, அதனை அடுத்துள்ள குறிஞ்சி நிலத்தில் வளர்ந்த ஆண்மரத்தைத் தழுவும் என்பது, இருவர்தம் ஊரின் அணிமைத் தன்மையை விளக்குகிறது. சீகாழியின் அருகே மருதம், குறிஞ்சி எனும் இருநிலச் சார்பும் படைத்துக் காட்டுகின்றார்.

### 4. 7. 3. 3. 2 முல்லை

இரவுக்குறியில் தலைவியைக் காணவருகிறான் தலைவன். அவன் கடந்துவந்த காடு சான்ற முல்லைப் பகுதிகள் கடத்தற் கரியவை. அவற்றின் இயல்பை, 'மின்னி முழங்கிப் பொழிகின்ற மாமுகில் விண்ணினை மறைக்க, முழங்கி வரும் வெள்ள நீர் இம்மண்ணினை மறைக்க இருட்காலத்தே செல்லும் வழி தெரியாத காடு'[89] எனக் குறிக்கிறார்.

### 4. 7. 3. 3. 3 மருதம்

வயலும் வயல் சார்ந்த பகுதிகளும் ஊடல் ஒழுக்கத்தோடு காட்டப்படுகின்றன. கற்புக் காலத்துத் தலைவியின் ஊடலுக்குக் காரணம் பெரும்பாலும் தலைவனின் பரத்தையர் ஒழுக்கமே. தலைவன் பிரிவால் வருந்தும் தலைவியிடம் தோழி,

> ''...இரவாம்பன் மலர்த்
> தேனுண்ட வண்டு சிறுகாலை யிற்கஞ்சத்
> தேனுமுண்ணும்''[90]

எனத் தலைவன் இயல்பை மருதநிலக் கருப்பொருள்களைக் கொண்டே விளக்குகிறாள். 'இரவிலே ஆம்பல் மலரிடம் மதுவுண்ட வண்டு, சிறுகாலைப் பொழுதில் தாமரை மலரிடம் தேனுண்ணச் செல்லும். அது வண்டின் இயல்பான எப்படி ஏற்றுக் கொள்

கிறோமோ அதுபோலத் தலைவியிடம் இன்பம் துய்த்த தலைவன் பரத்தையரிடம் செல்வது, அவனியல்பு என ஏற்றுக் கொள்ளல் வேண்டும், என்கிறாள். பிறிதோரிடத்து, 'தென்காழி வாழும் ஆடவரில் பரத்தையர் தோள் தழுவாதவர் எவரே?'[91] எனப் பரத்தைமை ஒழுக்கம் நியாயப்படுத்தப்படுகிறது.

### 4. 7. 3. 3. 4 நெய்தல்

கடலொடு புலம்பல் என்னும் ஒருதுறை மட்டுமே நெய்தல் நிலத்தைக் காட்டுகின்றது. தலைவன் சென்ற தேரின் தடத்தை அழிக்கும் அலைகடலைக் கண்டு தலைவி புலம்புவதாக அமைக்கின்றார். 'காழிப் பிரானுக்கே நஞ்சினைக் கொடுத்த நீ வருந்தும் எனக்கு என்ன செய்யாய். என் தலைவனை முருகன் என்று எண்ணிப் பழைய பகைமையை உட்கொண்டு அவன் தேர்சென்ற வழியை அழித்தனையோ'[92] எனப் புலம்புகிறாள்.

### 4. 7. 3. 3. 5 பாலை

உடன்போக்கு மறுக்கும் தலைவன் தோழியிடம் பாலைக் காட்டின் கொடுமையைக் கூறுமிடத்து, ' ஐம்புலன்களைக்கடிந்த விரதியர் மட்டுமே செல்லத் தகும் கானகம்[93] எனக் குறிப்பிடுகின்றார். ' முட்டானெனவெம் பரல்செறி கானம்[94] என்ற நற்றாய் கூற்றும் பாலையின் வெம்மையை உணர்த்துகின்றது.

இவ்வாறு ஐந்நில இயல்புகளும் ஒழுக்கங்களும் ஓரளவு பேசப்படுகின்றன.

### 4. 7. 3. 4 உள்ளுறை உவமம்

மேற்கூறிய உரிப்பொருட்கள் சிறப்பதற்குச் சில கருப்பொருட் காட்சிகள் உள்ளுறை உவமங்களாகப் பயன்படுத்தப்படுகின்றன. ''... நாட்டிளவேய், குவையா முறித்துக் களிற்றின் பிடிக்குக் கொடுக்கும் வெற்பா''[95] எனத் தலைவனை முன்னிலையாக அழைக்கிறாள் தோழி. இங்கு, 'யானைதன் முயற்சியால் மூங்கிலை முறித்துப் பிடிக்குத் தருதல் போல நீயும் நின் முயற்சியால் சென்று தலைவியை அடைக' என்பது உள்ளுறைப் பொருள்.

தலைவனின் பரத்தைமைக் குணத்தை,
'' நேருங் கரும்பு பொழிசாறு நீத்து நெடும்பகடாங்
கருங் கலங்கற் புனல் கொளுமூரன்'' (460)
'' பங்கய மென்பூவும் புலவுங் கமழ் ஊரன்'' (458)
'' ஒண் மலர் தோறு நறவுண்டு வண்டுழலும் ஊரன்'' (452)

எனப் பல உள்ளுறை உவமங்கள் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

#### 4.7.3.5 சிற்றின்பம் பேரின்பமாதல்

சீகாழிக்கோவையின் சிறப்பைக் கூறவந்த கு. சுந்தரமூர்த்தி, "திருச்சிற்றம்பலக் கோவையார் இறை இன்பத்தை எடுத்துக் கூறுவான் புகுந்து உலகியல் இன்பத்தையும் ஒரோவழி எடுத்துக் கூறியது. இக்கோவை உலகியல் இன்பத்தை எடுத்துக் கூறுவான் புகுந்து இறை இன்பத்திலேயே திளைக்குமாறு செய்கிறது"[96] எனப் பாராட்டுகிறார்.

முழுமுதலாகிய இறைவனை அடைகின்ற உயிர் தான் இன்பம் பெறுகிறது. ஆனால் முழுமுதல் அதனால் இன்பம் பெறுவதில்லை. எனவே இது ஒருதலை இன்பம். ஆனால் தானும் தலைவியும் அடைகின்ற இன்பமோ "மற்றிரு தலையும் சேரா மருவின்பம் ஆதலின் இதற்கு இணை கிடையாது'[97] என்கிறான் தலைவன்.

இரவுக் குறியில் தலைவியைப் புணர்ந்த தலைவன் தலைவியிடத்துத் தான்பெற்ற இன்பத்தைச் சைவசித்தாந்தத்தோடு இணைத்துப் பேசுகிறான்.

> "சமைய விசேட நிருவாண மென்றுநஞ் சண்பைப் பிரா
> னமைய வுரைத்த துணர்ந் தாய்கொ னீதனி யாகுவதே
> சமையநி னங்கை தொடலே விசேடந் தரித்தகலை
> யமைய நெகிழ்த்திட லேநிரு வாணமெய் யாமிதுவே"[98]

எனும் தலைவன் கூற்று சைவத்தில் கூறப்படும் தீட்சா முறைகளைச் சிற்றின்பத்தோடு இணைத்துக் கூறுகின்றது. சமய தீட்சை, விசேட தீட்சை, நிருவாண தீட்சை என்பன சமய ஆச்சாரியர்கள் கூறும் தீட்சை முறைகள். இங்கு தலைவி தனித்திருத்தலே தக்க சமயம் என்றும், அவள் கையினைப் பற்றலே விசேடமென்றும், கலை நெகிழ்த்தலே நிருவாணம் என்றும் கூறப்பட்டுள்ளன. சிற்றின்பம் பாடப் புகுந்தாலும் பேரின்ப உணர்வே விஞ்சிநிற்கிறது.

### 4.7.4 சீகாழிக்கோவை தலபுராணம் ஆகுமா?

4.7.4.1 சமய இலக்கிய வடிவங்களில் தலபுராணமும் ஒன்று. இத்தலபுராணம் குறிப்பிட்ட இறைவனை அவன் உறைகின்ற தலத்தோடு இணைத்துப் புகழ்வது. தமிழில் 13-ஆம் நூற்றாண்டில் தோன்றிய இத்தலபுராணங்கள் 16-ஆம் நூற்றாண்டில் மிகுதியாக எழுந்தன.

4.7.4.2 பாட்டியல் நூல்களில் புராணம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஆனால் தலபுராணம் பற்றிப் பேசப்படவில்லை. புராணங்களைப்

பற்றிக் கூறும் கலைக்களஞ்சியமும் தலபுராணங்களைப் பற்றிக் குறிப்புத் தரவில்லை. தலபுராணங்களுக்குத் தனியாக வரையறுக்கப் பட்ட இலக்கணம் கிடையாது. கிடைக்கின்ற தலபுராணங்களைக் கொண்டு நோக்குமிடத்துப் பொதுவான தலபுராண நெறிகளை ஒருங்கிணைத்துக் கூறலாம்.

4.7.4.2.1 மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியன சிறப்பிக்கப்படல் வேண்டும்.

4.7.4.2.2 இந்திரன் உள்ளிட்ட தேவர்களும், அகத்தியன் உள்ளிட்ட முனிவர்களும், விலங்குகளும் பூசித்து வீடு பெற்றனர் என்று குறித்தல் வேண்டும்.

4.7.4.2.3 தலச்சிறப்பை இதிகாச, புராண, வரலாற்று அடிப்படை களுடன், நாட்டுப்புறக் கதைகள், தொன்மக் கதைகள் ஆகியவற் றையும் சேர்த்து விளக்கல் வேண்டும்.

4. 7. 4. 2. 4 நைமிசாரண்ய வனத்தில் சனகாதி முனிவர் கேட்க, சூதபுராணிகர் கூறியது. அதை அப்படியே நான் கூறுகிறேன் என்று தொடங்கப் பெறும்.[99]

4. 7. 4. 2. 5 தலபுராணங்கள் வரலாற்றுடன் காவிய இலக்கணம் பெற்று விளங்குதல், நாட்டுச்சிறப்பு பேசப்படுதல், காண்டம் என்ற பெரும் பிரிவுகளும், படலம் அத்தியாயம் என்பனபோன்ற சிறுபிரிவு களும் இடம்பெறுதல் ஆகிய தன்மைகளைப் பெற்று விளங்குவன.

சைவத்தலங்களில் சில ஏதாவது ஒரு வரலாற்று நிகழ்ச்சிக்குப் பின்புலமாக அமைந்துள்ளன. அத்தகு தலங்களைப் பாடுமிடத்து அந்நிகழ்ச்சிகள் சிறப்பான இடம் பெறுகின்றன.

## 4. 7. 4. 3 சீகாழிக்கோவையில் தலபுராணக் கூறுகள்

19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான மீனாட்சிசுந்தரனார் சைவத் தலபுராணங்களை மிக விரும்பிப் பாடியுள்ளார். 22க்கும் மேற்பட்ட தலபுராணங்கள் இவரால் பாடப்பட்டன. புராணப்புலவர் என்றே இவர் தன்னைக்குறித்துக் கொள்கிறார்.

தலபுராணங்கள் பலபாடிய மீனட்சிசுந்தரனாரின் சீகாழிக் கோவை, தலத்தோடு இறைவன் புகழ்பாடுவதால் தலபுராணம் எனப் படும் தகுதி பெற்றுள்ளதா என்பது ஆய்வுக்குரியது.

4.7. 4. 3. 1. ஏற்கனவே குறித்தபடி, இக்கோவையில் மூர்த்தச் சிறப்பும் தலச்சிறப்பும் ஓரளவு பேசப்படுகின்றன- சட்டைநாதர்

பெயர்க்காரணம் புராணச்செய்தியோடு கூறப்படுகின்றது. பிரமபுரீசர் தோணியப்பர் என்ற பெயர்கள் மட்டுமே குறிக்கப்படுகின்றன. பெயர்க் காரணம் கூறப்படவில்லை.

4.7.4.3.2 பன்னிரு பெயர்களை உடைய இத்தலம் பற்றிப் பாடும் இந்நூல் அப்பெயர்களைக் கையாளுகிறது. ஆனால் பெயர்க்காரணங்களைக் கூறவில்லை.

4.7.4.3.3 தீர்த்தச் சிறப்பு ஒரே ஒரு பாடலில் இடம் பெறுகிறது. அப்பாடலும் தீர்த்தப் பெயரைச் சுட்டிச் செல்கிறதே ஒழிய அதன் பெருமை பேசவில்லை.

4.7.4.3.4 பிரமன், திருமால் முதலியோர் பூசித்து வீடுபேறு பெற்றமை குறிப்பிடப்படுகிறது.

4.7.4.3.5 புராண, வரலாற்றுத் தொன்மக் கதைகள் இடம் பெவில்லை.

4.7.4.3.6 முனிவர்கள் கூறிய கதை என்ற தொடக்கமோ, காவிய அமைப்போ, தலபுராணப் புறவடிவங்களோ சீகாழிக் கோவையில் அமையவில்லை.

4.7.4.3.7 இத்தலத்தைப் பின்புலமாகக் கொண்டு கூறப்படும் திருஞானசம்பந்தர் வரலாறு மிகுதியும் பேசப்படுகிறது.

4.7.4.3.8 மேற்கூறியபடி, தலபுராணச் செய்திகள் சீகாழிக் கோவையில் ஓரளவு இடம் பெறினும், அச்செய்திகள் முழுமையும் அகச்செய்திகளோடு இணைத்தே கூறப்படுகின்றன. அகம் பாடும் மரபு தலபுராணங்களுக்கு இல்லை. மூர்த்தி, தலம், தீர்த்தம் பற்றிய செய்திகளும் தொன்மக்கதைகளும் சமயச் சார்பான நூல் என்பதால் இடம் பெறுகின்றன.

4.7.4.4 எனவே சீகாழிக்கோவையைத் தலபுராணம் எனல் பொருந்தாது. கோவை இலக்கிய மரபை ஒட்டி இந்நூல் தலத்தால் பெயர் பெறுகிறது. எவ்வகை இலக்கியம் பாடினும் அதன் தனித்தன்மையைக் காக்கும் மீனாட்சிசுந்தரனாரின் இலக்கிய நெறிக்குச் சீகாழிக்கோவை சான்றாகும்.

## 4.8 அகப்பொருள் மரபுகள்

4.8.1 உரிப்பொருள் அல்லது ஒழுக்கம் எனக் கூறப்படும் அக நிகழ்ச்சிகள் இலக்கியமாகும் நெறிமுறை காலந்தோறும் வேறுபடுகின்றது. காம உணர்வினை மிக மென்மையாக் கருதுவது சங்க

மரபு. ஆனால் பிற்கால இலக்கியங்களில் காமம் என்ற சொல்லின் கனபரிமாணங்கள் மாறிப்போயின. மிகுதியான பாலுணர்வே காமம் எனக் கருதப்பட்டது.

மீனாட்சிசுந்தரனாரின் கோவை நூல்களில் அகச்செய்திகளை மென்மையாகக் கூறும் சங்க மரபு பெரும்பான்மையும், விரசமாகக் கூறும் சிற்றின்ப வெளிப்பாடு சிறுபான்மையும் இடம் பெற்றுள்ளன.

4. 8. 1. 1 காதல் செய்திகளை மென்மையாக வெளிப் படுத்தல்

இயற்கைப் புணர்ச்சியின் பின் தலைவியின் வேறுபாடு கண்டு வினவும் தோழிக்குத் தான் சுனையாடியமையே காரணம் என்கிறாள் தலைவி. ஆனால் தோழியோ கருங்குவளை மலராகிய உன்கண் களைச் செங்குவளையாகவும், செவ்வாம்பலாகிய உன் இதழ்களை வெள்ளாம்பலாகவும் மாற்றும் வியத்தகு சுனை எங்கே உள்ளது என வினவுகின்றாள்.[100] இங்கு கரியகண் சிவந்ததும், செவ்வாய் விளர்த்ததும் தலைவி தலைவனின் புணர்ச்சி உண்மையைக் குறிப் பால் புலப்படுத்தும் தன்மையவாகும். அதனை உணர்ந்த தோழியின் கூற்றும் நாகரிகப் பண்போடு அமைகின்றது.

அத்தலைவன் தனக்குத் தண்ணளி செய்த நிலையைத் தலைவி எண்ணிப் பார்த்து மகிழ்கிறாள்.

''கையால் வெரிந்தை வருவாரென்
கைகடங் கண்ணி லொற்றி
வையா லயிற்படை யாருவப்
மார்முலை மார்பணைப் பார்[101]

என்பது போன்ற பகுதிகள் அகவொழுக்கங்களை வரன்முறை மீறாத பண்போடு காட்டுவதாக அமைகின்றன.

தலைவியின் எழில்நலம் தன் ஆண்மைத் தன்மையை அடிமை செய்தது என்பதைத்,

''தடங்கொண்ட சீரென் பெருங்கலை மாமதி தன்னையொரு
விடங் கொண்ட வாள்விழிச்சிற்றிடைப் பாம்பு விழுங்கியதே''

என அழகிய உருவகமாகக் கூறுகின்றான்.[102]

காதல் துன்பத்தில் வாடும் தலைவன் உருவெளித் தோற்றத்தில் தலைவியைக் கண்டு புலம்புகின்றான். 'கூந்தலில்

மொய்க்கும் வண்டுகளாகிய பாய்மாவும், முலைகளாகிய மதமிக்க யானைகளும், அல்குலாகிய தேரும், புருவங்களாகிய வில்லும் கண்களாகிய அம்புகளும் கொண்ட தலைவி, மன்மதன் என் மீது வெகுளி கொண்டு கறுக்கின்ற நேரத்தில் தானும் வெகுண்டு சிவந்தாள்''[103] என்கிறான். மன்மதனும் தலைவியும் ஒரே நேரத்தில் வருத்தத் தலைவன் அடைந்த துன்பம் நயமாகப் புலப்படுத்தப் படுகின்றது.

இவ்வாறு மூன்று கோவைகளிலும் காதல் செய்திகள் நாகரிகமாகப் புலப்படுத்தப்படுகின்றன. இந்நெறி பெரும்பாலான இடத்தைப் பெறுகின்றது.

### 4. 8. 1. 2 சிற்றின்ப உணர்வோடு வெளிப்படுத்துதல்

4. 8. 1. 2. 1. மிகுதியான காமஉணர்வை இலக்கியங்களில் புகுத்திய மரபு சிற்றிலக்கியங்களில் மிகுதியாகக் காணப்படுகிறது. குறவஞ்சி பள்ளு போன்ற நூல்கள் இத்தகுமரபில் முதலிடம் பெறுகின்றன. உலா போன்ற இலக்கியங்களும் ஏழுபருவ மகளிரும் ஒருவன் பால் காதல் கொள்ளுவதாகப் பாடி, இம்மரபினை வலுப்படுத்தியுள்ளன. இந்நிலையில் அகம்பாடுவதே நோக்கமாகக்கொண்டெழுந்த கோவை நூல்களும் விதிவிலக்கல்ல. 'மொழி நாணத்தையும், கற்பனைக் கற்பையும் கோவை நூல்கள் சின்னஞ்சிறு நயங்கருதிப் பலியாக்கி விட்டன,''[104] என்றே வ. சுப. மாணிக்கம் குற்றம் சாட்டுகிறார்.

4. 8. 1. 2. 2 சிற்றிலக்கியங்கட்குப் பிற்காலத்தில் ஏற்பட்ட சாபக் கேடு போல அமைந்த விரசம் நிறைந்த பாடல்கள் மீனாட்சிசுந்தரனாரின் கோவை நூல்களிலும் காணப்படுகின்றன. குளத்தூர்க் கோவையில் ஐந்து பாடல்களும் (6, 9, 18, 19, 38). வியாசைக் கோவையில் ஒருபாடலும் (6), சீகாழிக் கோவையில் இரண்டு பாடல் களும் (20, 174) இந்நெறியில் அமைந்துள்ளன. இப்பாடல்களின் எண்ணிக்கை மொத்தப் பாடல் எண்ணிக்கையோடு ஒப்ப நோக்கக் குறைவே எனலாம்.

தலைவிபால் இன்பம் துய்த்த தலைவன் தன்இன்ப நுகர்வினை உருவகமாகக் காட்டுகிறான். 'இச்சோலையே ஒரு குளம்; அதில் நீ ஒரு கொடி போன்றவள். நின் அல்குலே மலர்; அதன்நீடு சுவையே மது; அம்மதுவுண்ணும் வண்டு நான்'[105] என்பது உருவக நயம் பெற்றிருந்தாலும் அங்கு விஞ்சிநிற்பது விரசம் நிறைந்த காமவுணர்வே.

இரந்து பின்னிலை நிற்குந் தலைவன், 'என் காம வெப்புத் தீர வேறு தடத்துட் சென்று படியேன்; மடநடையீர்! உங்கள்

அல்குல் பெருந் தடத்துள் அடியேன் புகுந்து குடைந்தாடுமாறிங் களித்திடுமே,[106] என வேண்டிநிற்கிறான்.

முயங்குதலுறுத்தல் என்ற துறையில் தலைவியிடம் தான் பெற்ற இன்பத்தை,

''கூடிய மாமுலை பற்றி நிதம்பங் குடைந்து துவர்
நீடிய வாயமு துண்டாம் வரைபற்றி நேமிகுடைந்
தோடிய வாரமு துண்டார்கொ லோநமை யொப்பவரே''[107]

என எண்ணி மகிழ்கின்றான்.

4. 8. 1. 2. 3 மீனாட்சிசுந்தரனாரின் காலத்திற்கு முந்திய17,18-ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய சிற்றிலக்கியங்களோடு ஒப்பிட்டு நோக்குமிடத்து இவரது நூல்களில் இத்தகு காமஉணர்வும், பாலுணர்வும் மிக்க பாடல்கள் எண்ணிக்கையளவில் மிகமிகக் குறைவே எனலாம்.

## 4. 8 2 காப்பு

கோவைக்குக் காப்புச் செய்யுள் பாடவேண்டும் என்ற மரபு எந்த இலக்கண நூலிலும் கூறப்படவில்லை. குளத்தூர்க்கோவை காப்பு இல்லாமல் நேரடியாகக் கைக்கிளைத் துறையில் தொடங்குகிறது. இதன் காரணம். பாட்டுடைத் தலைவராகிய வேதநாயகம் பிள்ளை கிறித்தவராக அமைந்தமை போலும் என ஐயுறத் தோன்றுகிறது. வியாசைக்கோவையில் விநாயகர் காப்புப் பாடப்பட்டுள்ளது. சீகாழிக்கோவையில் ஆபத்துக் காத்த விநாயகர் துதி, ஆண்ட விநாயகர் துதி, அவையடக்கம் மூன்றும் இடம் பெறுகின்றன. அவையடக்கம் மற்றைய இரண்டிலும் இல்லை.

## 4. 8. 3 தொடக்கம்

சீகாழிக்கோவை, குளத்தூர்க்கோவை இரண்டிலும் தொடக்கமாக அமைகின்ற கைக்கிளைப் பாடல்கள் ஏறத்தாழ ஒன்று போலவே அமைகின்றன.

''பூமேவு கஞ்சமு மேந்தெழி னீலமும் பூந்தளவு
மாமேவு கோங்கமும் பாங்கமர் காந்தளும்''

எனத் தொடங்குகிறது சீகாழிக்கோவை.

''பொன்பூத்த கஞ்சமு மேந்தெழி னீலமும் பூந்தளவுந்
தென்பூத்த கோங்கமும் பாங்கமர் காந்தளும்''

எனத் தொடங்குகின்றது குளத்தூர்க்கோவை. இருநூல்களின் தொடக்கப்பாடல்களிலும் சில சொற்களே வேறுபடுகின்றன.

வையும் பொருள் அளவில் ஒத்தவையே. வியாசைக்கோவை முதல் பாடலில் தாமரை, காந்தள், குமுதம் என்னும் மூன்று மலர்கள் குறிக்கப்படுகின்றன.

### 4. 8. 4 முடிவு

மீனாட்சிசுந்தரனாரின் கோவை நூல்கள் இல்லறத்திலேயே முடிக்கப்படுகின்றன. தலைமகளோடு இருந்த தலைவன் கார்ப் பருவங்கண்டு மகிழ்ந்து சொல்லியது என்னும் துறையில் முடித் துள்ளார். கோவை என்பது அகம்பாடவந்த நூலே யாதலின் இல்லறமாக முடித்தலே சிறப்புடையது. அம்பிகாபதி கோவை மட்டும் துறவறத்தில் முடிகிறது. இதனைக், ''கூட்டுறவுப் பண்ணைப் பாலில் உப்புவிழுந்தது போல இல்லறக் கோவையில் துறவறத் தனிமையைச் சொல்வது நெறிப்பிழையாகும்'' [108] எனக் கடிந்துரைப்பார் வ. சுப. மாணிக்கம்.

### 4. 8. 5 துறைகள்

மூன்று கோவை நூல்களையும் ஒப்பிட்டு நோக்குமிடத்துச் சீகாழிக்கோவையில்தான் மிகைத் துறைகள் மிகுதியாகக் காணப் படுகின்றன. ஆசிரியர் எழுதிய இறுதிக் கோவையாதலின் இது ஒரு வளர்ச்சி நிலையாக அமைகின்றது.

இக்கோவை நூல்களில் அமைந்துள்ள இலக்கிய நயங்கள், அழகிய கற்பனை, வருணனை போன்ற கவித்துவங்கள் பின்னர் வரும் இயல்களில் ஆராயப்படுகின்றன.

## 4. 9 முடிவுகள்

பாடுபொருளாக அகத்திணையைப் பாடினாலும், நோக்கத்தால் சங்க இலக்கியங்களின்றும் கோவைநூல்கள் வேறுபடுகின்றன.

பாட்டுடைத் தலைவன், கிளவித் தலைவன் என்ற இரு தலைவர்களை ஓரிலக்கியத்தில் பெறும் புதுநெறிகோவை இலக்கியங் களுக்குரியது.

அகத்திணையில் கைக்கிளை வருதல் திணைமயக்கம் என நக்கீரார் மறுத்திருப்பினும், கோவை நூல்கள் கைக்கிளையிலேயே தொடங்குகின்றன. திருக்கோவையாரின் புதிய உரைவிளக்கம் கைக்கிளையை ஐந்திணையின் முதல் நிலை என ஏற்றுக் கொள்கிறது மீனாட்சிசுந்தரனாரும் இக்கருத்தினரே என்பது புலனாகிறது

பாங்கற் கூட்டத்தில், வேட்கைதாங்கற் கருமை கூறல் என்ற நம்பியகப்பொருட்துறை சீகாழிக்கோவையில் கிழவொன் பாங்கனை

ஆண்டுச் செல்ல வேண்டுமென்றல், தலைவியுருவு வெளிப்பட்டமை கண்டு தலைவன் கூறல், காணுங் கொலோ வெனத் தலைவன் ஐயுற்றிரங்கல், பாங்கனை உள்மகிழ்ந்துரைத்தல் என்ற நான்கு துறைகளாக விரிந்துள்ளன.

பாங்கிமதி உடன்பாட்டில் நடுங்கநாட்டம் என்ற துறையை இறையனாரகப்பொருள் உரை மறுக்கிறது. ஆனால் திருக் கோவையார் உரைவிளக்கத்தில் பெருமழைப்புலவர் இதனை, 'நன்னிலை நடுங்க நாட்டம்' என ஏற்றுக்கொள்கிறார். மீனாட்சி சுந்தரனாரின் படைப்புக்களுள் குளத்தூர்க்கோவையில் தோற்றத்தா லாராய்தல், ஒழுக்கத்தாலையம்தீர்தல் எனவும், சீகாழிக்கோவையில் பிறைதொழுகென்றல், கரந்துரைத்தல், கரவு நாட்டம், சுனைநயப் புரைத்தல், சுனை வியந்துரைத்தல் எனவும் விரிவாக இடம் பெறுகிறது.

கெடுதி வினாதல் என்ற நம்பியகப்பொருட்துறை, சீகாழிக் கோவையில் வேழம் வினாதல், பன்றி வினாதல், மறைவினாதல், கலைமான் வினாதல், மதமாவொடு மனம் வினாதல் என விரிவாக இடம் பெற்றுள்ளது. குளத்தூர்க்கோவையில் மான் வினாதல், மனம் வினாதல் இரண்டும் காணப்படுகின்றன. இறையனாரகப்பொருள் உரையில் காணப்படும் வழிவினாதல், இடைவினாதல், மொழியாமை வினாதல் என்பவை சீகாழிக்கோவையில் இடம் பெறுகின்றன.

நம்பியகப்பொருளில் கூறப்படும் மெய்தொட்டுப் பயிறல் என்ற துறை இவர் நூல்களில் வண்டோச்சி மருங்கணைதல் என்று இடம் பெறுகிறது.

நம்பியகப்பொருளைத் தழுவியே நற்றாய், செவிலி கூற்றுக்கள் அமைந்துள்ளன.

மாவிரதியரை வினாதல், உய்த்துணர்ந்தோரை உரைமின் என்றல், புறவொடு புலம்பல் என்ற மூன்றுமிகைத் துறைகளும் திருக் கோவையாரினின்றும் பெற்றார் போலும்.

கண்டோர் கூற்றில், 'அந்தணரையும், சான்றோரையும் முன்னிட்டு வரைந்து கொண்டுழிக் கண்டோர் மகிழ்ந்துகூறல்' என்னும் துறையினைத் திருக்கோவையாரினின்றும் பெற்றுள்ளார்.

இறையனாரகப்பொருள் உரையில்காணப்படும் துறைவிளக்கங் களையும், திருக்கோவையார் கொளுக்களையும் ஆங்காங்கே அமைத் துள்ளார் எனினும், ஆசிரியர் மிகுதியும் பின்பற்றியது நம்பியகப் பொருளையே எனலாம்.

குளத்தூர்க்கோவையில் அகச் செய்திகளின் நிகழிடமாகக் குளத்தூர் காட்டப்படுகிறது. மருத நிலமாகிய குளத்தூரில், அகத் திணை மரபு கருதி ஐந்நிலவளமும் அமைத்துப் பாடுகிறார்.

பாட்டுடைத் தலைவராகிய வேதநாயகம் பிள்ளையின் சிறப்பியல்புகளை நிகழிடத்தோடு தொடர்புபடுத்தியும், அகச்செய்தி களுக்கும் இயற்கைக் காட்சிகட்கும் உவமையாக்கியும் புழ்ககிறார்.

கைக்கிளை முதல் பொருள்வயிற்பிரிவு வரை 33 கிளவித் தொகைகள் இடம் பெறுகின்றன. அகமரபுப்படி கூற்றுக்கள் அமைந்துள்ளன.

தோழி கூற்று எண்ணிக்கையில் மிகுதி. தலைவன் கூற்று உளவியல்படி மிகுதியாகவும், பின்னர் வரவரக் குறைந்தும் காணப் படுகின்றது. தலைவி கூற்று மிகக் குறைந்தே உள்ளது.

தலைவன் கூற்று அவனது பேராண்மையினையும், காதலை யும், தலைவி கூற்று அவளது மென்மைத் தன்மையையும், தோழிகூற்று அவளது நாகரிக உணர்வையும், உலகியல் அறிவையும் காட்டுகின்றன.

முதல், கரு, உரிப் பொருட்களுக்கு முக்கியத்துவம் தரவில்லை என்றாலும் அவை புறக்கணிக்கப்படாமல் பேசப்படுகின்றன.

அகவிலக்கியங்களில் சிறப்பியல்பான உள்ளுறையும் ஆங்காங்கே அமைந்துள்ளது.

வியாசைக்கோவையில் முதல் நூறுபாடல்களில் பாட்டுடைத் தலைவராம் வியாசர்பாடி விநாயகமுதலியாரின் குலச்சிறப்பு, வள்ளல் தன்மை, இறைப்பற்று, வியாசைநகர்ச் சிறப்பு ஆகியன இடம் பெறுகின்றன.

கைக்கிளை முதல் பாங்கியிற் கூட்டத்தில் தலைவன் கையுறை புகழ்தல் என்ற துறை வரை அமைந்த பாடல்கள் அகமரபுப்படி அமைந்துள்ளன.

சீகாழிக்கோவையில் தோணிபுர இறைவனே பாட்டுடைத் தலைவர். சீகாழி அகச்செய்திகளின் நிகழ்விடம்.

சீகாழியின் மூர்த்தச்சிறப்பு, தலச்சிறப்பு, அமைப்பிடம், இயற்கை வளம், அவ்வூர் மக்கள்பெறும் பேறு ஆகியன பேசப்படு

யாக்கப்படுகின்றது. பிற சிவத்தலங்களோடு இணைத்துப் பேசப்படுகின்றது.

சீகாழி இறைவன் சிறப்பு இயற்கைப் பொருள்களுக்கும், அகச் செய்திகட்கும் உவமையாகின்றது; அவன் அடியார்க்கருளியமையும் பிற புராணச் செய்திகளும் அகச்செய்திகளுக்கு உவமையாக்கப் பட்டுள்ளன.

சீகாழிக்கோவையிலும் 33 கிளவித்தொகைகள் இடம் பெறுகின்றன.

புதிய துறைகள் பல சீகாழிக்கோவையில் காணப்படுகின்றன. இறுதியில் எழுதிய கோவையாதலால் இவ்வளர்ச்சி நிலை காணப் படுகின்றது.

ஐந்நில வருணனைகளும், மக்கள் வாழ்க்கையும், அகத்திணை மாந்தர் தம் மன உணர்வுகளும், உள்ளுறை உவமம் அமைந்த கூற்றுக்களும் காணப்படுகின்றன.

சிற்றின்ப உணர்வுமிக்க பாடல்கள் பேரின்பத்தோடு இணைத்துப் பாடப்பட்டமை ஆசிரியரின் சமயப்பற்றை விளக்கி நிற்கின்றன.

தலபுராணச்செய்திகள் ஓரளவு காணப்பட்டாலும், அகம்பாடும் மரபு தவறாது அமைந்தமையின் சீகாழிக்கோவையைத் தலபுராணம் எனக் கூறவியலாது.

காதல் உணர்வினை மென்மையாக வெளிப்படுத்தும் பாங்கு மூன்று கோவையிலும் காணப்படுகின்றது.

சிற்றின்ப உணர்வு மிக்க பாடல்கள் எண்ணிக்கையில் குறைவாகவே உள்ளன.

குளத்தூர்க்கோவை தவிர, ஏனைய இரு கோவை நூல்களிலும் காப்புப்பாடலாக விநாயகர் துதி அமைகிறது. குளத்தூர்க் கோவை நேரடியாகக் கைக்கிளையில் தொடங்குகின்றது. சீகாழிக் கோவையில் மட்டும் அவையடக்கம் அமைந்துள்ளது.

தொடக்கப் பாடல்களில் தாமரை, நீலம், தளவு, கோங்கம், காந்தள் ஆகிய மலர்களைப் பாடுதலை மரபாகக் கொண்டுள்ளார்.

மீனாட்சிசுந்தரனாரின் கோவை நூல்கள் அகம்பாடவந்த இலக்கியங்கள் என்ற நெறியில் நின்று தலைவன், தலைவி இல்லறத்தில் இன்புற்றிருந்த நிலையினைக் கூறி, நிறைவு பெறுகின்றன.

## குறிப்புக்கள்

1. ந. வீ. செயராமன, சிற்றிலக்கியச் செல்வங்கள், ப. 66.
2. இலக். 56.
3. நச்சினார்க்கினியர், தொல். பொருள். அகத். 53
4. கலைக்களஞ்சியம், பகுதி. 4, ப. 336.
5. வ. சுப. மாணிக்கம், சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள், 4வது மாநாடு, தலைமையுரை, ப. 17.
6. வ. சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 271.
7. முத்து சண்முகன் & நிர்மலா மோகன், சிற்றிலக்கியங்களின் தோற்றமும் வகையும், ப. 34.
8. நச்சினார்க்கினியர், தொல். பொருள். அகத். 53.
9. கலைக்களஞ்சியம், பகுதி. 4, ப. 336.
10. நச்சினார்க்கினியர், தொல். பொருள். அகத். 54.
11. செ. ரெ. இராமசாமி பிள்ளை, ஆராய்ச்சி முன்னுரை, அம்பிகாபதி கோவை, பக். 6—8.
12. கலைக்களஞ்சியம், பகுதி. 4. ப. 337.
13. இறையனாரகப்பொருள், நூற்பா. 2.
14. பொ. வே. சோமசுந்தரனார், திருக்கோவையார் உரையும் விளக்கமும், ப. 25.
15. இறையனாரகப்பொருள், நூற்பா. 3
16. நம்பி. களவு. 21.
17. இறையனாரகப்பொருள், உரை, ப. 71
18. பொ. வே. சோமசுந்தரனார், மு. நூல், ப. 133.
19. இலக்கண விளக்கம், பொருளியல், ப. 41.
20. இறையனாரகப்பொருள், நூற்பா. 23.
21. குளத்தூர். 136.
22. மேலது., 364.
23. மேலது., 73.
24. மா. சேசையா, நீதிபதி வேதநாயகர், ப. 18.
25. குளத்தூர். 25.
26. மா. சேசையா, மு. நூல், ப. 4.
27. மேலது., 108.
28. மேலது., 51.
29. குளத்தூர். 219.
30. மேலது., 3
31. மேலது., 209.
32. மேலது., 271.
33. மேலது., 361.,
34. மேலது., 65.

35. மேலது., 66.
36. மேலது., 152.
37. மேலது., 157
38. மேலது., 135.
39. மேலது., 148.
40. மேலது., 11.
41. மேலது., i34.
42. மேலது., 171.
43. மேலது., 420,
44. மேலது., 225.
45. மேலது., 162
46. மேலது., 42.
47. மேலது., 403.
48. மேலது., 341.
49. மேலது., 343.
50. வியாசை. 9.
51. மேலது., 26.
52. மேலது., 67.
53. மேலது., 16,
54. மேலது., 22.
55. மேலது., 96.
56. மேலது., 65.
57. மேலது., 15,
58. கலைக்களஞ்சியம், பகுதி 5, ப. 4.
59. சேக்கிழார், திருத்தொண்டர் மாக்கதை, திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் புராணம், 14.
60. சி. கே. சுப்பிரமணிய முதலியார், சிவத்தலங்களின் திருப் பெயர் வரலாறும், சீகாழிப் பன்னிரு திருப்பெயர் வரலாறும், செந்தமிழ்ச்செல்வி, சிலம்பு. 8, ப. 528.
61. ந. வீ. செயராமன், மு. நூல், ப. 192.
62. சீகாழி. 385.
63. மேலது., 66.
64. மேலது., 108.
65. மேலது., 365.
66. சீகாழி. 172.
67. மேலது., 142.
68. மேலது., 156.
69. மேலது., 12
70. மேலது., 394.
71. மேலது., 428

73. மேலது., 387.
74. மேலது., 91.
75. மேலது., 22.
76. மேலது., 324.
77. மேலது., 361.
78. மேலது., 437,
79. மேலது., 242.
80. ப. அருணாசலம், சைவசமயம் (ஓர் அறிமுகம்), பக்.
81. சீகாழி., 238.
82. மேலது., 377.
83. மேலது., 233.
84. மேலது., 338.
85. மேலது., 19.
86. மேலது., 71.
87. கு. சுந்தரமூர்த்தி, சீகாழிக்கோவை, ஆராய்ச்சிமுன்ன
ப. 3.
88. சீகாழி., 211.
89. மேலது., 223
90. மேலது., 461.
91. மேலது., 499
92. மேலது., 304,
93. மேலது., 363
94. மேலது., 406.
95. மேலது., 126
96. கு. சுந்தரமூர்த்தி, மு.நூல், ப. 5
97. சீகாழி. 470'
98. மேலது., 226.
99. சு. வேங்கடராமன், தலபுராணத் தோற்றம், செந்த
மார்ச்சு 1984, தொகுதி— 78, பகுதி—1. பக். 16-
100. குளத்தூர். 67
101. மேலது., 256.
102. வியாசை. 43
103. சீகாழி. 66
104. வ. சுப. மாணிக்கம், சிற்றிலக்கியச் சொற்பொழிகள்,
மாநாடு, தலைமையுரை, ப. 20.
105. குளத்தூர். 19.
106. வியாசை. 6.
107. சீகாழி. 20
108. வ. சுப மாணிக்கம், மு. நூல், ப. 25.

# 5. பிள்ளைத்தமிழ், கோவை நூல்களில் இலக்கியக் கூறுகள்

உரைநடை, அகராதி, ஆய்வுநூல்கள், நாடகங்கள், கீர்த்தனங்கள் எனப்பல்வேறு புதுத்தமிழ் இலக்கியத் துறைகள் வளர்ந்த 19-ஆம் நூற்றாண்டில், மீனாட்சிசுந்தரனாரின் இலக்கியப் போக்கு தலபுராணங்கள், பிரபந்தங்கள் எனப்பழமையான இலக்கியங்களைப் படைத்தலாகவே அமைந்திருந்தது. இவர்தம் படைப்புக்களின் இலக்கியக் கூறுகளை அறிதற்குமுன், அவர்தம் இலக்கியப் போக்கின் காரணத்தை ஆய்தல் அவசியமாகிறது,

கவிஞராகவும், ஆசிரியராகவும் விளங்கிய இவர் நினைத்திருந்தால் உரைநடை நூல்கள் பல எழுதியிருக்கலாம். ஆனால் இவர், ''கம்பனின் காவிய நடையையும் சேக்கிழார், கச்சியப்பர், சிவஞான சுவாமிகள் ஆகியோரின் சமயப்பற்றையும் உயிர் மூச்சாகக் கொண்டு விளங்கினார்''[1] என்பர். சைவசமயத்தில் கொண்டிருந்த பற்றும், முன்னோர்களிடம் கொண்டிருந்த பக்தியுமே இவரது இலக்கியப் போக்கிற்குக் காரணங்களாயின. ''...'கம்பரை மிஞ்சிய பாவலன்,' எனப் பாராட்டிய மக்களுக்குப் புதுமைக் காவியம் எதையும் அவர் தரவில்லை. அவருடைய செய்யுள் வெள்ளம் தலபுராணங்களாகவும் சிற்றிலக்கியங்களாகவுமே பெருகி வடிந்து போயிற்று. பேரறிவாளரும், பெரும் பண்பாளரும், புலவருமாக விளங்கிய மகாவித்துவானின் பேராற்றல் காலத்தாலும் இடத்தாலும் கட்டுண்டு போயிற்று''[2] என இவரது இலக்கியப் போக்கிற்குக் காரணம் கூறுவர்.

சமயம் ஒன்றிலேயே மக்கள் மனம் திசைதிருப்பப்பட்ட காலம் 19-ஆம் நூற்றாண்டு. வேற்றுச் சமயங்களின் நுழைவும், ஆதிக்கமும் இதற்குக் காரணமாயிற்று. அத்தோடு மீனாட்சிசுந்தரனார் தாம் வாழ்ந்த திருவாவடுதுறை ஆதீனத்தையே தம் உலகமாக ஆக்கிக் கொண்டவர். அங்கிருந்த மாணவர்களுக்குக் கற்பித்தலும், பாக்கள் இயற்றலுமே இவர் விரும்பியேற்றுக் கொண்ட வாழ்வியலாக அமைந்தது. '' சைவ சமய நெறிக்கு அப்பாற்பட்ட இலக்கியங்களைப் பயிலக்கூடாது என்ற அக்காலச் சைவச் சம்பிரதாயத்தில் ஊறியவர் மகாவித்துவான். அந்தப்போக்கே அவருடைய இலக்கியப்

போக்கைத் தலபுராணம் மற்றும் சைவமணம் கமழும் சிறுபிரபந்தங் களின் எல்லைக்குள் ஒடுக்கி விட்டது, ''[3] என்பர்.

பழைய மரபிலக்கிய வகைகளை மிகுதியாக எழுதியமைக்கு மீனாட்சிசுந்தரனாரின் வாழ்க்கைச் சூழலும் ஒரு காரணமாக அமைந்திருக்கலாம். இவரது வாழ்வு வறுமைக்கும் புலமைக்கும் இடையில் நடந்த போராட்டமாகவே இருந்தது. எனவே இவரை ஆதரித்த பிரபுக்கள், வள்ளல்கள், சைவ சமயப் பற்றுமிக்க ஆன்றோர்கள், ஆகியோரின் வேண்டுதலுக்கும், அன்பிற்கும் ஆட் பட்டே இவர் பல தலபுராணங்களைப் பாடியுள்ளார். பொருட்தட்டுப் பாடு ஏற்பட்ட பொழுது பாடிய கவிதைகளும் உண்டு; மனநிறைவுக் காக இவர் எழுதிய பிரபந்தங்களும் எண்ணில. எந்நிலையிலும் கவிதை தவிர வேறு துறைகளில் இவர் மனம் ஈடுபடவில்லை.

எனவே இவர்தம் படைப்புக்களுக்கு காரணம் சைவப்பற்று, காலச்சூழல், வாழ்ந்த இடம், வாழ்க்கைநிலை ஆகியவையே எனத் தெளியலாம்.

இவ்வியலில் அவர்தம் நூல்களின் இலக்கியக் கூறுகள், மூன்று தனித் தலைப்புக்களில் ஆராயப்படுகின்றன. அவை:

1. அணிநலன்
2. கற்பனை வளம்
3. மொழிநடை.

## குறிப்புக்கள்

1. V, Sadhasivan, Tamil Poetry of the Nineteenth Century pp, 1–2
2. சாலை, இளந்திரையன். புதுத்தமிழ் முன்னோடிகள். பக், 72-73.
3. மேலது., ப. 105

# 5.1 அணிநலன்

## 5.1.0 முன்னுரை

கவிஞர்கள் தம் படைப்புக்களின் பொருட் சிறப்பை எடுத்துரைக்கும் கருவியாக அணிநலன் பயன்படுகிறது. ''ஒரு செய்தியை பிறருக்கு அறிவிக்கவோ வலியுறுத்தவோ மேற்கொள்ளும் கோட்பாட்டு ரீதியிலமைந்த முறைகளுள் ஒன்றாக அணி என்பது கருதப்படுகிறது''[1] எனவும், ''தான் அறிந்த செய்தியைப் பிறருக்கு உணர்த்தவும், அதன்வழி அவர்களை ஈர்க்கவும் படைப்பாளி திறமையாக மொழியைப் பயன்படுத்தும் நிலையே அணியிலக்கணம் ஆகும்''[2] எனவும் ஆங்கில அகராதிகள் கூறுகின்றன. 'கவிஞர் களுக்குத் தம் கருத்தைத் தெளிவாகவும், விளக்கமாகவும் உரைத் தற்குத் துணையாக இருப்பவை அணிகள்''[3] என்பர்.

## 5.1.1 அணியின் பயன்

அணியின் பயன் பொருட்புலப்பாடும், இன்பம் பயப்பதும் என இரண்டு ஆகும். ஆங்கில அகராதிகள் தெளிவான பொருட் புலப் பாட்டை மட்டுமே 'Rhetoric' என்று கூறுகின்றன. தமிழ் இலக்கணங்கள் இப்பொருட்புலப்பாட்டோடு, இன்பத்தையும் பேசுகின்றன.

உவமவியலுக்கு விளக்கம்கூற வந்த பேராசிரியர், ''இது மேற்பொருள் புலப்பாடு கூறிய மெய்ப்பாட்டியலோடு இயைபுடைத்து; என்னை? உவமத்தானும் பொருட்புலப்பாடே கூறுகின்றானாகலின். அங்ஙனமோவெனின், 'ஆப்போலும் ஆமா' என்றக்கால் ஆமா கண்டறியாதான் காட்டுட் சென்றவழி அதனைக் கண்டால் ஆபோலும் என்னும் உவமையே பற்றி ஆமா இதுவென்று அறியுமா கலானென்பது''[4] என்கிறார்.

மேற்கூறிய பேராசிரியரின் கருத்தும் பொருட்புலப்பாட்டிற்கு அரண் செய்கிறது. தமிழ் இலக்கிய அணிநலன்கள் பொருட்புலப்பாடு ஒன்றையே குறிக்கோளாகக் கொள்ளாது, இன்பநுகர்விற்கும் காரண மாக அமைவதைக் காணலாம், 'மதியன்ன முகம்' என்னுமிடத்துப் பொருட்புலப்பாட்டை விட மனதிலேற்படும் இன்ப உணர்வே பயனாக அமைகிறது.

எனவே மேலை நாட்டு 'Rhetoric' பொருட்புலப்பாடு ஒன்றையே கூற, தமிழ்அணிகள் பொருட்புலப்பாடு, இன்பம் என்னும் இருவிதப் பயன்களைத் தருகின்றன.

5.1.1.2 இவ்வணியிலக்கணம் தமிழ் இலக்கியங்களில் காப்பியக் காலங்களிலிருந்து மிகுதியும் இடம் பெறத்தொடங்கின. வடமொழி இலக்கணங்கள் தமிழிலும் செல்வாக்குப் பெற்றபின் தண்டியலங்காரம் தமிழுக்குப்பல அணியிலக்கணங்களைத் தந்தது.

சிற்றிலக்கியங்களில் இவ்வணியிலக்கண ஆதிக்கத்தை மிகுதியும் காணலாம். மீனாட்சிசுந்தரனார் பாடல்கள் அணியிலக்கணங்களால் அழகுபெற்று விளங்குகின்றன.

## 5.1.2 மீனாட்சிசுந்தரனார் பாடல்களில் அணிநலன்

அணியிலக்கணப் பகுப்பிற்கேற்பக் காணும்பொழுது, மீனாட்சி சுந்தரனார் பாடல்களில் கீழ்க்காணும் அணிகள் அமைந்துள்ளன.

1. உவமையணி
2. உருவக அணி
3. தற்குறிப்பேற்றவணி
4. உயர்வு நவிற்சியணி
5. வேற்றுமையணி
6 மயக்கவணி
7. சிலேடையணி
8. விரோதவணி
9. பின்வருநிலையணி
10. வஞ்சப்புகழ்ச்சியணி
11. வீறுகோள் அணி
12. மடக்கணி

இவ்வணிகளின் அமைப்பையும், அவற்றை அவர் பயன்படுத்தியுள்ள முறையையும், அவற்றால் அவர் பாடல்கள் பெறும் சிறப்பையும் ஆய்வதே இவ்வியலின் நோக்கம் ஆகும்.

### 5.1.2.1 உவமையணி

அணிகளில் தலையாய அணி உவமையணி. ஏனைய அணிகளுக்குத் தாயாக விளங்குவது உவமை. பொருளிலக்கணம்பேச வந்த தொல்காப்பியர் உவமவியலை மட்டும் கூறிப் போந்தமையே உவமையின் சிறப்பைக் காட்டுகின்றது.

''ஒன்றைக் காணும்போது அதுபோன்ற மற்றொன்று நினைவுக்கு வருதல் இயற்கை. கலைஞரின் கண், பொருளைக் கண்டு அவற்றின் வடிவழகையும் நிறத்தெழிலையும் போற்றிப் பயின்ற பயிற்சி நிறைந்தது ஆகையால், புலவர் ஒருபொருளைக் கண்டதும் அதனோடு ஒப்புமை உடைய மற்றொரு பொருளையும் அகக் கண்ணில் கொணர்ந்து ஒப்பிட்டு மகிழ்வர். இத்தகைய

அனுபவமே அவர்கள் இயற்றும் பாட்டுக்களில் உவமைகளாக அணி பெற நிற்கும்''[5] என உவமையின் தோற்றத்திற்கு விளக்கம் தரு கிறார் மு. வ.

அன்றாட வாழ்க்கையில் மனிதன் பேசும்போதே அவனை யறியாமலேயே உவமைகள் அமைகின்றன. உவமைக்கு விளக்கம் கூறவந்த ஆங்கில அகராதியும், ''பொதுவான பேச்சு மொழியில், ஒன்றுக்கொன்று அழுத்தமான சாயல் உடைய இரண்டு பொருட்கள் ஒப்புமைப்படுத்தப்படுவது உவமை எனப்படும்''[6] என்று கூறுகிறது.

இம்மானிட இயல்பு கவிஞர்களிடம் மிகுதியாக அமைந்து கிடக்கின்றது. நம் கண்ணுக்குச் சாதாரணமாகக் காட்சியளிக்கும் பொருட்கள் கவிஞன் கண்களில் பட்டதும் கவிதைகள் ஆகின்றன. ''அவர்கள் கண்கள் உறங்கும் போதே காணும் ஆற்றல் பெற்றவை. விழித்திருக்கும் போதே கனவு காணும் பேறு பெற்றவை. அவர்களால் ஒரு பொருளை வாயாலும் பார்க்க முடியும். கண்ணால் ஒரு பொருளைத் தின்ன முடியும்''[7] எனக் கவிஞர்களின் புலன் ஆற்றல் பேசப்படுகிறது.

இத்தகு ஆற்றல் பெற்ற கவிஞர்கள் சொற்களைப் பயன் படுத்தும் பொழுது அவை தனி ஆற்றல் பெறுகின்றன. அவ்வாற்ற லுக்குத் துணைநிற்பன உவமைகள்.

### 5. 1. 2. 1. 1 உவமை இலக்கணம்

5.1.2.1.1.1 உவமையணிக்கு இலக்கணம் கூறவந்ததண்டியாசிரியர்

''பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்த்
தொப்புமை தோன்றச் செப்புவ துவமை''[8]

என்பார். பண்பு, தொழில், பயன் என்பவற்றில் ஏதேனும் ஒன்றால் ஒப்புமையுடைய இரண்டு பொருட்களை இணைத்துக் காட்டுவதே உவமை எனப்படுகிறது.

5. 1. 2. 1. 1. 2 ''உவமையிலிருந்தே ஏனைய அணிகள் தோன்றின என்பதை,

'உவமை யென்னும் தவலருங் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய வரங்கிற் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவ ரிதய
நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்கும்மே'

என்ற வடமொழி அப்பைய தீட்சிதரின் சித்திர மீமாம்சைக் கூற்றினாலும் அறியலாம்.''[9]

5.1.2.1.1.3 வினை, பயன், மெய், உரு என உவமையை வகைப்படுத்திய தொல்காப்பியர்,

''உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை''[10]

என உவமைப் பொருள் சிறந்ததாக அமைதல் வேண்டும் என்பதையும் குறிப்பிடுகின்றார்.

5.1.2.1.1.4 உவமையின் வாயிலாக உவமிக்கப்படும் பொருள் ஏற்றம் பெறுதல் வேண்டும்; சிறந்த விளக்கம் பெறுதலும் வேண்டும். அதுவே உவமையின் பயனாக அமைகிறது. உவமையாகப் பயன்படும் பொருள் அனைவரும் அறிந்ததாக அமைதல் வேண்டும். அப்பொழுதுதான் படிப்போர் மனத்தில் தெளிவான விளக்கம் பிறக்க முடியும்.

5.1.2.1.1.5 உவமையின் இவ்விலக்கணங்களை அடிப்படையாகக் கொண்டு மீனாட்சிசுந்தரனார் தம் பாடல்களில் உவமை பெறும் இடத்தை ஆராயலாம். இவர் கையாண்டுள்ள உவமைகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

1. இயற்கை உவமை
2. சமய உவமை
3. இலக்கண உவமை

## 5.1.2.1.1.5.1 இயற்கை உவமை

இறைவன் படைப்பில் எல்லாப் பொருள்களும் ஒன்றுக்கொன்று ஏதாவது ஒரு நிலையில் ஒப்புமை பெறுகின்றன. இவ்வொப்புமையை நுணித்து நோக்கும் ஆற்றல் பெற்றவன் கவிஞன்.

மலரும், கொடியும், நிலவும், கதிரும், விண்ணும், மண்ணும் இக்கவிஞரின் பாடல்களில் உவமைப் பொருள்கள்ஆகின்றன. இவர் பாடல்களில் மரபுவழி உவமைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

''கோகங் கருதும் முலையீர்''[11]

எனவும்,

''வலைத்தலை மான்அன்ன கண்ணாள்''[12]

எனவும், ''மானே விழி, பிறையே நுதல், கொன்றைத்தேனே மொழி. அரவே யல்குல், சேவிமிலே கொங்கை, மீனே பொருகண்''[13] எனவும் தலைவியின் எழில் வருணனை மரபுவழி உவமைகளால்

இத்தகு மரபுவழி உவமைகள் கையாளப்பட்டாலும், அவற்றின் வளர்ச்சி நிலை போலச் சில சிறப்புக் கூறுகள் அமைந்த உவமைகளும் காணப்படுகின்றன.

### 5. 1. 2. 1. 1. 5. 1. 1 மலர்கள்

மகளிரின் கண்களுக்குக் குவளை, நெய்தல் போன்ற மலர்களும், முகம், கை, கால் இவற்றுக்குத் தாமரையும், இதழுக்கு ஆம்பலும், பற்களுக்கு முல்லையும் என உவமைகள் அமைப்பது வழி வழி வந்த மரபு. இம்மரபுகள் மீனாட்சிசுந்தரனாரின் கற்பனைத் திறத்தோடு இவரது படைப்புக்களில் கையாளப்படுகின்றன.

தலைவியின் கண்களைக் குவளைக்கு உவமை கூறும் தோழி, அதன் காரணத்தைக் கூறுபவள் போலப், ''பகலில் உறங்கி இரவில் விழித்துப் பசுந்தேன் பெய்யும் குவளை யனைய கண்ணாள்''[14] என்று கூறுகிறாள்.

குவளையைக் கண்ணுக்கு உவமை கூறல் இலக்கிய மரபு. ஆனால் இங்கு பகலில் கூம்பி, இரவில் மலர்ந்து தேன் சொரியும் குவளையின் இயல்பும் உவமையாக்கப்பட்டுள்ளது. இரவுக் குறிக் காலத்தில் பகலில் உறங்கி, இரவில் விழித்துத், தலைவனைக் காணாது கலங்கிய தலைவியின் கண்கள் உவமை மூலம் உணர்த்தப் படுகின்றன.

இதைப் போலவே துஞ்சாத தலைவியின் கண்களுக்குக் கருநெய்தல் உவமையாகின்றது.[15]

அகிலாண்ட. வில் அம்மையின் புன்முறுவல் ஆம்பல் மலரில் ஒளிந்து கொண்ட திங்களுக்கு உவமையாகின்றது.[16] திங்களால் மலர்வது ஆம்பல். ஆனால் இங்குக் கவிஞர் அந்த ஆம்பலிலேயே திங்கள் ஒளிந்து கொண்டதாக இறைவியின் சிவந்த இதழை ஆம்பலுக்கும், அதனுள்ளே ஒளிவிடும் பற்களைத் திங்களுக்கும் உவமிக்கின்றார்.

பிறிதோரிடத்துச் செருந்தி மலர்களின் மலர்ச்சியைப் பாட வந்த ஆசிரியர், 'பண் பாடவந்த சுரும்புகளுக்குப் பொற்காசுகளை அள்ளித் தருவது போல மலர்ந்த செருந்தி'[17] எனக் கூறுகிறார்.

### 5. 1. 2. 1. 1. 5. 1. 2 கொடி

மலர்கள் உவமையானமைபோல மலர்க் கொடிகளும் உவமைகளாயின. மகளிரைக் கொடிக்கும், பூங்கொம்பிற்கும் உவமித்தல் மரபு. அம்மரபு, இங்கு வளமான கற்பனை நயத்தோடு உவமையாக்கப்பட்டுள்ளது.

இமவான் மனைவி, தன் மகவாகப் பெற்ற இறைவியை உவந்து கொண்டாடியமையை விளக்க வந்த கவிஞர், அம்மையாகிய குழந்தையை இவள் நீராட்டிய செய்தியை உவமை நயத்தோடு காட்டுகிறார். 'கங்கை நீரால் மஞ்சனமாட்டிப், பொய்கை நடுவே அமைந்த கொடியை நுரை பொதிந்தாற் போல, நுண்துகில் கொண்டு நீரை ஒற்றி எடுத்தாள்'[18] என்கிறார். அலைகளால் ஏற்படும் வெண் நுரை பொய்கையில் வளர்ந்த கொடிகளைச் சுற்றிக் கொள்ளும் காட்சி, இறைவிக்கு வெண்துகில் கொண்டு நீரை ஒற்றியமைக்கு உவமையாகிறது. கொடி போன்ற பெண் என்ற உவமையின் வளர்ச்சியை இங்கு காண்கிறோம்.

இதுபோன்றே, செவ்வாடை அணிந்து சென்ற தோழிக்கு இந்திர கோபம் நிறைந்த பசுங் கொடியும்'[19], காமநோயால் துன்புற்று வாடிய தலைவிக்குப் 'பல்லவம் தீர்ந்த கொம்பும்'[20] உவமைகளாக்கப்படுகின்றன.

இவை தவிர, இலையும் சருகும் கூட உவமைகளாகியுள்ளன.

'' புன்கொடு வானெடும் போந்தின்
கருக்குப் புரை புலைவாய்
வன்கொடு நாய்[21]

என நாயின் வாய்க்குப் புன்க இலையும், பனைமட்டையும் உவமைகளாகின்றன. இயற்கையின் எப்பொருளையும் நுணுகி அறியும் கவிஞரின் உள்ள உணர்வை இவ்வுவமைகள் தெளிவுறக் காட்டுகின்றன.

## 5. 1. 2. 1. 1. 5. 1. 3 நீர்வாழ் உயிரினம்

கொள்ளிட நதியில் நீராடும் திருவெண்ணீற்றுமையின் உறுப்புக்களுக்கு, நீர்வாழ் உயிரினங்களையே உவமையாக்கியுள்ளார். ' அவளது கரிய குழற்கற்றைகள் நீர்ப்பாசி போல் சுழல்கின்றன; விழிகள் சேல் மீன் போலவும், குழையணி செவிகள் வள்ளைக் கொடி போலவும், முகம் தாமரை போலவும், உள்ளுதற்கரிய இரு கொங்கைகளும் புற்புதம் போலவும், உந்தி நீர்ச்சுழி போலவும், முழந்தாள் அலவனைப் போலவும் விளங்குகின்றன [22] என இறைவியின் ஒவ்வொரு உறுப்பையும் நீரில் காணப்படும் ஒவ்வொரு பொருளுக்கும் உவமையாக அமைத்துள்ளார். இடத்திற்கும் காட்சிக்கும் ஏற்ற உவமை அமைப்பை ஈண்டு காண்கிறோம். இதே உவமை காந்தி. நீராடல். 2;பெருந்திரு. அம்மானை.5 ஆகிய பாடல்களிலும் காணப்படுகிறது.

## 5. 1. 2. 1. 1. 5. 1. 4 நீர்ப்பெருக்கு

அடுத்து நீர்ப் பெருக்கே உமையம்மைக்கு உவமையாகின்றது. 'மலையிலே பிறந்து, உலகப் பயிர்கள் தழைக்க ஓடிவருபவள் பொன்னி; மலையத்துவசன் மகளாய்ப் பிறந்து, உலக ஆன்மாக்கள் தழைக்கும் வண்ணம் அருள் சுரந்து தண்ணளியுடன் விளங்குபவள் இறைவி' என இறைவியின் அருட் தன்மையும், பொன்னி நதியும் உவமையால் இணைக்கப்படுகின்றன.[23]

## 5. 1. 2. 1. 1. 5. 1. 5 மீன்

நீரின்றி உயிர் வாழாத மீனின் இயல்பு
''பாரார் புனலன்றி மீனிற்கு மோவப் பரிசினுங்கள்
ஆரா வமுதமின் றேனிற்கு மோவென தாருயிரே''[24]

எனத் தலைவியின்றி உயிர்வாழ இயலாத தலைவன் நிலைக்கு உவமையாகின்றது. இதே உவமை பிறிதோரிடத்தும் காணப்படு கின்றது.[25]

## 5. 1. 2. 1. 1. 5. 1. 6 முத்து

முத்துக்களைப் பற்களுக்கு உவமை கூறல் மரபு. இங்கு முத்தினை முத்தினுக்கே உவமையாக்குகிறார். 'மலைமீது அமைந்த மூங்கில்கள் சொரியும் முத்துக்கள் ஒளிருதல் போல, அழகிய கொங்கைகள் மீது முத்து வடங்கள் வில் வீசியாடப் பொன்னுஞ்சல் ஆடுக'[26] என இறைவியை அழைக்கிறார்.

இங்கு, இறைவியின் கொங்கைகள் மலைக்கும், தோள்கள் மூங்கிலுக்கும், தோளிலணிந்த முத்துவடம் மூங்கில் சொரியும் முத்துக் களுக்கும் உவமிக்கப்பட்டுள்ளன.

பிறிதோரிடத்துக் கண்ணீர்த் துளிகளைக் ''கயலீன் முத்து'' என்கிறார்.[27]

## 5. 1. 2. 1. 1. 5. 1. 7 வண்டுகள்

கருநிற வண்டுகள் மகளிர் கண்களுக்கு உவமையாதல் மரபு. இறைவியின் கண்களுக்கு இவர் பாடல்களில் வண்டுகள் உவமையா கின்றன.[28]

மலருக்கு மலர்தாவும் வண்டுகளின் இயல்பையும் உவமையாக்கி யுள்ளார். உறையூரின் வளம் கூறவந்த ஆசிரியர், தாழையில், வாழையில், காவியில், வாவியில், சோலையில், பூவினில், வீதியில், மகளிர் ஓதியில் எனப் பல்வேறிடங்களில் தேனுண்டு திரியும் வண்டுகள்

போல, இளைஞர்தம் ஆடையில், ஓடைப் பொன்னில் தோளினில், வாளினில், விற்பொலி முத்தாரத்தில் எனப் பெருருட் தொடர்போடு போய் மொய்க்கின்ற கண்களையுடைய விலை மாதர்கள் சூழும் உறையூர்[29] என்கிறார். இதே போலக் காமுகரின் இயல்பும் வண்டு களின் இயல்பும் பிறிதோரிடத்தும் உவமிக்கப்படுகின்றன.[30]

அம்மானைப்பருவப் பாடல்களில் நீலநிற அம்மானைக் காய் களுக்கு வண்டுகள் உவமையாகின்றன. 'செந்நிற இதழ்க்கமல மலரினின்றும் பொறிசெறி வண்டர் எழுதுவது ஏய்ப்ப, நீல அம்மனை கொண்டு ஆடுக[31] எனுமிடத்து, இறைவியின் கரங்கள் தாமரை யாகவும் அவற்றினின்று மேலெழும் நீலநிறக் காய்கள் வண்டு களாகவும் உவமிக்கப்படுகின்றன.

## 5. 1. 2. 1. 1. 5. 1. 8 கதிரவன்

இருசுடர்களும் உவமையான தன்மையும் நோக்கத்தக்கது. அம்மானைப் பருவங்களில் பொன்னிறக் காய்களுக்குக் கதிரவன் உவமையாகின்றான். காந்தி. யில் பொன்னிற நளின மனையாட்டி பால் தழுவி இன்புற்ற பரிதி நாயகன் விண்ணோக்கி எழுந்து செல்வது போலப் பதுமராகப் பொன்னம்மனை கொண்டாடுக'[32] என்கிறார்.

இங்கு நளின மனையாட்டி கைக்கும், தழுவிச் சென்ற பரிதி நாயகன் பொன்னம்மனைக்கும், தழுவிச் சென்ற செயல் அம்மனை ஆட்டத்திற்கும் உவமையானமை நோக்கத்தக்கது.

பிறிதோரிடத்துப் பவளக் காய்களை எடுத்து வீசி ஆடும் இறைவியின் கைகள் சிவந்த கதிரவனை ஒரு செவ்வரவு தொடர்வது போல் உள்ளது என்கிறார்.[33]

தலைவனின் மனத்துயர் துடைக்கும் தோழனுக்கும் கதிரவனை உவமித்துள்ளார். 'இரவிகண்ட இருள் போலத் துன்பம் நீங்கிற்று'[34] எனத் தலைவன் நினைக்குமிடத்துக், கதிரவன் பாங்கனுக்கும், இருள் அவன் துடைத்த துயருக்கும் உவமையாயின.

புற இருள் நீக்கும் கதிரவன் பன்னிரண்டு என்பது மக்கள் நம்பிக்கை, ''தாத்துரு, சக்கரன், அரியமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவச்சுவான், பூடன், சவித்திரு. துவட்டன், இப்பெயர் சித்திரை மாத மேட விராசி முதல் ஒவ்வொரு மாதத் தொவ்வோரிராசியிற் புகுந்து சூரியனுக்கு முறையே செல்லு மென்பர்; இவரே துவாத சாதித்தர்''[35] எனப் பன்னிரு சூரியனுக்குச் சதுரகராதி விளக்கம் தருகிறது.

இப்பன்னிரு கதிர்களையும் ஆசிரியர் உவமையாக்கியுள்ளார். மெய்கண்டார் எழுதிய சிவஞான போதம் பன்னிரு நூற்பாக்களை உடையது.

இதனை,

" போந்து புறத்துப் படரிருளைப்
போக்குங் கதிரும் பன்னிரண்டே
பொங்கி அகத்துப் படரிருளைப்
போக்குங் கதிரும் பன்னிரண்டே
யேந்து புடவி யிடத்தெனப்பன்
னிருசூத் திரஞ்செவ் வாய்மலர்ந்த
இணையில் வெண்ணெய் மெய்கண்டான் "

என அகவிருள் நீக்கும் பன்னிரு நூற்பாக்களுக்கும் புறவிருள் நீக்கும் பன்னிரு கதிரையும் உவமித்துள்ளார்.

## 5, 1. 2. 1. 1. 5. 1. 9 மதி

மாதர் முகத்திற்கு உவமையாகும் மதி, மீனாட்சிசுந்தரனார் பாடல்களில் இன்னும் பல கற்பனைகளுக்கு இடம் தருகிறது.

முத்தம்மானையைக் குறிப்பிடும் இடங்களில் மதியவன் உவமையாகின்றான்.

மங்கள. வில், ' முத்தின் இழைத்த அம்மனை எடுத்து வீசுங் கால், நின் வேல் புரை விழியின் காரொளி அதன் நடுவே விளங்குதல வெள்ளிய மதியமும் அதன் நடுவமைந்த களங்கமும் போலக் காணப் படுகின்றது.[87] எனக் கூறுகிறார். இங்கு இறைவியின் கண்கள் அம்மானைக் காய்களைத் தொடர்ந்து செல்வதால் அவற்றின் கரிய நிறம் முத்துக்களில் ஊடுருவி நிற்றல், களங்கம் செறிந்த மதிக்கு உவமையாயிற்று.

## 5. 1. 2. 1. 1. 5. 1. 10 கதிரும் மதியும்

சேக்கிழாரின் பெருமை பேசவந்த ஆசிரியர் அவரைக் கதிருக்கும் மதிக்கும் ஒரே சமயத்தில் உவமிக்கின்றார். ' சேக்கிழார் பெருமான், புகழாகிய கதிர் எனத் தோன்றி, அடியவர் மனத் தாமரைகளை மலர்த்தினார்; புகழாகிய மதியவனாகத் தோன்றி, அடியவர்தம் கரத்தாமரைகளைக் குவியச் செய்தார், '[8] எனப் பாடு கிறார். இங்கு கதிரும் மதியும் புகழுக்குக் கூறப்படும் உவமைகள். எனவே புகழ் வடிவாகிய சேக்கிழாருக்கு இரண்டும் உவமையாயின. தாமரை மலர்களை மலர்த்துவதும், கூம்பச் செய்வதும் இருசுடர் களின் செயலாகையால், அவையும் சேக்கிழாரைக் கண்ட அடியவர்

மனத்தாமரை மலர்ச்சிக்கும், கரத்தாமரைக் குவிவிற்கும் உவமையாயின.

### 5. 1. 2. 1. 1. 5. 1. 11 மலையும் மதியும்

மலையும், அம்மலைமீது தோன்றும் மதியவனின் அமுதக் கதிர்களும், அம்மை ஆடுகின்ற ஊஞ்சலுக்கு உவமையாக்கப்படுகின்றன.

'வெள்ளி மலையை இரு கூறாக்கி நிறுத்தியது போல வயிரத் தூண் நிறுவிப் பொன் மலையைத் திரட்டி நீட்டித் தூண்மிசை இட்டது போல் பவளவிட்டமிட்டு, அம்மலை மீது தவழ்கின்ற மதியவனின் அமுதக்கதிர்கள் ஒழுகுவது போல் தரளவடம் பூட்டி, செம்மணிப் பலகை மாட்டி அதன்மீது அமர்ந்து ஊஞ்சலாடுக'[39] என வருமிடத்து வயிரத்தூணும், பவளவிட்டமும், முத்துவடமும், செம்மணிப் பலகையும் பொருந்தியமைந்த ஊஞ்சலுக்கு மலையும் மதியும் உவமையாவதைக் காண்கிறோம். உயர்வுநவிற்சியாக ஊஞ்சல் அமைப்புக் காட்டப் பெற்றாலும், பெருந்திருப்பிராட்டி ஆடும் ஊஞ்சலின் தெய்வீகத் தன்மை உவமை வாயிலாக விளக்கம் பெறுகிறது.

பிறிதோரிடத்து, 'வண்ண மதியில் கலையும், இரவியில் சுடரும், மலரில் பொலியும் நாற்றமும் போல் மறைதுதி செய் இறைவரொடு பிரியாத இறைவி'[40] என இறைவனைப் பிரியாதமர்ந்த இறைவியின் இயல்புக்கு மதியிலிருந்து பிரியாத கலைகளும், கதிரினின்று பிரியாத சுடரும் உவமையாதலைக் காணலாம்.

### 5. 1. 2. 1. 1. 5. 1. 12 கார்

பொதுவாகக் கார்கால மேகம் வள்ளல்களுக்கு உவமிக்கப் படுவது மரபு. மீனாட்சிசுந்தரனாரின் சமய உணர்வுமிக்க கார் காலக் காட்சிகளுக்கு இறைவனின் தோற்றத்தை உவமை கூறியமை முன்னரே குறிக்கப்பட்டது (இதே ஆய்வு, 4. 7. 2. 1).

இறைவனின் அருளைப் போல் கார்கால மேகம் பொழிந்தது என அருளை மேகப் பொழிவிற்கு உவமையாக்குகிறார்.[41]

தலைவனும் தலைவியும் உடன்போக்காகச் சென்றுழிப் பின் தொடர்ந்து சென்று சுற்றத்தவர் வளைத்துக் கொண்ட நிலைக்கு ''காரே யென வளைத்தார் கொடுங் கானவரே''[42] எனக் கார் கால மேகம் சூழ்ந்து கொண்ட தன்மை உவமையாகிறது.

தலைவனின் தேர் ஒலிகேட்டு மகிழும் தலைவிக்குக் கார்கால மேகங்களின் இடிஒலிகேட்டு மகிழும் மயில் உவமிக்கப்படுகிறது.[43]

கரும்புன்னை மேல் படர்ந்த பவளக் கொடிகளுக்குக் கார் கால மேகங்களின் இடையே தோன்றும் மின்னல் உவமிக்கப்படு கின்றது.[44] சோலையில் தனித்திருக்கும் தலைவிக்குத் தோழிக்கும் இளமரக்காவில் தோன்றும் மின்னல் உவமையாகிறது.[45]

இவ்வாறு கார்காலம், அக்கால இயற்கை விளைவுகள், மேகம், இடி, மின்னல் என்ற அனைத்துமே இக்கவிஞர் பாடல்களில் உவமைகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இவைதவிர, ஐப்பெரும் பூதங்கள் (மங்கள நால். 1), காலை (குளத்தூர். 328), விண்மீன் (குளத்தூர். 87), நெருப்பு (துவா. நா. 116) என்ற அனைத்து இயற்கைச் சக்திகளுமே உவமையாகக் கையாளப்பட்டுள்ளன.

## 5. 1. 2. 1. 1. 5. 1. 13 இயற்கைக் காட்சிகள்

இறைவன் படைத்த பொருள்களின் ஒப்புமையைக் கண்டு மகிழ்ந்தது போலவே, சில காட்சிகளின் ஒப்புமையும் கவிஞரின் மனத்தைக் கவர்ந்துள்ளது.

தலைவியின் மென்மைத் தன்மையையும், அவளை வருத்திக் கொண்டிருக்கும் காமநோயின் மிகுதியையும் கூற வந்த தோழி,

''...வருக்கைச் சிறுகோட்டுத் தூங்கும் ஒருகனிபோல்
பெட்கும் உயிர் சிறிதாயினுங் காமம் பெரிது''[46]

என்கிறாள். இங்கு, ''சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கு''[47] எனச் சங்கப்புலவன் கண்டஉவமைக்காட்சி மீனாட்சிசுந்தரனாரால் பயன்படுத்தப்படுகிறது.

தலைவிபால் காமம் கொண்ட தலைவன் மிக வருந்துகிறான். அவன் வருத்தம் கண்ட தோழன் அவனை இடித்துக் கூற விரும்பி,

''...சிலம்பி

மென்னூல் வலையில் களிறகப்பட்டு மெலிந்தெனவோ
சின்னூல் இடைச்சி விழிவலைப் பட்டுளாந் தேம்பினை''

எனக் கூறுகின்றான்.

'களிறு போன்ற வலிமைஉடையநீ, அக்களிறு சிலந்தி வலையில் அகப்பட்டு மீள இயலாது மெலிந்ததைப் போல் ஒரு பெண்ணின் விழிவலைப்பட்டு வருந்தினை' என்னுமிடத்துக் களிற்றின் வலிமை தலைவனுக்கும், சிலந்தி வலையின் மென்மை தலைவிக்கும் உவமையாயிற்று. சிலந்தி வலையில் யானை அகப் பட்டு வருந்துதல் இயல்புக்கு மாறானது. தலைவனின் உள்ள வருத்தத்தால் தோழன் அடைந்த கோபமும், எள்ளலும், இடித் துரையும் உவமை வாயிலாகப் புலப்படுகின்றன.

தலைவியின் மென்மைக்குப் பிறிதோர் உவமம் அழகு செய் கிறது. 'தலைவன் கொண்ட காமமாகிய மதங்கொண்ட களிற்றைத் தடுக்கஇயலாத என் நாணம் தாமரை நூலைவிட மென்மையானது'[49] எனத் தலைவி தன்நாணத்தைத் தாமரை நூலுக்கு உவமையாகக் கூறுகிறாள். தாமரைத் தண்டிலிருந்து பிரித்தெடுக்கப்படும் இந்நூல் எடுக்கும் பொழுதே இற்றுவிழும் இயல்பினது. அதனைத் தலைவியின் நாணத்திற்கு உவமை கூறியது இன்பம் தரவல்லது.

இவ்வாறு மென்மைக்கும், வன்மைக்கும் இயற்கைப் பொருட் களே உவமங்களாகின்றன.

## 5. 1. 2. 1. 1. 5. 1.14 இயற்கைக்கு இயற்கை

ஓர் இயற்கைக் காட்சியை விளக்க வரும் கவிஞர், வேறோர் இயற்கைக் காட்சியை அதற்கு ஒப்புமை கூறுவதும் உண்டு.

இளமாதர் நீராடும் துறையில் பொருந்தி நீரில் மூழ்கிய வெள்ளை அன்னம், தன்மேனி முழுதும் அந்நீர்ப்பாசி போர்த்த எழுந்து, கரையேறித் தன் சிறகுகளை உதறி, அப்பாசியைப் போக்கிப் பழைய நிறம் அடைகின்றது. இக்காட்சிக்கு, வெண் முகில்கள் புணரி தோய்ந்து, நீருண்டு, கறுத்து, எழுந்து மேற்சென்று, உலகிற்குப் பயனளிக்கும் வண்ணம் அந்நீரை மழையாக உதறி, மீண்டும் வெண் மேகமாதல் உவமிக்கப்படுகிறது.[50]

வெள்ளை அன்னம் பச்சைப் பாசியை உதறிப் பழைய நிறம் அடைதலும், வெண்மேகம் நீரை உதறிப் பழைய நிறமடைதலும் ஒன்று போன்ற இரு கற்பனைக் காட்சிகள். இரண்டும் ஒன்றுக் கொன்று உவமமாக்கப்படுகின்றன.

பாட்டுடைத் தலைவன் தலைவியர் மறக்கப்பட்டு இயற்கை மட்டுமே விஞ்சி நிற்கும் இயல்புகளை இத்தகுஉவமங்கள் அளிக் கின்றன.

## 5. 1. 2. 1. 1. 5. 2 சமய உவமைகள்

ஆதீனப் புலவராக விளங்கிய இவர்தம் பாடல்களில் சமய உணர்வே மிகுதியாக ஆட்சி செய்கின்றது. சைவசமயம் என்ற ஒன்றையே தம் வாழ்வின் வழிபாடாகவும், குறிக்கோளாகவும், சிந்தனையாகவும், செயலாகவும் கொண்டு வாழ்ந்த மீனாட்சி சுந்தரனார் இயற்றிய நூல்கள் அனைத்தும் சைவசமய நூல்களே.

அகம், புறம், இறைவன், வள்ளல்கள், அடியார் என எவற்றைப் பாடினாலும் சமய உணர்வே எல்லாப் பாடல்களிலும் ஊடாடி நிற்கின்றது. இதனை இவர் கையாளும் உவமைகள் தெளிவுபடுத்துகின்றன.

சமயப் பற்றுக் காரணமாக அமைந்த உவமைகள், அடியவர் வரலாறு, புராணச் செய்திகள், இறைத் தோற்றம், இறைத் தத்துவம் எனச் சமய உவமைகளை வகைப்படுத்தலாம்.

## 5. 1. 2. 1. 1. 5. 2. 1 சமயப்பற்று

உடன் போக்காகச் செல்லும் தலைவன் தலைவியை இடைச் சுரத்தில் தமர் சென்று வளைத்துக் கொள்கின்றனர். இந்நிலைக்கு ஆசிரியர், 'புகலி இறைவனை எண்ணாதவரை வளைக்கும் கலியும் கடுவினையும் போல வளைத்தனர்'[51] என்கிறார். அகச்செய்தி பாடும் வந்த இடத்தும் இறைவனை எண்ணாதவர் அடையும் நிலையினை உவமையாக்குகிறார். இதே போன்ற உவமையமைப்பினை ஏனைய இடங்களிலும் காணலாம்.[52]

பிள்ளைத்தமிழ் நூல்களில் சிறுபறைப் பருவம் பாடுகின்ற இடங்களிலும் கவிஞரின் இவ்வுணர்வினைக் காணலாம். சேக்கிழார் முழக்கும் சிறுபறை முழக்கிற்குப் பல பொருள்களை உவமையாக அடுக்குகின்றார். 'பரசமயக் கருங்கடாயானை முழக்கினை அடக்கும் சிங்கக் குட்டியின் முழக்குப்போலவும், சைவப்பயிர் தழைய வரும் புயல் முழக்காகவும் சிறுபறை முழக்குக'[53] எனச் சேக்கிழாரை அழைக்கிறார்.

அதுபோலவே, அம்பலவாணரின் பறை முழக்கத்தினைக் கூறுமிடத்துச் 'சைவசமயம் சாரதார் கன்னத்தில் ஓங்கி அறைவது போலப் பறை முழக்குக'[54] என்கிறார்.

இதே அமைப்பினைப் பிற இடங்களிலும்[55] காணலாம். இவை மிகுதியான சமயப்பற்றினால் உருவான உவமைகளே.

## 5. 1. 2. 1. 1. 5. 2. 2 அடியவர் வரலாறு

மெய்யடியார் தம் இயல்பும், வரலாற்றுச் செய்திகளும் இவர் தம் கவிதைக்கு அணிசெய்கின்றன. செந்தாமரை மலர்மீது நித்

துறங்கும் ஆமையின் தோற்றம், செந்தழல் நடுவில் ஐந்நடக்கித்தவம் செய்யும் ஞானியர்போல விளங்குவதாகக் காட்டுகிறார்.[56] இதேபோல ஞானியர்தம் தவநிலை தலைவியின் பற்றற்ற உள்ள நிலைக்கு உவமையாக்கப்படுகின்றது.[57]

பிறிதோரிடத்து, 'வயிரங்கள் ஒளிவீச, பதுமராகங்கள் மிளிர, வெள்வளையும் வேழக்கரும்பும் முத்துதிர்ப்பக், கழுகு செம்பவளம் உதிர்ப்பத், தாமரை மலர்கள் சங்கநிதி, பதுமநிதியாக நின்று விளங்க இவ்வளவு வளத்தையும் கண்டும் அவற்றை எண்ணாது திரியும் மள்ளர்களை, 'ஓட்டொடு பொன் ஒப்பக் கண்ட ஞானியர் போல்' உள்ளம் களித்துத் திரிவர்''[58] என்கிறார். வளம் சான்ற கழனிகளையும் அதில் திரியும் உழவர்களையும் காணும் பொழுது கூட ஆசிரியருக்கு ஓடும் செம்பொன்னும் ஒக்க நோக்கும் அடியவர்தம் நினைவே தலைதூக்கி நின்றது என்பது தெளிவு.

சைவ சமயம் சார்ந்த பெரியோர்தம் வரலாற்று நிகழ்ச்சிகள் பலவற்றைத் தான் கூறவந்த செய்திகளுக்கு உவமையாக்குகிறார்.

சீகாழிக்கோவையில் அகச்செய்திகளுக்கு அடியவர் வரலாறு மிகுதியாக உவமையாக்கப்பட்டுள்ளது.

தான் செய் நோய்க்குத் தான் மருந்தாகிய தலைவியின் நிலைக்குப், புகலியிற் பாலுண்ட ஞானசம்பந்தர், பாண்டியனுக்குத் தாம் கொடுத்த நோயைத் தாமே போக்கியமையை உவமையாகக் கூறுகிறார்.[59] இங்கு ஞானசம்பந்தர் வரலாறு மிக நுட்பமாகத் தலைவியின் காதலியல்புக்கு உவமைப்படுத்தப்படுகின்றது.

குறவர்கள் தாங்கள் வளர்த்த தினை முற்றியமையின் அவற்றை அரிவாள் கொண்டு அறுத்துக் குவித்தனர். இக் காட்சிக்குக் 'கோட் புலியார் தம் குலமடங்க வாளால் மாய்த்தமை போல மாய்த்தனர்'[60] என்கிறார். தம் இனத்தவரைத் தாமே மாய்த்த கோட்புலி நாயனார் வரலாறு தாமே விளைவித்துத் தாமே அறுக்கும் குறவர் செயலுக்கு உவமையாயிற்று.

இதுபோன்று பிற அடியவர் வரலாறுகள் சீகாழிக்கோவையில் பல இடங்களில் உவமைகளாக அமைந்துள்ளன.[61]

பிள்ளைத்தமிழ் நூல்களிலும் அடியவர் வரலாறுகள் உவமை யாக்கப்பட்டுள்ளன.

'சங்கெறி துறைக்கண் கூடு ஒன்றமைந்த பூந்தரு ஒன்று

அக்கூட்டில் நுழைவது போல அசைந்தசைந்து ஆடுகின்றது. அவ்வாறு ஆடும் பொழுது அதன் உள்ளே தேன் மடுக்கச் சென்ற கயல் மீன்கள் துள்ளி நீர்த் தடத்தில் பாய்கின்றன. இக் காட்சி தன் வலையில் பட்ட மீனினை, அதிபத்தர் என்ற நாயனார் இறைவனுக்குப் படைப்புப் பொருள் என்று எடுத்து மீண்டும் நீரில் விடுத்ததைப் போல உள்ளது என்கிறார்.[62] இங்கு கற்பனையாக ஒரு காட்சியைப் படைத்துக் கொண்டு அதற்கு நாயன்மார் ஒருவரின் வரலாற்றை உவமையாக்கியுள்ளார்.

மதில்களில் ஆடும் கொடிகள் சம்பந்தரால் கழுவேற்றப்பட்ட சமணர்களுக்கு உவமையாக்கப்படுகின்றன.[63]

திருஞானசம்பந்தரின் திருமணம், காணவந்த அனைவருக்கும் முக்தி தந்தமை போலக் குன்றத்தூரும் தன்னைச் சார்ந்தார் அனைவர்க்கும் முக்தி தரவல்லது எனச் சம்பந்தர் வரலாறு உவமையாகிறது.[64]

## 5. 1. 2. 1. 1. 5. 2. 3 புராணச் செய்திகள்

புராண, இதிகாசங்களில் கூறப்படும் கடவுளர்பற்றிய செய்திகளே இவர்தம் பாடல்களில் மிகுதியாகப் பாடுபொருளாகியுள்ளன. அடியவர் வரலாற்றை உவமையாக்கியது போல, அப்புராணச் செய்திகளையும் சில இடங்களில் உவமையாக்கியுள்ளார்.

சத்திய ஞான தரிசனிகள் அருளிச் செய்த சிவஞான போதத்தைக் கைக்கொண்ட தக்கோர் பலர். அவர்களுள் பரஞ்சோதி முனிவரே தலைசிறந்தவர். இவரைக் குறிப்பிடுமிடத்து ஒரு புராணச் செய்தியை உவமையாக்குகிறார். ‘ முசுகுந்தன் இந்திரனிடமிருந்து மூசிவர்த்தம் பெற்றுப் பல தலங்களில் வைத்துப் பூசித்தான். எனினும் அவற்றுள் தலைசிறந்தது திருவாரூர், அது போலத் தலைசிறந்தவர் பரஞ்சோதிமுனிவர்’[65] என்கிறார். அடியவர் வரலாற்றுக்குச் சமயம் சார்ந்த புராணச் செய்தி உவமையாகியுள்ளது.

சேக்கிழார் பிறந்த குன்றத்தூர் மீது ஆசிரியருக்குப் பற்று மிகுதி. அதன் வளத்தை மிகுதியாக வருணித்துள்ளார். செல்வ வளம் மிக்க குன்றத்தூர் வயிரங்களாலும், நீல மணிகளாலும், பவளங்களாலும் இழைக்கப்பட்ட மாளிகைகளை வரிசையாகப்பெற்று விளங்கிற்று. இவற்றுக்கு ஆசிரியரின் உள்ளம் அழகிய புராண நிகழ்ச்சிகளை உவமையாக்குகின்றது.

‘ வயிரத்தூண் அமைந்த மாளிகைகள் பாற்கடல் கடையுமுன்

குயிற்றிய மாளிகைகள் கடல் கடைந்தபின் அவன்பெற்ற கரிய உருவத்தை ஒத்தன; பவளம் இழைத்த மாளிகைகள் பின் அவன் காஞ்சி ஏகம்பநாதரைப் பூசித்துச் செந்நிறம் பெற்றமையினை ஒத்தன[66] என்கிறார்.

திருமாலின் இயற்கைத் திருமேனி வெண்மை. திருப்பாற்கடல் கடைந்த பொழுது கரிய நிறம் பெற்றான். பின்னர்க்காஞ்சி நாதர் அருளால் செம்மை நிறம் பெற்றான் என்ற இச்செய்தி காஞ்சிப் புராணத்திலும், நாவுக்கரசர் பாடலிலும் குறிப்பிடப்படுகின்றது.[67]

விண்தொட்டு மண்பிளந்து ஓடும் காவிரியாற்று நீர்ப்பெருக் குக்கு, இறைவனின் அடிமுடி தேடியலைந்த திருமாலும், பிரமனும் உவமையாகின்றனர்.[68]

பருவமுகில் வெண்சுதை தீட்டப்பட்ட மாடங்கள் மீது துயில் கின்ற காட்சிக்குப் பாற்கடல் மிசைக் கண் வளரும் திருமாலின் தோற்றம் பல இடங்களில் உவமையாக்கப்பட்டுள்ளது.[69]

இவை போன்ற பிறபுராணச் செய்திகளும் பல இடங்களில் உவமையாகியுள்ளன.[70]

சைவச் சம்பிரதாயங்களைப் பேணிக்காக்கும் ஆதீனத்தில் கம்பராமாயணம் பாடமாகப் போதிக்கப்பட்டது என்பது குறிப்பிடத் தக்க செய்தியாகும். ‘தமிழிற் சைவ வைணவ சமயச் சார்பான கருவி நூல் படிப்பவர்களும், கந்த புராணம், பெரிய புராணம், கம்பராமாயணம் முதலிய நூல்கள் திருமுறை முதலியவைகள், ஸ்தல புராணங்கள், சைவ சாஸ்திரங்கள் முதலியவற்றைப் படிப்பவர்களும் அங்கே உண்டு’[71] எனத் திருவாவடுதுறை ஆதீனத்தைப் பற்றி உ. வே. சாமிநாதையர் குறிப்பிடுவது இவண் நோக்கத்தக்கது.

அவ்வாதீனத்தில் ஆசிரியராய் விளங்கிய மீனாட்சிசுந்தரனாரும் கம்பராமாயணச் செய்யுட்கள் மீது ஆழ்ந்த பற்றுக் கொண்டவராகவே விளங்கியுள்ளார். அச்செய்யுட்களைப் பாடம் சொல்லித் தரும்போது, அவர் மனம் உருகிக் கண்ணீர் சிந்திய செய்தியும் உ.வே. சாமிநாதை யரால் குறிப்பிடப்படுகிறது.[72]

இப்பற்றின் காரணமாகவே, தம் படைப்புக்களில் கம்ப ராமாயணச் செய்திகளை உவமைகளாகக் கையாண்டார் போலும். வறுங்களம் கண்டு வருந்திய தலைவனுக்கு, மானின் பின்னே சென்று திரும்பிச் சீதையைக் காணாது வருந்திய இராமனை உவமித் துள்ளார்.[73] இதே போன்று, தலைவனை இராமனுக்கும், தலைவியைச் சீதைக்கும் உவமிக்கும் இடங்கள் பல.[74]

## 5, 1. 2. 1. 1. 5. 2. 4 இறையியல்

இறைவனின் தோற்றமும், தண்ணளி சுரக்கும் இயல்புகளும் ஆங்காங்கே உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

'உறந்தை நகர் மிக உயர்ந்த மாளிகைகள் உடையது. அம்மாளிகைக் கோபுரங்கள் வான்முகடு திறக்கும்அளவு உயர்ந்தவை. அவற்றில் செம்பொன் தகடுகள் வேயப்பட்டுள்ளன. அத்தகடு களில் கோபுர உச்சியில் பதிக்கப்பட்ட செம்மணியின் ஒளிபட்டுத் தழைத்துச் சிவந்து காணப்படும். இதனைக் கண்ட உம்பர் முதலானோர், அரிக்கும் அயனுக்கும் எட்டாத இறைவன் தோற்றம் என எண்ணி உருகித் துதிப்பர்.[75]

இப்பாடலில் செம்மணியால் ஒளிபெற்ற கோபுரத் தகடுகளின் ஒளி, சிவந்த மேனியனாகிய இறைவன் தோற்றத்திற்கு உவமிக் கப்படுகிறது.

அம்மானைப் பருவத்தில், 'மாணிக்கம், வயிரத்தாலாகிய அம்மானைக் காய்களை இருபுறமும் கொண்டு, நடுவில் நீல நிற அம்மானை எழ ஆடும் காட்சி, திருமகளும், கலைமகளும் இருபுறம் வர நடுவே இறைவி எழுந்தருளுதல் போல உள்ளது' என்கிறார்.[76]

கொள்ளிட நதியின் வரவிற்கு இறைவனின் உருவம் உவமை யாகிறது.[77]

இறைவனின் பார்வை தலைவியின் அருட்பார்வைக்கும், இறைவன் உருவம் தலைவியின் உறுப்புக்களுக்கும்[78] இறைவனது நெற்றிக் கண் பாலைக் காட்டிற்கும்[79] உவமைகளாகின்றன.

இவ்வாறு காணும் பொருளில் எல்லாம் இறைவனைக் காணும் பக்தி உள்ளத்தை இவ்வுவமைகள் புலப்படுத்துகின்றன.

'இறைவியின் அணிகலன்கள் சிலவிடங்களில் செம்மணிகளால் வெயில் பெற்றும், சில இடங்களில் முத்துக்களால் நிலவாகியும், சில இடங்களில் நீலக்கற்களால் இருளாகியும் காட்சி தருவது, இறைவன் சில உயிர்களுக்கு வெம்மையும், சில உயிர்களுக்குத் தண்மையும், சில உயிர்களுக்கு இருளும் தருவது போல விளங்கு கின்றது'[80] என எண்குணத்தானாகிய இறைவனின் எல்லா இயல்பு களையும் உவமைகளாக்கி மகிழ்கிறார் ஆசிரியர்.

### 5. 1. 2. 1. 1. 5. 2. 5 இறைத் தத்துவம்

இறையியல், ஆன்மவியல் தத்துவங்களில் மூழ்கித் திளைத்தவர் மீனாட்சிசுந்தரனார். சைவ சித்தாந்த நூல்களை வேதங்களாக எண்ணி வழிபட்டவர். இவர்தம் படைப்புக்களில் அழகிய காட்சிகளைப் படைத்துக் காட்டும் பொழுது சித்தாந்தக் கருத்துக்களை உவமையாகப் பயன்படுத்தியுள்ளார்.

பெருந்திருப் பிராட்டியை நித்தில அம்மானை ஆட அழைக்கிறார், புலவர். வெண்மை நிறம் உடைய நித்தில அம்மானை அம்மையின் சிவந்த கைகளில் படும்பொழுது சேயொளி பட்டும், மேல் நோக்கி எறியப்படும் பொழுது குழலின் ஒளியால் காரொளி பெற்றும், மீண்டும் கைக்கு வரும்பொழுது சேயொளி பெற்றும் திகழ்வதாகக் கற்பனை செய்கிறார்.

இக்காட்சியை உவமை நயத்தோடு, ''சத்துவ குணம் திரண்டதைப் போன்ற நித்தில அம்மானை, நின்தடக்கை தழுவும் பொழுதுசேயொளி பெற்று இராசத குணமாகியும், குழலொளிபெற்றுக் கருமையடையும் பொழுது தாமசமெனுங் குணமாகியும் காணப் பெறுவது உயிர்கள் இறைவனைச் சார்ந்து ஒளிபெற்றும், இருளைச் சார்ந்து இருள் பெற்றும், உழல்வதனை ஒக்கும்''[82] என்கிறார்.

இந்த நித்தில அம்மானை சத்துவ குணத்திற்கும், சேயொளி பெறுதல் இராசத குணத்திற்கும், இருண்மை பெறுதல் தாமச குணத்திற்கும் உவமையாகின்றன. மாறிமாறி அவை வண்ணம் பெறல் உயிர்கள் உழல்வதற்கும் உவமையாகின்றது. சாத்வீகம், இராசதம், தாமசம் என்னும் இறைவனின் முக்குணங்களும் இங்கு உவமையாக்கப்பட்ட திறன் நோக்கத்தக்கது.

பதியை அடைவதற்கு ஆன்மா செய்யும் முயற்சியைத்தலைவனை அடையத் தலைவிக்குத் தோழி ஆற்றும் உதவிக்கு உவமையாக்குகின்றார்.[83]

இதுபோன்றே, பேதம், அபேதம் என்ற தத்துவங்களும்[84], கேவலநிலை, சகலநிலை, சுத்தநிலைகளாகிய உயிரியல்புகளும்[85], உயிர் இறையருளால் முக்திபெறும் வகைகளாகிய, சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்பனவும்[86] உவமைகளாக்கப் படுகின்றன. இவற்றின் விரிவு 'சமய உணர்வு' என்ற இயலில் ஆராயப்பட்டுள்ளது.

## 5. 1. 2. 1. 1. 5. 3 இலக்கண உவமைகள்

இலக்கிய அறிவும், சித்தாந்த அறிவும் மட்டுமல்லாது, ஆசிரியரின் இலக்கண அறிவும் அவர் கையாண்ட உவமைகளால் புலப்படுத்தப்படுகின்றது.

இரு உயிர் எழுத்துக்கள் ஒன்றுடன் ஒன்று புணருமிடத்து, ஒரு மெய்யெழுத்து இன்றி அவை சேரா. இம்மெய்யை உடம்படுமெய் என்பார் இலக்கணநூலார். தலைவனும், தலைவியுமாகிய இரு உயிர்களும் சேர்தற்கு உதவுபவள் தோழியே. இதனைத் தோழி,

''இடம்படும் என்னை மறைத்துப் புணர்திறம் எய்துவிரோ
உடம்படு மெய்யன்றியே புணராது உயிரொடு உயிரே;'[87]

என்கிறாள். இங்குத் தோழிக்கு உடம்படுமெய் உவமையானமை சிறப்புக்குரியது.

உயிரும் உயிரும் புணர்ந்ததைக் கூறிய ஆசிரியர், பிறி தோரிடத்து, உயிரும் மெய்யும் புணர்வதை உவமையாக்குகிறார். உயிர் எழுத்தும் மெய்யெழுத்தும் தாமே புணரவல்லன. அங்கு வேறொரு எழுத்துத் துணை வருவது கிடையாது. இங்குத் தலைவனிடம், 'நின் குறை நீயே சென்று உரை' எனக் கூறும் தோழி, ''உடல்மேல் உயிர் வந்து ஒன்றுவதியல்பு என்னும் சூத்திரம் உணர்ந்துளையே'[88] எனக் கேட்பதாக அமைத்துள்ளார்.

இறைவனுக்கும் இறைவிக்கும் நடுவில் விநாயகப் பெருமான் அமர்ந்துள்ள காட்சி தாப்பிசைப் பொருள்கோள் போலக் காணப்படு வதாகக் குறிப்பிடுகின்றார்.[89] தாப்பிசைப் பொருள்கோள் என்பது ஒரு சொல் பாடலின் நடுவில் நின்று முன்பகுதியையும். பின் பகுதியையும், பொருளால் தொடர்பு படுத்துவதாகும். இங்கு அம்மையையும், அப்பனையும் இணைக்கும் தாப்பிசை போன்று விநாயகர் அமர்ந்துள்ளார் என்ற கருத்து நுட்பம் செறிந்ததாகும்.

இலக்கணத்தில் சிங்க நோக்கு என்பது ஓர் உத்தியாகும். முன்னர்க் கூறியதையும், பின்னர்க் கூறியதையும் இடைநின்றே இணைக்கும் உத்தியே சிங்கநோக்கு எனப்பட்டது. இவ்வுத்தியும் இவர் பாடலில் உவமையாகியுள்ளது. ஆலவனமாகிய திருவாலங் காட்டுக்கும், குருந்தவனமாகிய திருப்பெருந்துறைக்கும் இடைப்பட்ட அரசவனம் எனப்படும் திருவாவடுதுறையில் அமர்ந்து அருளியவர் பஞ்சாக்கர தேசிகர். இக்கருத்தினை,

மருவு வாரு மருள்பெறுவான்
மன்னு நடுப்பால் அரசவனத்
தாய்ந்த சிங்க நோக்கமென
அமர்ந்து நோக்குங் குருசிங்கம்''[90]

என்கிறார். வடபால் உள்ளவர்களும், தென்பால் உள்ளவர்களும், அருள்பெறும் வண்ணம் நடுவண் சிங்க நோக்கம் போல அமர்ந்த குருசிங்கம் எனப் பஞ்சாக்கர தேசிகர் திருவாவடுதுறையில் ஆதீனம் அமைத்து அமர்ந்த நிலைக்கு உவமை கூறுவது பொருத்தமாக அமைந்துள்ளது.

அகத்தியருக்குத் தொல்காப்பியர் மாணவரானமை போலத், திருநந்தி தேவருக்குச் சனற்குமாரர் அமைந்தார்'[91] என வருமிடம் இவரது இலக்கண வரலாற்றறிவையும் சமயம் அறிந்து அதனைப் பயன்படுத்தும் திறனையும் புலப்படுத்துகிறது.

## 5. 1. 2. 1. 1. 5. 4 பிற உவமைகள்

மேற்கூறிய பாகுபாடுகளுக்கு உட்படாமல் அமைந்த சுவையான உவமைகள் சில கற்போருக்கு இன்பம் பயப்பதாய் அமைந்துள்ளன.

திருவிடைக்கழியின் வளம்பாட வந்த கவிஞர் ஓர் அழகிய காட்சியைக் காட்டுகிறார். 'காவிரியாற்றின் ஒழுக்கில் ஓடிவந்த கமஞ்சூல் பெருஞ்சங்கம் மதகுவழிப் புகுந்து, வாய்க்கால் வழியே வெளியேறியது. பின் மணம்மிகு மலர்க் கொடி ஒன்றின் மீது ஏறியது. அக்காட்சி கழைக் கூத்தாடிகள் கயிற்றின் மீது ஏறி ஆடுவது போல அமைந்தது'[92] என்கிறார். இயற்கைக் காட்சி ஒன்று, அன்றாடம் வாழ்வில் காணும் கழைக் கூத்தாடிகளை உவமையாகப் பெற்றமை சுவை மிக்கது.

கூறியதையே மீண்டும் மீண்டும் கூறும் பாணனை, வீணை இசைக்குங் கைபோல'[93] என உவமிக்கின்றார். மீண்டும் மீண்டும் வீணையைத்தடவி ஒரேமாதிரி மீட்டிக் கொண்டிருக்கும் கையினைப் பாணனின் இயல்புக்கு உவமையாக்கியுள்ளார்.

தலைவியின் மாற்றத்தைக் காண்கிறாள் செவிலி. நேரடியாக அவளை ஏதும் வினவாமல், கொஞ்சம் கொஞ்சமாக வினவியும், ஆராய்ந்தும் அவள் உட்கருத்தை அறிய முயல்கிறாள். இதற்குப்

பலாக்சனியை முழுதுமாக அரிந்து சுளை எடுக்காது, சிறு துளை யிட்டுத் தோண்டித் தோண்டி ஒவ்வொரு சுளையாக எடுப்பாரை உவமையாக்குகின்றார்.[94]

இவ்வாறு அமையும் உவமைகள் இனிமையும் சுவையும் அமைந்து, கவிஞரின் பாடல்களுக்கு அணி செய்கின்றன.

## 5. 1. 2. 1. 1. 5. 5 அபூத உவமை

தண்டியலங்காரம் உவமை வகைகளுள் ஒன்றாக அபூத உவமையைக் குறிப்பிடுகின்றது. முன்பு இல்லதனை உவமையாக்கி உரைப்பது என இதற்கு விளக்கம் தருகின்றனர். இவ்வணியே இல்பொருள் உவமை என்றும் கூறப்படுகிறது.

அம்பல. வில் அம்பலவாண தேசிகர் தன் கரங்களால் திருநீறு அள்ளித் தொண்டர்களுக்கு வழங்கும் செயலுக்குத், தாமரை மலர் ஒன்று திங்களைப்பற்றி இடித்துப் பொடியாக்கி அள்ளிவீசும் செயலை உவமைப்படுத்துகிறார்.[95] தாமரை மலர் திங்களைப் பிடித்துப் பொடி செய்தல் என்பது முன் இல்லாத செயலாகும். அதனை உவமை யாக்கியமையின் இது அபூத உவமையாயிற்று.

தலைமகளது உருவெளித் தோற்றத்தைக்கண்ட தலைவன்,

''... பாதிப் பிறையு நிறையு முழுமதியும்
கொன்னொன்று மேகமுங் கோபமுஞ் சாபமுங் கொண்டுபொலி
மின்னொன்று பார்க்குந் திசைதோறுந் தோன்றும்''[96]

என்கிறான். தலைவியை மின்னலுக்கு உவமிப்பது இயல்பான உவமை. பாதிப் பிறை நெற்றியையும், முழுமதி முகத்தையும், மேகம் கூந்தலையும், இந்திர கோபம் சிவந்த இதழையும், வில் புருவத்தையும் குறிப்பால் புலப்படுத்தும் உவமங்களாகும். ஆனால் இவை அனைத்தும் ஒன்றாக இணையப் பெற்ற மின்னல் என்பது இல்பொருள் உவமம் ஆகும்.

இவ்விரண்டு இடங்களில் மட்டுமே இல்பொருள் உவமை அமைந்துள்ளது.

## 5.1.2.1.1.5.6 உள்ளுறை உவமை

உவமையணியைப் பற்றிப் பேசும் தொல்காப்பியர் அதன் வகைகளுள் ஒன்றாக உள்ளுறை உவமத்தைக் கூறுகிறார்.

''உள்ளுறுத் திதனோ டொத்துப்பொருண் முடிகென
உள்ளுறுத் திறுவதை யுள்ளுறை யுவமம்' (தொல். அகத். 48)

என்பது தொல்காப்பியம்.

"புலவன் கருதியதையே படிப்பவனும் உணரும் வண்ணம் ஆற்றலோடு பொருந்தி அமைவதே உள்ளுறையுவமம்"[97] என்பர். எனவே, புலவன் குறிப்பாகக் கூறுவதைப் படிப்பவன் உணர்ந்து பெறும் இன்பமே உள்ளுறையுவமத்தின் பயன் எனலாம். "அகப் பாடலுக்கு உரிய உத்தியாக விதந்து ஓதப்படும் உள்ளுறை, குறிப்புப் பொருளாகவும் பிற இலக்கியங்களிலும் இடம் பெறுகின்றது. கவிஞனின் மனத்திடை ஆழ்ந்த கருத்துக்கள் வாய்ப்பேற்படுமிட மெங்கும் வெளிப்பட வாயிலாக இக்குறிப்புப் பொருள்நிலை அமைகின்றது. வருநிகழ்வை முன் உணர்த்தும் மறைச் சுட்டாகவும் இது வர வாய்ப்புண்டு"[98] என உள்ளுறை உவமத்தின் பயன் பாட்டைத் திரு. ச. வே. சுப்பிரமணியன் விளக்குகிறார்.

கூறவந்த உரிப்பொருட் செய்திகளை நனிநாகரிகமாக வெளியிடுவதற்கு இக்குறிப்புப் பொருளைப் புலவர்கள் பயன்படுத்தினர். மீனாட்சிசுந்தரனாரின் கோவை இலக்கியங்களில் அகச்செய்திகளைக் கூறுமிடத்து உள்ளுறை உவமம் அமைந்து காணப்படுகிறது.

இரவுக்குறியில் தலைவன் வந்து நின்ற செய்தியைத் தலைவிக்கு உணர்த்த விரும்பிய தோழி,

"கடியொனறு வானபுன முன்னாள்
வருவெங் களிறுவந்து
பிடியொன்று நாடிநிற் கின்றதின்
றோர்நம் பெரும்பொழிற்கே"[99]

என்கிறாள். முன்னர்த் தினைப்புனத்திற்கு வந்த களிறு, இன்று பிடியை நாடி நம் பொழிலிடை வந்து நின்றது என்பது, முன்னர்த் தினைப் புனத்திற்கு வந்த தலைவன், இன்று தலைவியை நாடிப் பொழிலுக்கு வந்துள்ளான் என்பதைக் குறிப்பால் புலப்படுத்துகின்றது. இங்கு, தலைவனின் வரவினைப் பிறர் அறியாவண்ணம் கூறும் தோழியின் நாவன்மை உள்ளுறை உவமமாக அமைகிறது.

களவில் தலைவனோடு புணர்ந்த தலைவியை மீண்டும் ஆயக் கூட்டத்தோடு சேர்க்கும் தோழி,

"இருளில் கமலம்மலர்ந்தது வள்ளையி லேறியது
சுருளில் கழிந்த கருநீலம் ஆயத்தில் துன்னுவம்வா"[100]

என அழைக்கிறாள்.

இங்கு, 'இருண்ட கூந்தலிடையே முகமாகிய கமலம் மலர்ந்தது. கரு நீலம் போன்ற கண்கள் வள்ளைக் கொடிபோன்ற

ளைத் தொட்டு மீள்கின்றன' எனவே தோழியர் கூட்டத்தை வோம், வா என அழைப்பதாக அமைகிறது.

அதாவது, தலைவனின் புணர்ச்சி பிறர் அறியாத வண்ணம் தாமரை போன்று மலர்ந்தது; புணர்ச்சியால் சிவந்த கண்கள் ும் போலக் கறுத்து விட்டன. எனவே இனித் தோழியரிடம் லாம் என்பது உள்ளுறை ஆகும்.

தலைவனின் பரத்தமை ஒழுக்கமும் பல இடங்களில் உள்ளுறை புலப்படுத்தப்படுகின்றது. ''கரும்புபொழி தீஞ்சாறு வெறுத் கலங்கல் நீரை விரும்பும் எருமை நிறைந்த ஊரன்''[101] ம், 'இரவில் ஆம்பல் தேனை உண்டு, காலையில் தாமரைத் ளயும் உண்ணும் வண்டுகள் நிறைந்த ஊரன்''[102] எனவும் ம் புலவும் கமழ் புனலூரன்''[103] எனவும் தலைவனின் பரத் ஒழுக்கம் உள்ளுறையாகப் பேசப்படுகின்றது.

''கறியிடத்தே சந்தின் பூஞ்சினை தாழ்வரைக் காவலரே'[104] றுமிடத்துத், 'தலைவி செய்த குறியிடத்து நீயாக வந்துஅவளைச் ல் வேண்டும்' என்கிறாள் தோழி. 'சந்தன மரக்கிளைகள் ரகவே தாழ்ந்து, அருகிருக்கும் மிளகுக் கொடிகளைப் பற்றிக் ள்ளும் நாடனே' என அழைப்பது, தலைவனும் தானே வந்து லவியைத் தழுவிக் கொள்ளல் வேண்டும் என்ற கருத்தை ளுறையாகப் புலப்படுத்துகின்றது.

இவ்வாறு களவுக் காலத்துத் தலைவனின் வரவு, தலைவன் லவியர் புணர்ச்சி என்பனவும், கற்புக் காலத்துத் தலைமகனின் தமை ஒழுக்கமும் உள்ளுறை உவமத்தால் விளக்கம்பெறுகின்றன.

## . . 2. 2 உருவகம்

. 2. 2. 1 ''உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்
தொன்றெனை மாட்டின் அஃதுருவ கமாகும்''[105]

பது தண்டியலங்காரம் உருவகத்திற்குத் தரும் விளக்கமாகும். மையணிக்கு அடுத்த நிலையில் சிறப்புப் பெறுவது உருவக தும்.

1. 2. 2. 2. 2 ஆங்கிலத்தில் 'metaphor' என்ற சொல்லால் நவகம் குறிப்பிடப்படுகின்றது. உருவகத்திற்கு ஐ. ஏ. ரிச்சர்ட்ஸ் றும் விளக்கத்தினை, ' ஒரு பொருளின் அழகைக் கண்டு, மற் ாரு பொருளின் அழகை நினைந்து இ?னை அதனோடு ஒட் தல் உவமை. அதே மன நிலை மேலும் சிறிது வளர்ந்து, இரண்

பொருளையும் வேறுவேறாகக் காணாமல், ஒன்றிலேயே மற்றொன்றைக் கண்டால் அது உருவகம் எனப்படும்'[106] என மு. வ. தெளிவு படுத்துகிறார்.

மேற்கூறிய விளக்கம் அடக்கிச் செறித்த உவமையே உருவக மாகும் என்ற அறிஞர் கூற்றுக்கு அரண் செய்வதாகும். எனவே உவம உருபின்றி உவமிக்கப்படும் பொருளும், உவமைப்பொருளும் ஒன்றே எனக் கூறும் தன்மையே உருவக அணி எனப்படுகின்றது. இது உவமையின் ஒரு வளர்ச்சி நிலையேயாகும்.

உருவகஅணி மீனாட்சிசுந்தரனாரால் கையாளப்படும் திறன் ஆய்வுக்குரியது. இவர் பாடல்களில் வரும் உருவகத்தை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம்.

1. சுருக்கமாக அமைந்த உருவகம்
2. நீண்ட உருவகம்.

'கவலைக் கிழங்கு', 'காமவாரி', 'வாக்காயுதம்', 'கருணை வெள்ளம்' என்பன போல வருபவை விளக்கம் இல்லாது அமைந்து, பொருள்தரும் உருவகங்களுள் சிலவாகும்.

இவை போலன்றிப் பிற உருவகங்கள் விளக்கமாகவே கூறப் படுகின்றன. இவர்தம் பாடல்களில் மேகம், தாமரை என்ற உருவகங்கள் மிகுதியாக உள்ளன.

## 5. 1. 2. 2.2.1 மேகம்

கருணை, வள்ளன்மை என்ற நற்குணங்களை மேகமாக உருவகித்தல் மரபு. இவர் பாடல்களிலும் பல நிலைகளில் இத்தகு உருவகத்தைக் காண்கிறோம்.

திருவெண். ணில் திருமாலை மேகமாக உருவகித்துள்ளார். அவ்வுருவகத்தில் அழகிய கற்பனை நயத்தையும் காண்கிறோம். 'பேருலகில் ஆருயிர்ப் பயிர் தழையும் வண்ணம் கருணை மழை பொழிவதற்காகத், தேமேவு பங்கயச் செல்வியின் கண்களாகிய கடலில் படிந்து நீருண்டு, அவள்தன் திதலைகொள் கொங்கை களாகிய மலைகளின் மீது அமர்கின்ற மேகமாகிய பச்சைமால்'[107] என்ற உருவகம் கற்பனை நயத்தோடு அமைந்த அணி நல னுடையது. இங்கு திருமாலை மேகமாக உருவகித்தற்கு ஏற்பக் கருணையை மழையாகவும், திருமகள் கண்களைக் கடலாகவும், மார்பகங்களை மலைகளாகவும் உருவகித்த திறமும் நோக்கத் தக்கது.

சேக்கிழார். இல் சேக்கிழாரை மேகமாக உருவகித்துள்ளார். 'விபூதியினால் விளர்ப்புற்று, அன்பின் வழி இயங்கி, வேறுவேறாம் பரசமயக் கோடை ஒழியும் வண்ணம், சிற்றம்பல நாதர்தம் கருணைக் கடலில் படிந்துண்டு, திசை எங்குந் தோன்றிட மின்னித், தீய ஒழுக்கங்கள் கெடக் கறுத்து, அடியார் தம் மலத் துன்பங்கள் கழல 'அர அர' என்ற முழக்கினை எழுப்பித் திருத்தொண்டர்தம் சரித்திர மாகிய மழையினைப் பொழிந்த கொண்டல்'[108] என்ற உருவகத்தில், மேகத்தின் இயல்புகளாகிய வெண்ணிறம், வாரிபடிதல், கறுத்தல், மின்னல், முழங்கல், பொழிதல் என்ற அனைத்தையும் சமய உணர்வோடு சேக்கிழாரோடு இணைத்து, அவரையே மேகமாக உருவகிக்கிறார்.

முருகர். இல் முருகன் கையில் ஏந்தியவில் மேகமாக உருவகப் படுத்தப்படுகின்றது.

''நிறைந்தவெஞ் சூர்ப்படைக் கோடையற
அம்புமழை நேர்பொழியு மேகமாய
சிலையுடைச் சேவக விடைக்கழி
யுடைக்குழக சிறுதேர் உருட்டியருளே''[109]

எனுமிடத்து அசுரர் கூட்டங்களைக் கோடை வெயிலாகவும், முருகன் கைவில்லினை அவ்வெம்மையை அழிக்க வந்து அம்புமழை பொழி யும் மேகமாகவும் உருவகப்படுத்துகின்றார்.

## 5. 1. 2. 2. 2. 2 தாமரை

மீனாட்சிசுந்தரனார் பாடல்களில் தாமரையாக உருவகிக்கப் படும் பொருட்கள் பல. முகம், கை, பாதம், இதயம், உலகம், இறைவன் என்பன தாமரை மலராக உருவகிக்கப்பட்டுள்ளன.

அம்பல. வில் சைவ சித்தாந்தக் கருத்தை அடியொற்றி இதயம் தாமரையாக உருவகிக்கப்பட்டுள்ளது. இதன் விளக்கம் 'சமய உணர்வு' என்ற இயலில் தரப்படுகிறது.

மங்கள. வில் அடியவர்தம் இதயத் தாமரையில் அமர்ந்தவன் இறைவன் (செங். 2) என்ற குறிப்புத்தரப்படுகிறது.

இறைவனின் வடிவம் தாமரையாகக் காட்டப்படுகிறது. 'பரமன் திருக்கண்டமே நாளமாகவும், சென்னி அடிப்பரப்பாகவும், உச்சியே பொகுட்டாகவும், சூழ்ந்த செஞ்சடை புல்லிதழாகவும், அச்சடையி லணிந்த பாம்புகளின் பைகளே அகவிதழாகவும், கங்கை நீரே தேனாகவும், வெண்ணீறு தாதாகவும், உருத்திராக்கம் வண்டாகவும்

சோடு விளங்கும் தாமரை மலராகிய இறைவனைத் தன்கரத் தாமரைகளோடும், முகமதியோடும் வீழ்ந்து வணங்கும் தாமரைத் தாளுடை இறைவி[110] என்ற பாடலில் தாமரையின் அனைத்து உறுப்பும் இறைவனின் சென்னியில் காட்டப்படும் திறத்தைக் காண லாம்.

அதே போன்று உலகைத் தாமரையாக உருவகிக்கும் இடமும் சிறப்புடையது.[111] இத்தகு உருவகங்கள் கற்பனை நயத்தோடு கூடியவைகளாக அமைகின்றன.

முகத்தையும் பாதத்தையும் தாமரையாக உருவகிக்கும் அழகிய பாடல்கள் பல காணப்படுகின்றன.[112]

5.1.2.2.2.3 இவை தவிரக் கதிராகவும், மதியாகவும் கடலா கவும், விலங்குகளாகவும், மலர்களாகவும் அமைகின்ற உருவகங்கள் பல காணப்படுகின்றன.

ஸ்ரீ அம்பலவாண தேசிகரைப் பற்றிப் பாடுமிடத்து ஐம் பெரும் பூதங்களாகவும் உருவகப் படுத்துகிறார். 'பரசமயத்தவர் வாயில் நுழையும் மண்ணானவன்; சைவப்பயிர் தழைக்க வந்த நீரானவன்; வினைக் காட்டினை அழிக்க வந்த நெருப்பானவன்; வினைவிலகி ஓடும்படி வந்த காற்றானவன்; தவத்தவர் உள்ளத்தில் அமைந்த வெளியானவன்'[113] எனத் தேசிகரின் சமய உணர்வுக்கும் பற்றுக்கும் ஏற்ப அவரை உருவகிக்கின்றார்.

அம்பலவாணரை, 'இந்திரிய மாவேட்டம் புரிதற்குரிய குறிஞ்சிப் பறையாய், அடங்காத மனம் எனும் இமிலேற்றை அடக்கும் முல்லைப் பறையாய், உடல், பொருள், ஆவி அனைத்தை யும் கொள்ளை கொள்ளும் பாலைப் பறையாய், மூதுணர்வு என்னும் புனல் அறாது ஒழுகுதற்குரிய மருதப் பறையாய், பரசமயக் கோள் மாய்க்கும் நெய்தல் பறையாய் அமையும் சிறுபறை முழக்கி யருள்க'[114] என வேண்டுகிறார். இங்கு ஐந்நிலப்பறையுமாகச் சிறு பறை முழக்கம் உருவகிக்கப்படுகின்றது. ஒவ்வொரு நிலப்பறை யின் முழக்கும் சிறுபறையோடு பொருத்திக் காட்டப்படும் நயம் சிறப்புடையது.

தலைவியின் அல்குலைப் பாம்பாகவும், அவள் அழகால் கலங்கிய தன் அறிவினை மதியாகவும் உருவகித்துத் தலைவன் கூறுவதும் பல இடங்களில் அமைந்துள்ளது.[115]

இவை தவிர, உயிர் நிலம், இறையுணர்வுபுனல், விளைவு பேரின்பம்[116] எனவும், அம்பலவாணர் பல இதயத் தாமரைகளை

மலர்த்தும் கதிரவன்[117] எனவும், 'பிறைமுடிச் செம்பொன் மலையைப் புணர்ந்து, ஓர் பிறைபட்ட கோடுடைக் கைம்மலையை ஈன்று ஒளி பிறங்கும் மரகதமலை' [118] என இறைக் குடும்பத்தையே மலைக் குடும்பமாகவும், ஆகாயத்தைக் கடலாகவும்[119], இறைவனைத் துன்பப் பஞ்சினைப் பறக்கச் செய்யும் காற்றாகவும்[120], தலைவியின் மார்பினைச் செவ்விள நீராகவும்[121], கண்ணீரை நீலம் உதிர்க்கின்ற முத்தாகவும்[122], தலைவியை முல்லையாகவும் தலைவனைக் கள்ளி மலராகவும்[123], அமைத்துக் காட்டும் உருவகங்கள் அனைத்தும் தாம் கூறவந்த பொருளின் இயல்பறிந்து கவிஞர் அமைத்த உருவகங்க ளாகும்.

5 1. 2. 2. 2. 4 இவை தவிர முற்றுருவகமாக அமைவனவும்[124] முன்னிலை விளியாக அமைகின்ற உருவகங்களும் இவர்தம் பாடலுக்கு அணி செய்கின்றன.

## 5. 1. 2. 3 தற்குறிப்பேற்றவணி

5. 1. 2. 3. 1 இயல்பாக நடக்கின்ற நிகழ்ச்சி மீது புலவன் தன் கருத்தை ஏற்றிக் கூறுதல் தற்குறிப்பேற்றம் எனப்படும். இதனை,

''பெயர்பொரு ளல்பொரு ளெனவிரு பொருளினும்
இயல்பின் விளைதிற னன்றி யயலொன்று
தான்குறித் தேற்றுதல் தற்குறிப் பேற்றம்'' [125]

எனத் தண்டியலங்காரம் விளக்குகின்றது. இயங்கும் பொருள் மீதும், இயங்காப் பொருள் மீதும் தற்குறிப்பேற்றம் அமைத்தல் மரபு. இவ்வணி கம்பன் கவிதைகளில் மிகச் சிறப்புப் பெற்று இலங்குகிறது. கம்பன் வழிவந்த பிற்காலப் புலவர் பெருமக்களும் தம் கற்பனைத் திறத்தால் இவ்வணியை நலமுறப் பயன்படுத்தினர்.

5.1.2.3.2 மீனாட்சிசுந்தரனார் பாடல்களில் தற்குறிப்பேற்றவணி மிகுதியாகப் பிள்ளைத்தமிழ் நூல்களில் இடம் பெறுகின்றது. கோவைப்பாடல்களில் ஓரளவு இடம் பெற்றுள்ளது.

இறைவன் இறைவி தோற்றம், புராணச் செய்திகள் அம்மானை ஆடும் காட்சிகள், சப்பாணி கொட்டல், நாட்டு வளம், தலைவியின் அழகும் அகச் செய்திகளும் ஆகியன தற்குறிப்பேற்ற அணி அமையப் புனையப்பெற்றுள்ளன.

### 5.1.2.3.2.1 இறைவன் இறைவி தோற்றம்

தற்குறிப்பேற்றவணி அமைய இறைவன்இறைவி தோற்றப் புனைவு சிறப்பாகப் பேசப்படுகின்றது.

'இறைவன் யானை உரியை ஆடையாகப் போர்த்தியுள்ளான். இதற்குக் காரணம் தேவாரமாகிய அமுதமழை தரும் குளிருக்கும், நிலவும் கங்கையும் தரும் குளிருக்கும் ஆற்றுமையே யாகும்,[126] எனப்பிள்ளைத்தமிழில் அமைத்தவர், 'கூதிர்ப்பருவத்து வாடைக்கு அஞ்சியே யானை உரியை இறைவன் போர்த்தியுள்ளான்[127] எனத் தலைவி கூறுவதாகக் கோவை நூலில் அமைத்துள்ளார். தாம்பாட வந்த இலக்கியப் பொருண்மைக்கேற்பக் கற்பனையை மாற்றிக் கொள்ளும் ஆசிரியரின் திறம் நோக்கத்தக்கது.

மாதொரு பாகனாய் இறைவன் விளங்குவதன் காரணம், "புகலிப் பிரான் பிரிவஞ்சியன்றோ வல்லார் முலைநிலை மாதொடும் ஒற்றித்து வாழ்கின்றதே"[128] என விளக்கப்படுகின்றது.

அம்பிகை தன் கைகளில் கரும்பும், மலர்களும் ஏந்தி அளிக்கும் காட்சியும் அழகிய தற்குறிப்பேற்றமாக்கப்படுகின்றது. 'இறைவன் தாமரை மலர்மீது அமர்ந்து யோக நெறியில் ஆழ்ந்து இருந்தான் அதனால் உலக உயிர்கள் போகம் இன்றி வாடின. அதுகண்ட வானவர்கள் மன்மதனைத் தூண்டினர். அம்பு எய்த மன்மதனைத் தன் அழல்விழியால் நீறாக்கிய இறைவன், பின் அருள் கொண்டு அம்மையைப் புணர்ந்து உலக உயிர்கட்கு இன்பம் நல்கினான். ஒரு வேளை மீண்டும் அவன் யோகத்தில் ஆழ்ந்து விட்டால் மன்மதன் அம்பெய்யத் தயங்குவான்; நாமே அச்செயல் செய்து மையல் செய்வோம் என எண்ணினள் போலப் பூங்கணை, கருப்புவில் தாங்கிய கையம்பிகை'[129] என அம்பிகை ஏந்திய கரும்புக்கும், மலர்களுக்கும் காரணம் கற்பிக்கப்படுகின்றது.

## 5. 1. 2. 3. 2. 2 புராணச் செய்திகள்

பாற்கடலில் பள்ளிகொண்டவன் திருமால் என்பது புராண மரபு. இதன் காரணத்தைத் தன் கற்பனைத் திறத்தால் அழகிய அணியாக்குகிறார் ஆசிரியர். 'ஆய்ப்பாடியில் பால், தயிர், நெய் கவர்ந்துண்டு, மத்தினால் மொத்துண்ட தன் மகிழ்நன் வருந்தாமல் அவற்றைப் பெறவும், களைப்புத் தீரக்கண் வளரவும், மனைவழிச் சார்ந்து வாழ்ந்தான் என்னும் பழிச்சொல் பெறவும் அவனுக்குப் பாற் கடலைக் கொடுத்து விட்டுத் தான் அவன் மார்பில் உறைந்த திருமகள்'[130] எனத் திருமகளைப் பாடுமிடத்துக் கூறுகிறார்.

'உலகுண்ட மாயவன் தன் தமையனாதலின் அவன் விடை

இடப்பாகத்தில் இறைவி அமர்ந்த செய்தி தற்குறிப்பேற்றமாகக் கூறப்படுகின்றது.

## 5. 1 .2. 3. 2. 3 அம்மானைக் காட்சிகள்

அம்பிகை பற்றிய பிள்ளைத்தமிழ் நூல்களில் அவள் பலநிறக் காய்களைக் கொண்டாடும் அம்மானைக் காட்சிகள் பெரும் பாலானவை தற்குறிப்பேற்ற அணியில் அமைந்துள்ளன.

மங்களாம்பிகை முத்திட்டிழைத்த அம்மானை கொண்டாடுவது அழகிய கற்பனையாக அமைகின்றது. 'என் திருநுதல் பகையாகி, மாற்றவளொடுங் கூடி, உம்பர் பிரான் முடிமீதமர்ந்த தவற்றைக்கூட மன்னிக்கலாம்; ஆனால் என் தோழியராம் கலைமகள், திருமகள் தம் இருக்கைகளாகிய தாமரைகளைக் கூம்பச் செய்த செயலைப்பொறேன் என்று கூறி நிலவைப் பற்றிப் பிடித்து அதன் கலைகளைப் பிசைந்து பல உருண்டைகளாக்கி விண்ணோக்கி வீசியதைப் போல முத்திட்டி ழைத்த அம்மானை கொண்டு ஆடுக'[132] என நிலவைப் பிசைந்த உருண்டைகளாக முத்தம்மனைகளைக் காட்டுகிறார்.

'அம்மையின் கையிலுள்ள கிளியைத் தம்இனம் எனக்கருதி கற்பகமரக் கிளிகள் வந்தடைய' இக்கிளி செய்தவம் நீங்கள் செய்ய வில்லை எனக்கூறித் திருப்பி விண்ணுலகம் அனுப்புவள் போல மரகத அம்மானை கொண்டாடுக'[133] என மரகத அம்மானை கிளிகளோடு இணைத்துப் பேசப்படுதலும் தற்குறிப்பேற்றம் பொலிவு பெறும் இடமாகும்.

## 5. 1. 2. 3. 2. 4 சப்பாணி கொட்டல்

சேக்கிழார் சப்பாணி கொட்டுவதை' 'ஈன சமயத் தொடக் கெல்லாம் அழித்தனம் என்றும், திண்ணிய மலச்செருக்கெல்லாம் ஒழித்தனம் என்றும் தேவர் தம் உலகும் தண்ணி எழும் கருத்துத் தவிர்த்தனம் எனவும் கைதட்டிக் கூறுதல் போலச் சப்பாணி கொட்டுக[134] எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறுகிறார். சேக்கிழாரின் சமயப் பற்றுமிகுந்த உள்ள நிலைக்கேற்ப இவ்வணி இங்கு அமைக்கப்பட்டுள்ளது.

## 5. 1. 2. 3. 2. 5. நாட்டு வளம்

பிள்ளைத்தமிழ் நூல்களில் அவ்வத் தலவளம் பாடும் பாடல்கள் பல. அவ் வருணனைகளில் அழகிய தற்குறிப்பேற்றமும் காணப் படுகின்றது.

உறையூரின் நிலவளம் பாடவந்த ஆசிரியர், 'இளம் வாளை மீன்கள் தம் கழுத்தொடியப் பாயுமே என்றஞ்சிய கதலி, கமுகு,

வேழக் கரும்பு ஆகியன ஆராய்ந்து வானாடளிக்கும் இந்திரனின் கருணை பெறலாம் என்றெண்ணி மிக ஓங்கி வளர்ந்து, அவன் எழில் மண்டபத்திற்கு அழகு செய்யும் உறையூர்'[185] என்கிறார். இங்கு உறையூரில் ஓங்கி வளர்ந்த கதலி, கமுகு, கரும்பு ஆகியவற்றின் வளர்ச்சி தற்குறிப்பேற்றமாக அமைகின்றது.

திருப்பெருமண நல்லூர்க் கடல் வளம் கூறுமிடத்திலும் இவ்வணி அழகு பெறுகிறது. 'ஆதி நாயகனாம் இறைவனுக்கு வெவ்விடம் அளித்த தன் பிழை யகற்றி உய்தி பெறுவதற்காக, அளவில் பல் தரளமும், பவளமும், மணியும், பொன்னும் திரைக் கையேந்தித் தூவி வழிபாடு செய்யும் கடலுடை மணவை'[186] என்கிறார். இங்கு இறைவன் நஞ்சுண்ட புராணச் செய்தி கடல் வளத்தோடு இணைக்கப் பெற்றுத் தற்குறிப்பேற்றமாக அமைகின்றது.

### 5. 1. 2. 3. 2. 6 தலையின் அழகும், அகச் செய்திகளும்

கயிலை மலையை வெள்ளிமால் வரை என்றும் கூறுவர். அதன் காரணம் தலைவியின் கொங்கை அழகுக்குத் தோற்று அது விளர்த்துப் போனமையே என்பதனை,

''.. நுங் கொங்கைக்குத் தோற்றதனை
யுள்ளி யுறுதுயர் பூண்டு விளர்த்த தொருகயிலை
வெள்ளி வரையென் றறியார் சொல் வார்''[137]

எனத் தலைவன் கூறுவதாக அமைக்கின்றார்.

ஆம்பல் மலர் இரவில் அலர்வதால் இரவலர் என்றும்பெயர் பெறும். இதனை, 'இவள் செவ்வாய் அழகு கண்டு தானும் இவ்வழகு பெறமாட்டோமா என்று இவளிடம் இரந்து நிற்பதால் தான் புலவர்கள் 'இரவலர்' என்று குறித்தனர்'[188] என்கிறார். இரந்து நிற்பவர் இரவலர் என்ற நிலையில் அழகிய சிலேடை அமைந்த தற்குறிப்பேற்றமாக அமைகின்றது.

தாமரை ஒற்றைத் தண்டில் நீரில் நிற்கின்ற காட்சியை,

''... பூங்கொடியார் தம்புனை முகத்தில்
வாணின் றிலகெழில் வேண்டியன்
றேசெவ் வனசமொரு
தாணின் றுடைந்துகண் ணீர்சிந்தி
நீரில் தவஞ்செய்வதே''[139]

எனத் தலைவியின் முக எழிலைத் தானும் பெற விரும்பி நீரில் ஒற்றைக் காலில் நின்று தவம் செய்வதாக அமைக்கின்றார்.

என்ற செய்தி, செவிலித் தாயின் கூற்றில் தற்குறிப்பேற்றமாகப் பயன்பட்டுள்ளது. 'தலைவியை உடன்போக்கினின்று தடை செய்யாது, கல்மனத்தோடு பார்த்திருந்த புறாவே! இதனால்தான் இறைவன் உனக்குக் கல்லையே உணவாக்கினான் போலும்'[140] எனக்கூறும் இடம் இவ்வணி சிறக்குமிடமாகும்.

இவ்வாறு மேற்கூறிய வகைகளுக்குள் அடங்கிக்காணப்படும் தற்குறிப்பேற்றவணி அமைந்த பாடல்கள் பல காணப்படுகின்றன.[141]

### 5. 1. 2. 4 உயர்வு நவிற்சியணி

5. 1. 2. 4. 1 ''கற்போரும் வியந்து மகிழும்படி பெரியதை மிகப் பெரியதாகவும், சிறியதை மிகச் சிறியதாகவும் திறமையுடன் கூறும் அழகினில் அமையும் இயல்பினது உயர்வு நவிற்சியணி''[142] என இவ் வணிக்கு விளக்கம் கூறுவர்.

இதனை 'அதிசய அணி' எனத் தண்டியலங்காரம், மாறனலங்காரம், இலக்கணவிளக்கம், முத்துவீரியம் ஆகிய நூல்களும், 'பெருக்கு' என வீரசோழியமும் உயர்வு நவிற்சி' எனச் சந்திராலோகம் குவலயானந்தம் ஆகிய இலக்கண நூல்களும் கூறுகின்றன.
5. 1. 2. 4. 2 வியப்புணர்ச்சியைத் தரும் இவ்வணி பிற்கால இலக்கியங்களில் மிகுதியும் இடம் பெற்றது. மீனாட்சிசுந்தரனார் பாடல்களிலும் உயர்வுநவிற்சி மிகுதியாகவே இடம் பெறுகிறது.

5. 1. 2. 4. 2. 1 பெரும்பாலும் இயற்கை வளம் பற்றிப் பேசும் இடங்களில் உயர்வு நவிற்சியணி இடம் பெறுகிறது. கமுக மரத்தின் உயர்வினைப் பாடவந்த புலவர் அதனைக் கற்பகத் தருவோடு இணைக்கிறார். கமுகில் கட்டிய ஊஞ்சலில் மகளிரை அமர்த்திக், கழல் வீரர்கள் ஊஞ்சலை ஆட்டக் கமுகின் கிளை அசைந்து, கற்பகத்தின் கிளைகளை அசைத்தது[143] என்னுமிடத்து' வானளாவ உயர்ந்த கமுகமரம் இந்திரனுலகக் கற்பகக் கொம்புகளையும் தொட்டு நின்றது என்பது உயர்வுநவிற்சியாகும்.

5. 1. 2. 4. 2. 2 'மைந்தரொடுமகளிர் விளையாடும் சோலையில் வண்டினம் உண்டு உமிழ்ந்த தேன், பெருக்கெடுத்து ஓடிப் பிளவுபட்ட நிலப்பகுதிகளுள் பாய்ந்து, பாதாளத்தை நிரப்பி, நிலத்தின் மீப் படர்ந்து, கன்னலும் கதலியும் வேரொடுபறித்து ஓடிவரும் பொழுது எதிர்ப்பட்ட நெற்போரினை நிலத்தின் பொறை குறையும் வண்ணம் அடித்துச் சென்று கடலில் சேர்க்கும் வளம் நிறை இடைக்கழி'[144] என இடைக்கழி நாட்டு வளம் பேசப்படுகிறது. வண்டுகள் உமிழ்ந்த

தேன் இவ்வாறெல்லாம் பெருகி ஓடிற்று என்பது மிகைப்படுத்திக் கூறும் உயர்வு நவிற்சியேயாகும்.

5. 1. 2. 4. 2. 3 இவ்வாறு பல இடங்களில் உயர்வு நவிற்சியணி அமைந்துள்ளது. மருத நிலங்களில் துள்ளும் வாளைமீன்களின் துள்ளல், மேதிகளின் மேய்ச்சல், பொன்னிநதி வரவு, மாடங்களின் உயர்வு, முருகன் வென்ற போர்க்களம் போன்றவை பாடப்படும் இடங்கள் அனைத்தும் உயர்வுநவிற்சியில் அமைக்கப்பட்டுள்ளன.

5.1.2.4.2.4 முழுதும் கற்பனையால் நிறைந்து அமைந்த ஒரு சிறப்பு நிலையே உயர்வுநவிற்சி எனத் தனியாக்கினர் ஆதலின் உயர்வு நவிற்சி என்ற அணி முழுவதும் கவிஞனின் கற்பனை வளம் நிறைந்த பகுதியாகும். 'கற்பனைப் புலவர்' எனப்படும் மீனாட்சிசுந்தரனாரின் கற்பனை வளம் தனிஇயலில் ஆராயப்படுகின்றது. அங்கு உயர்வு நவிற்சி முழுமையும் தொகுத்துத் தரப்படுகின்றது.

## 5. 1. 2. 5 வேற்றுமையணி

5. 1. 2. 5. 1 ஒப்புடைய இரு பொருள்களுக்கு இடையே உள்ள வேற்றுமைகளைச் சொல்வது வேற்றுமையணி எனப்பட்டது. இதனை,

> ''கூற்றினும் குறிப்பினு மொப்புடை யிருபொருள்
> வேற்றுமைப் படவரின் வேற்றுமை யதுவே'' [145]

என்பர் தண்டியாசிரியர்.

உவமை, உருவகம் என்ற நிலைகளைக் கடந்து, ஒப்புடைய பொருள்களின் இடையே உள்ள வேற்றுமைகளை எண்ணிப் பார்த்தல் என்பதும் கவிஞரின் ஆற்றலை விளக்கும் ஒருநிலையாகும். ஒப்புமை என்பது எப்பொழுதும் முழுமையாக அமைவதில்லை. ஒருபுடை ஒப்புமையே உவமைக்குக் காரணமாக அமைகிறது. ஏதாவது ஒரு நிலை தவிர ஏனைய நிலைகளில் அமையும் வேற்றுமைகளை எடுத்துக் கூறுவதும் பொருட்சிறப்பைப் புலப்படுத்தும் ஓர் அணிநலமே.

5. 1. 2. 5. 2 சேக்கிழாரின் பாதங்களைத் தாமரைக்கு உவமையாகவும், உருவகமாகவும் அமைக்கிறார் கவிஞர்.இவ்விரு நிலைக்கும் மேற்சென்று சேக்கிழாரின் பாதத்தாமரைக்கும், இயற்கைத் தாமரைக்கும் இடையே உள்ள வேறுபாடுகளை எண்ணிப் பார்க்கிறார்.

''நிலவுவிரி மதியும்ஒண் பனியும்உவ வாவெனினும்
நெஞ்சம் எப்பொழுதும் நெக்கு
நெக்குருகு வார்மதியும் அத்தகையர் கண்பனியும்
நேரே உவத்தல் செய்வ''[146]

எனச் சேக்கிழாரின் பாதத் தாமரைகளின் வேறுபாட்டைக் காட்டுகிறார். இயற்கைத் தாமரைகளின் இயல்பு மதியவனையும், பனியையும் வெறுத்தல் ஆகும். ஆனால் இவரது பாதத்தாமரைகளோ நெக்குநெக்கு உருகும் அடியவர்தம் அறிவாகிய மதியையும், அவர்தம் கண்பனி நீரையும் உவந்து ஏற்கின்றன என்கிறார்.

ஈண்டுப் பாதத்தாமரை என்ற உருவகநிலைக்கும் அப்பால் சென்று, சேக்கிழாரின் பாதச் சிறப்பை எண்ணிப் பாடும் கவிஞரின் சிந்தனை ஆற்றல் வேற்றுமையணி என்ற அலங்காரத்துள் அடங்குவதாக அமைகின்றது.

5. 1. 2. 5. 3 சீகாழிக்கோவையில் சீகாழி இறைவனின் புன்னகையும், தலைவியின் புன்னகையும் பேசப்படுகின்றன. இரண்டும் சொல்லளவில் ஒப்புமை உடையன. ஆனால் செயலளவில் மிகுதியும் வேறுபாடுடையன. 'சீகாழிநாதரின் புன்னகையோ முப்புரம் எரித்தது; ஆனால் இத்தலைவியின் புன்னகையோ என்குலம் முழுதும் உய்யச் செய்தது'[147] எனத் தலைவன் கூறுமிடத்து ஒரு புன்னகை அழிவையும், மற்றொரு புன்னகை ஆக்கத்தையும் தந்த தன்மையைக் காண்கிறோம்.

ஒப்புடைப் பொருள்களில் வேற்றுமை காணும் திறன் மேற்குறித்த இருபாடல்களில் மட்டுமே காணப்படுகின்றன.

## 5. 1. 2. 6 மயக்கவணி

5. 1. 2. 6. 1 ''ஒருபொருளை, அதனோடு ஒப்புமையுடைய வேறொன்றாகக் கொள்வது மயக்கவணியின் இலக்கணம் இதை வடநூலார் பிராந்தி மதாலங்காரம் என்பர்''[148] என்று இவ்வணிக்கு விளக்கம் கூறுவர்.

ஒன்றை வேறொன்றாக எண்ணி மயங்குதலே இவ்வணியாகும்.

5. 1. 2. 6. 2 ''இறைவியின் ஒளிமிகும் மூரலைக் கண்டு கடவுட் பெருமானின் உள்ளக் கமலம் கதிரவன் என்று எண்ணி மலர, அரமடந்தையர்தம் கரமுண்டகங்குவிய, சகோரப் பறவை மதியின் நிலவென்றெண்ணி ஓடிவர, அவள் கையிலமர்ந்த கிளி பவள வள்ளத்தில் வைத்த அமுது என்றெண்ணி அங்காப்ப, மீனார்

கடங்காட் கலைமகள் தன்மேனி கருமையானது என்றெண்ணி நாணத் திருமகள் மகிழப் புன்னகை பூப்பவள்'[149] என்கிறார். இங்கு இறைவியின் ஒளிமிக்க புன்னகை யார்யாருக்கு எத்தகு மயக்கத்தைக் கொடுத்தது எனக் காட்டுகிறார்.

5. 1. 2. 6. 3. 'நீரினின்றும் வெளியேறி மலர்க்கொடியில் ஏறிய சங்குப் பூச்சி அங்கிருந்து முத்துக்களை உதிர்க்கலாயிற்று. அம் முத்துக்களைக் கண்ட உழவர்களுள் சிலர் வியந்து கமுகு அரும்பு உதிர்க்கின்றது போலும் என்றனர்; சிலர் வானத்து விண்மீன்கள் உதிர்கின்றன என்றனர். இவ்வாறு மாறாவளம் பெருகியது திருவிடைக்கழி'[150] என்கிறார். இங்கு முத்துக்களைக் கமுக அரும்பென்றும், விண்மீன் என்றும் மாறிஎண்ணும் உழவர்தம் எண்ணம், மயக்க அணியின் பாற்படும்.

5. 1. 2. 6. 4 இவ்வாறு அமையும் மயக்க அணிகள் இவர் பாடல்களில் ஆங்காங்கே அமைந்து, வருணனைக்கும், இயற்கை வளத்தைப் புலப்படுத்துதற்கும் பயன்படுகின்றன.[151]

### 5. 1. 2. 7 சிலேடையணி

5. 1. 2. 7. 1 ''ஒருவகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றே
தெரிதர வருவது சிலேடை யாகும்''[152]

என்று சிலேடையணிக்கு விளக்கம் கூறுவர். ஒரு சொற்றொடர் பல பொருள் தருவது சிலேடை யணியாகும். இதனைச் செம்மொழிச் சிலேடை என்றும், பிரிமொழிச் சிலேடை என்றும் பகுப்பர். ஒரு சொல்லே பலபொருள் தருவது செம்மொழிச் சிலேடை என்றும் ஒரு சொல்லைப் பலநிலைகளில் பிரித்து வெவ்வேறு பொருள் காணல் பிரிமொழிச் சிலேடை என்றும் கூறப்படுகிறது.

5. 1. 2. 7. 2 இச்சிலேடை அணி கவிஞர்களின் சொல்லாற்றலையும், நிகண்டு, அகராதி போன்றவற்றில் அவர்கள் பெற்றிருந்த அறிவையும் புலப்படுத்துவதாகும். இடைக் காலத்தில் எழுந்த சிற்றிலக்கியங்களும், தனிப் பாடல்களும் இவ்வணியைப் பெரிதும் போற்றின.

5. 1. 2. 7. 2. 1 பிள்ளைத்தமிழ் நூல்கள் மிக எழுதிய மீனாட்சி சுந்தரனார் சொல்லாற்றல் மிக்க பெரும்புலவர். பிள்ளைத்தமிழில் அம்புலிப் பருவம் பாடும்பொழுது பயன்படுத்தும் உத்திகளுள் ஒன்று 'சாமம்'. இதனை அமைத்துப் பாடும்பொழுது சிலேடையணி மிக இயல்பாக அமைகிறது. பாட்டுடைத் தலைவன் அல்லது தலைவிக்கும் அம்புலிக்கும் உள்ள ஒப்புமைக் குணங்கள் பெரும்பாலும் சிலேடையிலேயே கூறப்படுகின்றன.

''புன்னைவீ யார்தரு நெடுங் கோட்டு மோதிப்
பொருங்கட லுதித்தலானும்
புன்சிறு விதிக்குறவு பூண்டுபின்
போதப் பகைத்தலானும்
பின்னைவாழ் செந்தா மரைக்கோயில்
சாயவொளி பெறுமுகங் காட்டலானும்
பெட்பினிம மாதிரந் தவழவர
லானும்வெம் பேய்க்கூத் துவந்தபெருமான்
மின்னையேய் செஞ்சடை முடிப்பொங்கு
கங்கைமகள் வெருவர வுழக்கலானும்
வேம்பர்கள் குலம்புகழ வருதலா
லுங்குலவி விளையாட நின்னையெங்கள்
அன்னைவா வென்றனள்...''[158]

இப்பாடலில் அகிலாண்ட நாயகிக்கும், அம்புலிக்கும் இயைந்த ஒப்புமைகள் சிலேடையாகக் கூறப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| பெருங்கடல் உதித்தல் | — | அம்மை கடலில் வலைஞர் மகளாய்ப் பிறந்தாள்; அம்புலியும் கடலில் தோன்றியது. |
| சிறுவிதிக்கு உறவாகிப் பகையானவர்கள் | — | சிறுவிதி என்பது தக்கனைக் குறிக்கும். அம்மையும் தக்கன் மகளாய்ப் பிறந்து பின் பகையானவள்; அம்புலி மருமகனாகி 27 நட்சத்திரங்களை மணந்து, பின் தக்கனால் சாபமடைந்து பகையானவன். |
| செந்தாமரைக் கோயில் சாய முகம் காட்டல் | — | தாமரையை ஒளிமங்கச் செய்யும் அழகிய முகம் அம்பிகைக்குரியது; தாமரை கூம்பத் தோன்றுபவன் அம்புலி. |
| இம் மாதிரந் தவழவரல் | — | அம்மை இமய மலையில் தவழ்ந்து வளர்ந்தவள்; அம்புலி மேருமலையை வலம் வருபவன். |
| கங்கையை உழக்கல் | — | இருவருமே கங்கையை வருத்துபவர்கள் |
| வேம்பர்குலம் புகழவருதல் | — | பாண்டியர் குலம் விளங்கத் தடாதகைப் பிராட்டியாய் வந்தவள்; பாண்டியர் குல முதல்வன் அம்புலி. |

மேற்கூறிய ஒப்புமைகள் இருவருக்கும் உடைமை காரணமாகிச் 'சாமம்' என்ற உத்தி சிலேடையாக அமைகிறது. ஆசிரியரின் எல்லாப் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் அம்புலிப் பருவத்தில்

இச்சிலேடையணி மேற்கூறிய நிலையில் பயன்படுத்தப்பட்டுள்ளது. தவிர, மங்கள. வாரானை. 4; சேக்கிழார். தால். 2 ஆகிய பாடல்களிலும் இவ்வணி சிறப்புப் பெறுகிறது.

இவை தவிர, அகத்திணை நூல்களாகிய கோவை நூல்களிலும் பல இடங்களில் இவ்வணி அமைந்துள்ளது.[164]

5.1.2.7.2.2 தினைப் புனங் காக்கும் தலைவியிடம் சென்று 'உர்காவல் மிக அழகிது' என நகையாடும் தலைவனுக்கு மறுமொழி கொடுக்கும் தோழி. ''நீரே வளையும் பொழுது எங்ஙன் வந்து நெருங்கும் வன்னி'' (சீகாழி. 116)என்கிறாள். இங்குத் தலைவனை நோக்கி, 'நீ வந்து வளைத்துக் கொள்ளும் பொழுது கிளி எவ்வாறு வரும்?' என்பது ஒரு பொருள். நீர் இருக்க நெருப்பு எங்ஙனம் வரும்? என்பது மறுபொருள். 'நீர்' என்பது முன்னிலை ஒருமையாகவும், **தண்ணீர்** எனவும் பொருள்படும். வன்னி—கிளி, நெருப்பு எனப் பொருள் தரும்.

5.1.2.7.2.3 குளத்தூர்கோவையில் 'நேராதிறைவி நெஞ்சொடு கிளத்தல்' என்ற துறையிலமைந்த பாடல் பிரிமொழிச் சிலேடை பெற்று விளங்குகின்றது.

''கண்ணனை யார்புகழ் வாரெனச் சீர்த்தவன் காவின்மலர்க்
கண்ணனை யார்குளத் தூர்வேத நாயகக் காளைவரைக்
கண்ணனை யார்கரி தேர்ந்தரி மேவுங் கடுவழிநங்
கண்ணனை யார்வரு வார்மன மேயென் கருதுவதே,'
(குளத்தூர். 173)

என்ற பாடலில் கண்ணனை எனவும், மலர்க்கண் நனையார் குளத்தூர் எனவும், வரைக்கண் நனையார் கரி எனவும், கண்ணனை யார் வருவார் எனவும் பிரித்துக் கண்ணனைவிடக் கருமை நிறம் பெற்ற மலர்கள் எனவும், மலர்களில் மது நிறைந்த வளம்சால் குளத்தூர் எனவும், மதம் பொருந்திய யானை எனவும், கண்ணினைப் போன்ற தலைவன் எனவும் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

இவ்வாறு அக்காலப் பண்டிதர்கள் தம் புலமையைக் காட்டுதற்குப் பயன்படுத்திய அணியே சிலேடையணி. பலபொருள் ஒரு சொற்களையும், ஒரு பொருட் பன்மொழிகளையும் அறிந்திருந்த மகாவித்துவானின் மொழியறிவைப் புலப்படுத்துவனவாய் இப் பாடல்கள் அமைந்துள்ளன. இவ்வாறு இவரும், இவர் காலத்துப் புலவர்களும் சொற்சிலம்பங்கள் ஆடுதற்குச் சிலேடையணி பயன் பட்டது போலும்.

## 5. 1. 2. 8 விரோத அணி

5. 1. 2. 8. 1 யாப்பிலக்கணத்தில் முரண்தொடை என்று கூறப்படும் தொடை இலக்கணம், அணியிலக்கணத்தில் விரோத அணி எனப்படுகிறது. இதனை,

> ''மாறுபடு சொற்பொருண் மாறுபாட் டியற்கை
> விளைவுதர வுரைப்பது விரோத மாகும்''[155]

என்பர் தண்டியாசிரியர். எனவே, தமக்குள் சொல்லாலோ, பொருளாலோ மாறுபட்ட சொற்களைக் கொண்டு அமைப்பது விரோதஅணி எனப்படும். சொல்லளவில் மாறுபட்டதைச் சொல் விரோதம் எனவும், பொருளளவில் மாறுபட்டதைப் பொருள் விரோதம் என்றும் கூறுகின்றனர்.

5. 1. 2. 8. 2 மீனாட்சிசுந்தரனார் பாடல்களில் விரோத அணி பல பாடல்களில் அமைந்துள்ளது.[156]

'கருங்கட் செவ்வாய் வெண்பற் தோழியர்' என்பது போல வண்ண வேறுபாடுகளைக் குறிக்கும் இடங்கள் பழங்கால மரபு நிலையைப் பின்பற்றி அமைந்தவை.

சொல்லாலும் பொருளாலும் வேறுபட்டு இன்பம் பயப்பனவாய் அமைவனவும் உள்ளன.

'வேம்பர் குடிக்கோர் செங்கரும்பே' (அகிலாண்ட. முத்தம். 2) என இறைவியை அழைக்குமிடத்து வேம்பு, கரும்பு என்ற சுவை முரண்பட்ட இருசொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. வேம்பர் என்பது பாண்டியரைக் குறித்துக், கரும்பு ஏன்பது அக்குலத்தில் தோன்றிய கரும்பு போன்ற இனிமை உடையவள் என இறைவியைக் குறிக்கிறது. பாண்டியர் குலத்திற்கு அம்மை எத்தகையவள் என்பதை முரண் தொடையால் புலப்படுத்தியமை இன்பம் தருவதாகும்.

> ''பாற்கடலின் மீமிசைக் கார்க்கடலெனக்
> கண்வளர் பைந்துழாய்ப் படலைமார்பன்''
> (பெருந்திரு. பாயிரம். 5)

எனுமிடத்துப் பாற்கடல், கார்க்கடல் என நிறவேறுபாட்டைக் கூறுவனபோல அமைந்தாலும், திருமால் பாற்கடல்மீது பள்ளி கொள்பவன்; கருமை நிறம் உடையவன் என்ற புராண அடிப்படையில் அமைந்த செய்திகளை உணர்த்துகின்றன. விரோத அணியிலும் உவமைநலம் சிறக்கக் காண்கிறோம்,

முருகர். இல் சிற்றில் சிதைக்கும் முருகனிடம் சிறுமியர் பேசுவதாக அமைகிறது ஒருபாடல். 'இறைவன்தொழில் அழிக்கும் தொழில்; அதனால் தந்தை தொழிலை நான் செய்கிறேன் என்றுநீ கூறின், அவர் அழிக்கும் செயலானது உலக உயிர்களை 'இளைப்பாற்றும்' தொழிலாகும்; ஆனால் உன் செயலோ 'இளைப்பேற்றும்' செயலாக உள்ளதே' (சிற்றில். 4) என வினவுகின்றனர். 'இளைப்பாற்றுதல்', 'இளைப்பேற்றுதல்' என்ற சொற்கள் பொருள் முரண்பாட்டினை விளக்குகின்றன. அத்தோடு அமையாது, இறைவனின் அழிக்கும் தொழில் எத்தகு நோக்கம் உடையது என்பதையும் விளக்குவதாக அமைகின்றது.

சீகாழிக்கோவையில், தலைவியை அழைக்கும் தலைவன் 'மெல்லெழுத்துப்படர் வல்லிள முலையாய்' (சீகாழி. 248) என்கின்றான்.மகளிர் மார்பில் தொய்யில் எழுதுதல் என்ற பழக்கத்தையே இங்கு மெல்லெழுத்து என்கிறார். மிக மென்மையான உணர்வுகளோடும், மென்மையான முறையிலும் எழுதப்படுவது தொய்யில். இம் மரபினைக் கூற விழைந்த ஆசிரியர்க்கு அழகிய முறையில் விரோத அணி பயன்பட்டுள்ளது.

5.1.2.8.3 மேற்கூறிய எடுத்துக் காட்டுகளைப் பார்க்குமிடத்து, விரோத அணி என்பது முரண்பட்ட சொற்களால் இன்பம் தருதல் என்பதோடு அமையாது, அதற்கும் மேற்சென்று ஆசிரியர் கூற விரும்பும் செய்திகளை நன்முறையில் புலப்படுத்துவதற்கும் பயன்படுகிறது எனலாம். இவருடைய கவிதைகளில் புராணச் செய்திகளையும், அகச் செய்திகளையும் விரோத அணி விளக்குகின்றது.

## 5.1.2.9 மடக்கணி

5.1.2.9.1 சொற்களை ஒரேவிதமாக மடக்கிப் பொருள்வேறுபடப் பாடின் அது மடக்கணி எனப்படுகிறது. இவ்வாறு பாடுவது கடினம். இவருடைய அந்தாதி நூல்களில் இவ்வணி மிகுதியாக உள்ளது. இங்கு ஆய்வுக்குட்பட்ட பாடல் பகுதிகளில் மிகச் சில இடங்களில் இம்மடக்கணி காணப்படுகிறது. குளத்தூர்க் கோவையில் ஒரு பாடலிலும் (146), சீகாழிக்கோவையில் மூன்று பாடல்களிலும் (267, 300, 314) இவ்வணி அமைந்துள்ளது.

"விரைமே விரவல ரேயன்னை மாரும் விரவலரே
கரைசூழ் கருங்கழி யேயூ ரலர்ப கருங்கழியே
திரைசால் சிறைக்குரு கேயெளி யேன்வெஞ் சிறைக்குருகே
வரைதீர்வெள் வார்க்குரை யேசண்பை யாரையுள் வார்க்குரையே"

(சீகாழி. 300)

என்னும் பாடலில் முதல் தொடரில் இரவலர் என்ற சொல்லை இரு விதமாகப் பிரித்து விரைமேவு இரவு + அலரே எனவும், அன்னை மாரும், விரவும் + அலர் எனவும் கொள்ளுதல் வேண்டும். இரண்டாவது தொடரில் கரைசூழ்ந்த கருங்கழிகள் எனவும், ஊர்கழி (மிகுதியாக) அலர் பகரும் எனவும் கொள்ளல் வேண்டும். மூன்றுவது தொடருக்குக் குருகை முன்னிலைப் படுத்தி 'என் நிலைக்கு உருகு' என வேண்டுவதாகவும், இறுதி வரிக்கு 'வெள்ளிய நீர்முழக்கமே! சண்பை இறைவனை நினைவார்க்கு என்நிலை உரையே, என்றும் பொருள் கொள்ளல் வேண்டும்.

5. 1. 2. 9. 2 இவ்வாறு சொற்களை மாற்றிமாற்றிப் பிரித்துப் பொருள் காண்டல் என்பது அப்புலவர்தம் பண்டிதத் தன்மையைக் காட்டுவனவே ஒழியக் கற்போர்க்கு இன்பம் பயப்பன என்றுகூற இயலாது. கவிதையைக் கடின நடை உடையது என்ற குறைப் பாட்டிற்கு இவ்வணி உட்படுத்துகிறது.

## 5. 1. 2, 10 பிற அணிகள்

மேற்கூறியவை தவிர, மீனாட்சிசுந்தரனார் பாடல்களில் பின் வரு நிலையணி வஞ்சப்புகழ்ச்சியணி, வீறுகோள் அணி என்பன ஆங்காங்கு மிக அருகிப் பயன்படுத்தப்பட்டுள்ளன.[157]

## 5. 1. 3 முடிவுகள்

இயற்கைப் பொருட்கள், சமயக் கருத்துக்கள் இலக்கணக் கருத்துக்கள் ஆகியவற்றை உவமைகளாகக் கையாண்டுள்ளார்.

இயற்கைப் பொருட்கள், அகப்பொருட் தலைவன், தலைவி, பாட்டுடைத் தலைவன், தலைவி ஆகியோர்தம் தோற்றப் பொலிவிற்கும் உறுப்புக்களுக்கும், பிறசிறப்புக்களுக்கும் உவமையாகின்றன.

சமய உவமைகள் ஆசிரியரின் சமயப் பற்றையும், அடியவர் வரலாறு, புராணச் செய்திகள் ஆகியவற்றையும், இறைவனின் தோற்றம், இறைத்தத்துவம் ஆகியவற்றையும் விளக்கப் பயன்படுகின்றன.

இலக்கண உவமைகள் ஆசிரியரின் இலக்கணநூல் அறிவைப் புலப்படுத்துவனவாக உள்ளன.

உள்ளுறை உவமைகள் தலைவன், தலைவியர் தம் உள்ள நிலைகளையும், புணர்ச்சி உண்மையையும், தலைவனின் பரத்தமை

உருவகங்கள் உறுப்புக்களின் வருணனைகட்கும் குணநலன் களின் வருணனைகட்கும், சமயக் கருத்து விளக்கங்கட்கும் பயன் பட்டுள்ளன.

இறைவன் இறைவி தோற்றமும், புராணச் செய்திகளும் தற்குறிப் பேற்றவணியில் அமைந்துள்ளன. பெரும்பாலும் அம்மா னைப் பருவப் பாடல்களில் தற்குறிப்பேற்றவணி மிகுதியாக உள்ளது. இயற்கை வளங்களும் தற்குறிப்பேற்றமாகப் பேசப்படுகின்றன.

இயற்கை வருணனைகள் உயர்வுநவிற்சியாகப் புனையப் படுகின்றன.

வேற்றுமையணி இருபாடல்களில் மட்டுமே காணப்படுகின்றது.

மயக்கவணி, சிலேடையணி, விரோத அணி ஆகியவை ஆசிரியரின் சொல்லாற்றலைப் புலப்படுத்துவன; விரோத அணி பொருட் புலப்பாட்டிற்கும் பயன்படுகின்றது.

மடக்கணி பாடலின் நடையைக் கடுமைப்படுத்துகிறது.

## குறிப்புக்கள்

1. Encyclopaedia Britanica, VIII, p. 548
2. Encyclopaedia Americana, Volume 23, p. 457.
3. ந. சுப்புரெட்டியார், கவிதையனுபவம், ப. 209.
4. பேராசிரியர், தொல். பொருள்., ப. 58.
5. மு. வரதராசன், நெடுந்தொகைச் செல்வம், ப. 136.
6. Encyclopaedia Americana, Volume 25, p. 22.
7. ரெ. சிங்காரவேலன், சங்க இலக்கிய உவமைகள், பிஎச். டி. ஆய்வேடு, ப.
8. தண்டி. பொருள். 5.
9. ந. சுப்புரெட்டியார், மு. நூல், ப. 222.
10. பேராசிரியர், தொல். பொருள். உவம., 278.
11. சீகாழி. 9.
12. மேலது., 88.
13. மேலது., 123.
14. மேலது., 246.
15. குளத்தூர். 205.
16. அகிலாண்ட. வாராணை. 1.
17. சேக்கிழார். சிற்றில் 4.

18. பெருந்திரு. செங். 5.
19. சீகாழி. 463.
20. மேலது., 355.
21. மேலது., 249.
22. திருவெண். நீராடல். 1.
23. மேலது., 7.
24. சீகாழி. 125.
25. மேலது., 29.
26. காந்தி. பொன். 8.
27. அகிலாண்ட. செங். 8.
28. அகிலாண்ட. அம்மானை. 1; பெருந்திரு. அம்மானை. 3.
29. காந்தி. சப். 8.
30. திருவெண். காப்பு. 9.
31. காந்தி. அம்மானை. 4
32. மேலது., 2.
33. மங்கள. அம்மானை. 7.
34. வியாசை. 41.
35. வீரமாமுனிவர், சதுரகராதி, ப. 272.
36. அம்பல. காப்பு. 5.
37. மங்கள. அம்மானை. 6.
38. சேக்கிழார். சப். 3.
39. பெருந்திரு. பொன். 1.
40. காந்தி. பாயிரம் 3.
41. சீகாழி. 531.
42. குளத்தூர். 368.
43. மேலது., 153.
44. மேலது., 286.
45. மேலது., 80.
46. சீகாழி. 291.
47. குறுந்தொகை, 18.
48. வியாசை. 46.
49. மேலது., 15.
50. அம்பல. தால். 1.
51. சீகாழி. 437.
52. மேலது., 238, 269, 289.
53. சேக்கிழார். சிறுபறை. 1.
54. அம்பல. சிறுபறை. 10.
55. முருகர். சிறுபறை, 4; சேக்கிழார். சிறுபறை. 5, 6.
56. பெருந்திரு. அம்மானை. 9.
57. குளத்தூர். 113; சீகாழி 149.

58. பெருந்திரு. தால். 3.
59. சீகாழி. 16.
60. மேலது., 194.
61. மேலது., 17, 18, 48, 63, 115, 153, 155, 320, 333, 367, 377, 502, 508, 514.
62. காந்தி. பாயிரம். 5.
63. மேலது., 3.
64. சேக்கிழார். தால். 3,
65. அம்பல. காப்பு. 4.
66. சேக்கிழார். தால். 4.
67. (அ) காஞ்சிப் புராணம், முதற்காண்டம், மணிகண்டீச்சரப் படலம், 19.
(ஆ) திருநாவுக்கரசர், நாலாந்திருமுறை, 134.
68. காந்தி. வாரானை. 8.
69. காந்தி. பாயிரம். 8, வாரானை. 7; சேக்கிழார். சப். 7.
70. காந்தி. பொன். 4; மங்கள. நீராடல். 4; முருகர் சிறுபறை. 5.
71. உ. வே. சா., ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் முதற்பாகம், ப. 35.
72. மேலது., இரண்டாம் பாகம், ப. 217.
73. குளத்தூர். 164.
74. குளத்தூர். 52, 89; சீகாழி. 118,
75. காந்தி. நீராடல். 8.
76. பெருந்திரு. அம்மானை. 9.
77. திருவெண், நீராடல். 5.
78. சீகாழி. 148.
79. மேலது, 22.
80. பெருந்திரு. பொன். 5,
81. காந்தி. செங், 5; பெருந்திரு. சப். 2.
82. பெருந்திரு, அம்மானை, 4.
83. சீகாழி. 441.
84. அம்பல. தால். 2.
85. அம்பல. தால். 7; சீகாழி. 221.
86. சீகாழி. 225.
87. மேலது, 151.
88. குளத்தூர். 91.
89. அம்பல: பாயிரம். 1.
90. அம்பல. காப்பு. 9.
91. அம்பல. காப்பு. 2.
92. முருகர். சிறுதேர். 7.
93. சீகாழி. 477.

94. குளத்தூர். 233.
95. அம்பல. சப். 6.
96. சீகாழி. 529.
97. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப. 149.
98. ச. வே. சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப.292
99. குளத்தூர். 177.
100. மேலது., 141.
101. சீகாழி. 460.
102. மேலது., 461.
103. மேலது., 458.
104. சீகாழி. 242
105. தண்டி. பொருள். 10.
106. மு. வரதராசன், இலக்கியத்திறன், ப. 229.
107. மு. திருவெண். காப்பு. 1.
108. சேக்கிழார். வாரானை. 8.
109. முருகர். சிறுதேர்.. 2
110. மங்கள. செங். 3
111. மங்கள. செங். 6.
112. காந்தி. பாயிரம். 1; குளத்தூர். 17, 241; வியாசை. 43; சீகாழி. 524.
113. அம்பல. செங். 9
114. அம்பல. சிறுபறை. 2.
115. சீகாழி. 141; குளத்தூர். 43; வியாசை 43.
116. அம்பல தால். 9.
117. அம்பல சிறுபறை 6.
118. காந்தி. காப்பு. 9.
119. அகிலாண்ட. தால், 4.
120. அகிலாண்ட. காப்பு 2.
121. சீகாழி. 284.
122. மேலது., 345
123. குளத்தூர். 399.
124. அம்பல, சிறுதேர். 6.
125. தண்டி. பொருள். 30.
126. காந்தி. பாயிரம். 2.
127. சீகாழி. 511.
128. மேலது., 28.
129. காந்தி. பொன். 5.
130. பெருந்திரு. காப்பு. 7.
131. பெருந்திரு. செங். 3.
132. மங்கள. அம்மானை. 1.

133. பெருந்திரு. அம்மானை. 6.
134. சேக்கிழார். சப். 6.
135. காந்தி. பாயிரம். 10.
136. திருவெண். பாயிரம். 2.
137. குளத்தூர். 20.
138. மேலது., 62.
139. வியாசை. 62.
140. சீகாழி. 416.
141. அகிலாண்ட. வாரானை. 1, அம்மானை. 4; பெருந்திரு தால். 2, முத்தம். 4, அம்மானை. 2; காந்தி. பாயிரம். 9, 11, காப்பு. 5, வாரானை. 4, அம்மானை. 1; திருவெண். பாயிரம். 1, செங். 7, நீராடல். 4; அம்பல. காப்பு. 2, தால். 5; மங்கள. காப்பு. 1, அம்மானை 2, 3, 4; சேக்கிழார். காப்பு. 10, அம்புலி. 3; குளத்தூர். 184, 305, 321; வியாசை. 10, 20; சீகாழி. 28, 175, 184, 305, 386, 454.
142. கே. இராஜகோபாலாசாரியார், இலக்கண விளக்கம். 6. ப. 93.
143. அகிலாண்ட. நீராடல். 10.
144. முருகர். சிறுதேர். 9.
145. தண்டி. பொருள். 23.
146. சேக்கிழார். வாரனை. 2.
147. சீகாழி. 19.
148. கே. இராஜகோபாலாசாரியார், மு. நூல், ப. 196.
149. காந்தி. முத்தம். 3.
150. முருகர். சிறுதேர். 7.
151. காந்தி. தால். 4, சப். 6; மங்கள. தால். 1; சேக்கிழார். செங். 5, தால். 1.
152. தண்டி. பொருள். 50.
153. அகிலாண்ட. அம்புலி. 1.
154. குளத்தூர். 62, 128, 173, 225, 243, 413; வியாசை. 8, 92; சீகாழி. 116, 205, 268, 494.
155. தண்டி. பொருள். 56.
156. அகிலாண்ட, பாயிரம். 10, காப்பு. 1, தால். 9, முத்தம். 2, பொன். 6; பெருந்திரு. பாயிரம். 5; திருவெண். நீராடல். 7; குளத்தூர். 213; வியாசை. 67; சீகாழி, 51, 154, 248, 281, 482.
157. பின்வருநிலையணி ; அகிலாண்ட. சப். 9; சேக்கிழார். தால். 5; குளத்தூர். 109, 246; சீகாழி. 29, 443.
வஞ்சப்புகழ்ச்சியணி. அம்பல. சிறுதேர். 2; சீகாழி. 115, 251; வீறுகோளணி. சேக்கிழார், சிற்றில். 1.

) முன்னுரை

இலக்கியத்தின் இன்றியமையாக் கூறுகளுள் கற்பனையும் கலைஞனின் கண்கள் தாம் காணும் எல்லாப் பொருளிலும் றனக் காண்கின்றன. இவ்வழகுணர்ச்சியின் வெளிப்பாடு கற்பனைப் படைப்புக்களாகின்றன. மீனாட்சிசுந்தரனாரின் ன வெளியீட்டுத் திறனை ஆய்வதே இவ்வியலின் நோக்கம்.

1 கற்பனை

1. 1 மனித மனத்தின் எண்ண அலைகளே கற்பனை எனப் து. ''மனித உள்ளம் நினைக்கத் தெரிந்து கொண்ட போதே னயும் உதித்திருக்க வேண்டும்''.[1] உடல் செயலற்று ஓய்ந்து ின்ற பொழுதும் மனம் எதையாவது எண்ணிக் கொண்டிருப் ியல்பு. சராசரி மனிதன் இவ்வெண்ண அலைகளை மடிய பிடுகின்றான்; ஆனால் கலைஞனோ அதற்கு ஒரு வடிவம் க்கின்றான்.

1. 2 ''கற்பனை, கலைஞனுக்குக் கற்பகத்தரு. கேட்டதை ம், நினைந்ததை எல்லாம் உடனடியாக அளிக்கும் வன்மையும் மயுமுடைய கற்பகத்தரு. கற்பனை என்பது மனத்தின் ப்பு. அதற்குக் கட்டுப்பாடோ, வரையறையோ, கால, இட ) எல்லைகளோ இல்லை,''[2] எனக் கற்பனைக்கு விளக்கம் றார் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்.

1. 3 கற்பனைக்கு இலக்கண எல்லைகள் கிடையாது. மனித தின் ஆழமும், அகலமும் எவ்வாறு அளப்பரிதோ, அது றதே அங்குத் தோன்றும் கற்பனையும். மனிதன் தான் ) நுகர்ந்தவற்றையும், காணாது செவிவழியாகக் கேட்ட றயும், காண விரும்புவனவற்றையும் மனக்கண்ணால் ும் மீண்டும் கற்பித்துக் காண்கின்றான். இது மனித மனத்தின் ற்ற சக்தியாகும். இக்கற்பனை ஆற்றலுக்குக் கலைஞன் ம் தந்து அதனை நிலைபேறுடையதாகச் செய்கிறான்.

## 5. 2. 2 கவிதையில் கற்பனை

5. 2. 2. 1 எல்லாக் கலைகளுக்கும் அடிப்படையானது கற்பனை, கவிதைக் கலைக்கு அது உயிரூட்டி, அழகு பெறச் செய்கிறது. தன் கற்பனை உணர்விற்கும், அழகுணர்ச்சிக்கும் கவிஞன் தரும் கலை வடிவமே கவிதை.

5. 2. 2. 2 கவிதைகளில் காணலாகும் உவமை, உருவகம் என்பன கவிஞனின் கற்பனை ஆற்றலின் விளைவுகளே. இக் கற்பனையின் விரிவே தற்குறிப்பேற்ற அணி, உயர்வு நவிற்சியணி எனப் பல அணிகளாக அமைகின்றன.

5. 2. 2. 3 தொடக்கக் காலத்தில் இயல்பு நவிற்சியாய் அமைந்த கற்பனை, காலம் செல்லச் செல்ல விரிவடைந்தது. கம்பன் பாடல்களில் உயர்வு நவிற்சியே விஞ்சி நிற்கக் காண்கிறோம். கற்போருக்கு வியப்புணர்ச்சியைத் தரும் இக்கற்பனை, பிற்காலச் சிற்றிலக்கிய ஆசிரியர்களை மிகுதியும் கவர்ந்தது.

## 5. 2. 3 கற்பனை வெளியீடு

கற்பனை ஆற்றலை இலக்கியப் புலவன் வெளிப்படுத்தும் பாங்கினைப் பல்வேறு நிலைகளில் காணலாம்.

5. 2. 3. 1 கவிஞன். தான் கண்ட பொருளை, அதன் இயல்புகள் மாறாமல் வருணித்தல் ; என்றோ கண்ட ஒரு காட்சியை மற்றொரு காட்சியோடு இணைத்துப் பேசல் ; மாந்தர்களைப் பற்றிய வருணனைகளாகக் கூறல் ; இயற்கைக் காட்சிகளைத் தான் அனுபவித்த நிலையில் கூறல்; கேட்டறிந்தவற்றைக் கண்டறிந்தவை போலக் கூறல்; நடக்கவியலாதனவற்றைக் கற்பனையில் கண்டு கூறல்; நடக்க வேண்டும் என்ற தன் விருப்பினை நடந்தது போலக் கூறல் எனப்பல நிலைகளில் தன் கற்பனை ஆற்றலை வெளிப்படுத்து கின்றான்.

5. 2. 3. 2 இவ்வெளிப்பாட்டிற்கு அடிப்படைக் காரணம் மனித மனத்தில் புதைந்து கிடக்கும் அழகுணர்ச்சியேயாகும். இயற்கை தரும் இன்பத்தை நுகரத் தெரிந்த மனித மனத்தின் வெளிப்பாடே அழகிய கற்பனைகளாகின்றன. இதனையே, ''முருகியல் இன்பத் தைப் பாராட்டுதலும், கலைப் படைப்புக்களை உருவாக்குதலும் கற்பனை ஆற்றலால் பெற்ற அனுபவத்தின் குறியீடாகும்''[8] என்பார் ஆர். எல். பிரட் என்னும் மேனாட்டறிஞர்.

### 5. 2.4 மீனாட்சிசுந்தரனாரின் பிள்ளைத்தமிழ் நூல்களில் கற்பனை

'கற்பனைப் புலவர்' என்று சிறப்பிக்கப்படுபவர் மீனாட்சி சுந்தரனார். எடுத்துக் கொண்ட பாடுபொருளுக்கு ஏற்ப இவருடைய கற்பனை வளம் விரிவடையக் காண்கிறோம். இவர் எழுதிய பிள்ளைத்தமிழ் அனைத்தும் சமயச் சார்புடையமையின், அவற்றில் புராண, இதிகாசச் செய்திகளைத் தம் கற்பனை ஆற்றலால் அழகு பெறக் காட்டுகின்றார். இவர் பாடல்களில் பின்வரும் பகுதிகளில் கற்பனைத் திறன் காணப்படுகின்றது.

1. இயற்கைப் புனைவுகள்
2. வாழ்வியல் காட்சிகள்
3. தோற்றப் புனைவுகள்
4. அகச் செய்திகள்

இயற்கைப் புனைவில் நாட்டுவளம், நகர்வளம் கூறும் பகுதிகள் அடங்கும். தோற்றப் புனைவில் இறைவன், இறைவி, தலைவன், தலைவி ஆகியோர் பற்றிய வருணனைகள் அடங்குகின்றன.

இவரது படைப்புக்களில் காணலாகும் கற்பனை வெளியீடு களை இருவகையாகக் கொள்ளலாம். அவை;

1. இயல்பான வருணனைகளாக அமைந்த காட்சிகள்,
2. உயர்வு நவிற்சியாக அமைந்த காட்சிகள்

என்பன.

#### 5. 2. 4. 1 இயல்பான வருணனைகளாக அமைவன

இயல்புக் கற்பனை எனவும், தன்மை நவிற்சி எனவும் பாராட்டப்படுவதே இவ்வகைக் கற்பனையாகும். இது சங்க இலக்கியங்களில் மிகுதியும் காணப்படும் ஒன்று. இயல்பான காட்சி வருணனைகளாக, மீனாட்சிசுந்தரனார் பாடல்களில் இடம் பெறு பவை பல.

##### 5. 2. 4. 1. 1 இயற்கைப் புனைவுகள்

இயற்கைக் காட்சிகள் பல இடங்களில் மிக இயல்பாகப் புனையப்படுகின்றன. இப்புனைவுகள் நாட்டு, நகர வளங்களைக் காட்டுவனவாக அமைகின்றன.

திருவிடைக்கழியின் சோலைகளின் வளம்பாடவந்த ஆசிரியர்.

''உரைசெ யுருவ முத்தரும்பி யொருங்கு நெருங்கு மரகதங்காய்த்
தொளி செய் பவளம் பழுத்துநெடி தோங்குங் கமுகும் வீங்குநறும்
விரைசெய் சுவைமாங் கனிக்குலையும் வெய்ய புலிக்கால் விரற்பைங்காய்
மிகுகூன் குலைப்பைங் கதலிகளும் விழையுந் தழையுங் கழையுமலி
கரைசெ யொருமுப் புடைப்புடைய காய்த்தெங் குகளும்''[4]

நிறைந்த சோலைகள் என்கிறார். இங்கு, கமுகினைக் குறிப்பிடு மிடத்து அரும்புகள் முத்துக்கள் போன்றவை, க்காய்கள் மரகதம் போன்றவை, பழங்கள் பவளம் போன்றவை என்பதும், மாங்கனி 'சுவைமாங் கனிக்குலை' என்பதும், வாழையைப் 'புலிக்கால் விரற் பைங்காய்' என்பதும், தேங்காயை 'முப்புடைப்புடைய காய், என்பதும் இயற்கைப் பொருள்களின் இயல்புகள் மாறாது அமைந்த வருணனைகள் எனலாம்.

இவ்வகையான இயல்பான நிகழ்ச்சிகளுக்கும், செய்திகளுக்கும் தன் கற்பனைத் திறனால் காரணம் கற்பித்துக் கூறலும் ஒருவகைக் கற்பனையேயாகும். அவ்வாறு காரணம் கற்பிக்கு மிடத்து, அறிவுக்கும் பொருந்துவதாக அக்காரணம் அமைதல் வேண்டும்.

'கத்துந் தரங்கக் கடல் எழுந்து ஒளிமிக்க பவளங்களையும், சங்கீன்ற வெண்முத்துக்களையும் அள்ளி வந்து கரையிலே குவிக்க, அவற்றை ஏற்றுக் கொண்டு பண்டம் மாற்றுச் செய்வன போலப் பைங்கமுகுகள் செம்பழமும் வெண்முகையும் கொட்டி நிற்கும் புகழ் மணவை'[5] எனக் கடல்வளமும். நிலவளமும் புலவர் கற்பனையால் இணைக்கப்படுகின்றன.

இங்கு பவளம், முத்து போன்றவற்றைத் தருவது கடலின் இயல்பு. செம்பழமும், வெண்முகையும் உதிர்ப்பது கமுகின் இயல்பு. இவ்விரண்டு இயல்புகளையும், '' பண்டம் மாற்றுச் செய்வன'' எனா இணைத்தமை ஆசிரியரின் கற்பனை ஆற்றலாகும்.

திருத்தவத்துறையின் வளம் பாடவந்த கவிஞர் கற்பனைச் சோலைகளைக் காட்டுகிறார். 'இங்குப் பைங்கிளிகள் மூவர் தேவாரம் பாடுகின்றனவாம்; மாமரக் கிளைகளில் அமர்ந்த கருங்குயில் திருவாசகத்தைப் பாடுகின்றதாம்; நாகணவாய்ப் புட்கள் சாமவேதம் இசைக்கின்றனவாம். இந்நிலை கண்டு கற்பகச் சோலையும் வணங்கும் வளம் உடைய திருத்தவத்துறை'[6] என முடிக்கிறார்'

இங்கு அஃறிணை உயிர்கள் கூடச் சைவப் பாடல்களைப் பாடுவதாக அமைக்கப்பட்டுள்ளது. இது, கவிஞரின் சைவப் பற்றாலும், எல்லா உயிரினமும் சமய உணர்வு பெற வேண்டும் என்ற பெரு விருப்பத்தினாலும் அமைக்கப்பட்ட கற்பனையேயாகும். சோலை வருணனை கவிஞரின் சமயப் பற்றால் இன்னும் சிறப்புப் பெறுகிறது.

சேக்கிழார் பிள்ளைத்தமிழில் குன்றத்தூர் வயலில் ஒரு காட்சி காட்டப்படுகிறது. 'வெண்ணித்திலத்தை அரித்தெடுத்த வெள்வாய்க் களமர் கரையிலே குவிக்கின்றனர். அப்பொழுது நீர் குடைந்து எழுந்த அன்னப் பறவை ஒன்று வெயில் காய்வதற்காக அந்த முத்துக் குவியலின் மீது வந்து அமர்கிறது. அதைக் கண்ட உழவர்கள் அன்ன முட்டையினை நித்திலம் என்றெண்ணிக் குவித்தோமே என்று கூறி நாணினராம்.'[7]

இங்கு முத்துக்களை உழவர் குவித்தமையும், அவற்றில் அன்னம் அமர்ந்தமையும் அழகான கற்பனை. அதனை அன்ன முட்டை என எண்ணி நாணினர் எனக் கூறுவது கவிஞரின் கற்பனைச் சிறப்பாகும். இங்கு, அவ்வாறு மயங்குவரோ என்ற ஐயம் எழாதவாறு 'வெவ்வாய்க் களமர்' என்று அவ்வுழவர்களுக்கு அடைமொழி தருகிறார். அஃதாவது அறியாமை நிறைந்த சொற்களை உடைய களமர் என்பது பொருள். இவ்வறியாமைக்குக் காரணம் மிகுதியாகக் கள்ளுண்டு மயங்கும் இயல்பேயாகும்– அதனால்தான் தாமே குவித்த முத்துக்களை அன்னத்தின் முட்டை என நாணினர் போலும். இங்கு உழவர் தம் மயக்கம் அழகிய கற்பனையாக அமைந்துள்ளது.

### 5. 2. 4. 1. 2 வாழ்வியல் காட்சிகள்

அன்றாட வாழ்வியல் நிகழ்ச்சிகள், புராணச் செய்திகளோடு ஒட்டியவையாய், இறைவி மீது சார்த்திக் கற்பனை செய்யப் படுகின்றன. இவையும் இயல்பாகவே அமைந்துள்ளன.

திருவிடைக்கழி முருகர் பிள்ளைத்தமிழில் முருகப்பிரானின் இளமைக் கால விளையாட்டு ஒன்றைக் கற்பனையாகப் படைக் கிறார். 'தன் தந்தையின் கையிலிருந்த உடுக்கையைக் கண்ட முருகன், அதனைப் பறை என எண்ணி, முழக்குவதற்குக் கோல் வேண்டுமே எனத் தேடினான். அவன் கண்களில் அருகிருந்த விநாயகரின் ஒற்றைக் கொம்புபட்டது. முருகன் அக்கொம்பைப்பற்றி இழுக்க, வலி பொறுக்காத விநாயகர் மற்றொரு பக்கம் இழுக்க, விளைந்தது கலகம். அதைக் கண்ட உமையம்மை இடைப் புகுந்து இறைவனின் தலையிலமர்ந்த கூனல் பிறையை முருகனுக்குக் குணிலாகத் தருகிறாள்.'[8]

சிறு குழந்தைகள் சேர்ந்து விளையாடுவதும் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்வதும் இயல்பான வாழ்வில் காட்சிகள். இங்குக் காட்டப்படுவது தெய்வக் குடும்பம். புராணங்கள் தெய்வங்களுக்குக் கூறிய இயல்புகள் மாறாமல் அவற்றுக்கேற்பப் புனையப்பட்ட இக் கற்பனை இயல்பு நவிற்சியாகும்.

இது போன்றே, உமையம்மையின் 'தேன்சாறெனை மீன்சாறு' அருந்திய வலைஞர் குல வாழ்வும்[9], இமவான் மனைவியிடம் உமையம்மை பாலருந்துங் காட்சியும்[10] இயல்புக் கற்பனைகளாக அமைக்கப்பட்டுள்ளன.

## 5. 2. 4. 1. 3 தோற்றப் புனைவுகள்

பிள்ளைத்தமிழ் நூல்களில் இறைவன், இறைவி, முருகன் போன்றோரின் தோற்ற வருணனையாக வருபவை இயல்பு நவிற்சி யாகவே அமைந்துள்ளன. பாதாதி கேசமாகவும், கேசாதி பாத மாகவும் இவ்வருணனைகள் அமைகின்றன.

'வெள்ளிப் பொருப்பும், வெள்விடையும், வெள்ளைக் களிறும், வெண்பிறையும், வெள்ளேறுயர்த்த கொடியும், தரளம் கொழித்து வரும் வெண் புனலும், வெண்ணீறும், சங்கிற் புரிந்த வெண் தழையும், வெண்மணிவடமும் தும்பைப் புதுவெண் மலர்த்தொடை யும் தொலையா உடமையாகப் பெற்ற தூய அடிகள்'[11] என இறை வனின் தோற்றம் வருணிக்கப்படுகிறது. அவன் உடைமைப் பொருட்கள் அனைத்தும், அவன் தூய்மைத் தன்மைக்கு ஏற்ப வெண்ணிறம் பெற்றவை என்பது போல அத்தகு பொருட்களை ஒன்றாக இணைத்து இறைவனின் தோற்றத்தை நம் கண்முன் தருகிறார்.

இங்கு எதையும் மிகைபடப் புகழாது, இறைவனுக்குரியவை என்று புராணங்கள் எவற்றைக் குறித்துச் சென்றனவோ அவற்றை அழகிய கற்பனையால் இணைத்துக் காட்டுகிறார்.

இறைவியை வருணிக்கின்ற இடங்களும் தன்மையணி அமைந்தவையாக விளங்குகின்றன. 'திகழ்தரு சிலம்பு புனைபாதமும் செம்பட்டுடுத்திய இடையும், அறம் வளர்க்கும் அங்கையும், ஞானப் பாலூறும் கொங்கையும், வேயை அடுகின்ற தோளும், மங்கலக் கழுத்தும், அருள்பொழி இருவிழியும், வில்வீசும் திருநுதலும், இன் புன்மொழியும் ஏற்று மகிழ் செவியும், முகில் விளர்க்கும் கூந்தலும் மிகப்பொலிய அண்டங்கள் தழைக்கத் திருக்குடந்தையில் அமர்ந்த பெண்,'[12] என்று மங்கள நாயகியின் தோற்றத்தைப் பாதாதி கேசமாக

வருணிக்கின்றார். இறைவிக்குரிய இறைத்தன்மை பட்டுமே தெளி வுறுத்தப்படும் இயல்பான கற்பனையாக இப்பாடல் அமைகிறது.

இத்தகு தோற்ற வருணனைகள் தவிர, முன்னிலை விளியாக அமைகின்ற பாடல்கள் அனைத்துமே இயல்புக் கற்பனையாக அமைந்துள்ளன.

இவ்வாறு இயல்பான காட்சிகளுக்குக் காரணம் கற்பித்துக் கூறல், தன் விருப்பினை ஏற்றிக் கூறல், அழகிய வருணனைகளாக அமைத்தல் என்ற அனைத்துமே புலவரின் கற்பனை வெளியீட்டு நிலைகளாக உள்ளன.

## 5.2.4.2 உயர்வு நவிற்சியாக அமைவன

இயல்பாகத் தான் கண்ட காட்சிகளைக் கற்பனை செய்யும் கவிஞன், தன் உள்ளம் எண்ணியவாறெல்லாம் அதனை மிகைப் படுத்திக் கூறுவதும் ஒரு கற்பனையே. இது அறிவொடு சாராது. கேட்போர் வியக்கும் வண்ணம் கூறப்படுவதால் உயர்வு நவிற்சியின் பாற்படும். ''பாட்டு, உள்ளதை உள்ளவாறே கூறத் தேவை இல்லை. ஆயின் வெறுங்கற்பனை (fancy) யாக அமையாமல் உள்ளதை ஒட்டிக் கூறுவதாகவோ விளக்கிக் கூறுவதாகவோ அமைய வேண்டும் என்று பிராட்லே என்பவர் கூறுவது இங்குக் கருதத்தக்கது.''[13]

5.2.4.2.1 உலகத்தில் இல்லாத ஒன்றைப் படைத்துக் கூறல் இயலாது. ஆனால் உள்ளவற்றைத் திரித்து, வியப்புணர்ச்சியைத் தூண்டும் வண்ணம் கூறல் இயலும். அது கவிஞனின் மன ஆற்றலைப் பொறுத்து அமைகின்றது. ''சில வேளைகளில் அந்த உள்ளம், நூலற்ற காற்றாடி போல், வாழ்க்கையின் உண்மையோடு தொடர்பற்றதாய், எங்கோ பறத்தலும் உண்டு. அப்போது அமை யும் கற்பனை, அறிவின் அடிப்படை இழந்ததாய்ப் பொருளற்ற உயர்வு நவிற்சியாய் முடியும்.''[14]

5.2.4.2.2 இவ்வுயர்வு நவிற்சியே வெறுங்கற்பனை எனப்படுகிறது. இது அளவிற்கதிகமாக அமையும் இடங்களில், வியப்புணர்ச்சிக்குப் பதிலாக நம்பவியலா நிலையை அடைகின்றது. அத்தகு கற்பனையைச் சிறந்த கற்பனையாக ஹட்சன் போன்றோர் ஏற்றுக் கொள்வதில்லை.

5.2.4.2.3 கவிஞர் கூறும் மிகையான இப் பொய்மைக் கற்பனை இடைக் காலத்தில் மிக விருப்பமாகப் பேணப்பட்டது. சிற்றிலக்கியம் புனைந்த ஆசிரியர்கள் இதனை வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொண்டு தம் கற்பனை வளத்தைக் கவிதையாக்கினர். மீனாட்சிசுந்தரனார்

பாடல்களிலும் இத்தகு மிகைக் கற்பனை மிகுதியாகக் காணப்படு கிறது.

5.2.4.2.4 நாட்டின் செல்வ வளமும், நில வளமும் பாடுகின்ற பகுதிகளில் உயர்வு நவிற்சி மிகுதியாக அமைந்துள்ளது. தவிர, இறைவியை வருணிக்கும் இடங்கள் சிலவும், முருகனின் போர்க்களக் காட்சிகள், அம்மையாடும் அம்மானைக் காட்சிகள் போன்றவையும் வியக்கும் வண்ணம் அமைந்த கற்பனைகளாகவே உள்ளன.

நில வளம் பாடுமிடத்து வாளை மீன் வெடி கொண்டு துள்ளு வதால் ஏற்பட்ட விளைவுகள் எல்லாப் பிள்ளைத்தமிழிலும் பல இடங் களில் பேசப்படுகின்றன.

'மூரிப் பகட்டு நெடுவாளை முழங்கிப் பாய, அதனால் பதறி ஓடிய எருமை கமலக் காட்டினை உழக்கிக் குவளை மலர்களை மேய்ந்து, வெண்ணெல் குதட்டி, வேழக் கரும்பு பலகறித்து, ஊரிடத்தே உள்ள தன் கன்றினை உள்ளிப் பால் சுரந்ததாம். அப்பாலானது வெள்ளமாகப் பெருக்கெடுத்து, உழவர் தம் கழனி களில் பாய்ந்து, நெல்லை விளைவித்து, அறுத்து, அடித்துக் கொண்டு சென்று குவிக்கும் வளம் நிறைந்தது தவத்துறை'[1] என்கிறார்.

இங்கு வாளைமீன் துள்ளியமையால் அஞ்சிய மேதி பால் சுரந்தது என்பது வரைக்கும் இயல்பாக அமைந்த கற்பனை, பால் வெள்ளம் நெல்லை விளைவித்து, அறுத்து, அடித்துக் குவித்தது என்னும்போது, கேட்போர் வியக்கும் வண்ணம், வெறுங் கற்பனையே என்ற எண்ணத்தை ஏற்படுத்துவதாக அமைகிறது.

பிறிதோரிடத்தில், 'கவைத்தாள் மேதி புகுந்தமையால் வெருவிய வாளைமீன், வருக்கைப் பலாச்சுளை யுதிர, பாளைக் கமுகு மிடறு ஒடிய, தேங்காய்கள் பல சிந்த, மேகக் கூட்டம் கருக்கலங்க, மாமதியின் உடல் கிழிய, கற்பகத் தருவின் கோடுகள் முறிய, அண்டத்து அளவிற்கு எழுந்து பாயும்'[16] என்கிறார். இங்கு வாளை மீன் எவ்வளவு உயரம் துள்ளியது எனக்கூறவந்த புலவரின் கற்பனை மேலே மேலே சென்று விண்ணுலகத்தைத் தொட்டு, மீள்கிறது.

இவ்வாறு வாளைமீன் துள்ளலைக் காணும் போக்கினைக் குமரகுருபரரிடம் இருந்து இவர் பெற்றார் போலும்.

திருவுறையூரின் அகழிச் சிறப்பைப் பாடவந்த கவிஞரின் கவிதை கற்பனைச் செறிவோடு விளங்குகின்றது. 'களிறுகள் கலக்கி

விளையாடும் அகழியைக் கண்ட மேகக்கூட்டம், அவ்வகழியைக் கடல் எனவும், களிறுகளைத் தம் இனமாகிய மேகக்கூட்டம் எனவும் எண்ணித் தாமும் நீர் அருந்த இறங்கினவாம். மிகுந்த நீரினை உண்டு, விண்ணோக்கி எழும் பொழுது, கருமை நிறம் பெற்ற அம் முகில் கூட்டத்தைக் கண்ட யானைப்பாகர்கள், தம் யானைகள் என எண்ணி அவற்றின் மேல ஏறி இவர்ந்து சென்றனராம். விண்ணுலகம் சென்றதும், தாம் ஏறிவந்தது மேகக்கூட்டத்தின் மேல் என்பதை உணர்ந்து உடனேயே அந்நகர மாடங்களில் உச்சிப் பகுதிகளின் வழியாக இறங்கிக் கீழே வந்து விட்டனராம்.'[17]

ஒரே பாடலில் எத்தனை கற்பனைகளைப் புகுத்தியுள்ளார் என்பது நோக்கத் தக்கது. யானைகளைத்தம் இனம் என எண்ணிய மேகம், மேகக் கூட்டத்தை யானை என எண்ணிய யானைப்பாகர் என்ற இரு கற்பனைகளும் அவர்களின் மயக்க உணர்வினைக் காட்டு கின்றன. இதற்கும் அப்பால் சென்று, மேகத்தின் மேலேறி விண் சென்றனர் என்பதும், பின் மாடங்களின் வழி இறங்கி நகர் அடைந்தனர் என்பதும் புலவரின் கற்பனை ஆற்றலைக் காட்டும் பொய்மைக் கற்பனைகளே.

இந்திரனுலக மானத வாவியில் ஒரு நிகழ்ச்சி நடந்ததாகப் புலவர் செய்யும்கற்பனையும் வியப்புக்குரியதாக அமைகிறது. 'கொடி நுண்ணிடையார் கொழுநரொடு கொண்ட ஊடல் காரணமாகத் தம் மணிமாலைகளைச் சிதறி எறிந்தனர். அதனால் மறுகில் கிடந்து கண்ணிமைத்த மாணிக்க மணியைக் கண்ட குருவி இனங்கள் தம் கூடுகளில் அவற்றைக் கொண்டு சேர்த்தன. அக் கூடுகளிலிருந்து ஒளிவிட்ட அம்மாணிக்க மணிகளின் ஒளிக் கற்றைகள், விண்ணுல கத்து மானத வாவியிலிருந்த தாமரை அரும்புகளை மலரச் செய்தன'[18] என்னும் இக்கற்பனை மண்ணையும், விண்ணையும் இணைக்கும் புலவனின் கற்பனை ஆற்றலைக் காட்டி நிற்கிறது.

மற்றோரிடத்துத் தம் மிகைக் கற்பனைக்குக் கம்பராமாயணக் காட்சியை உவமையாக்குகிறார். 'கடுவன் ஒன்று வருக்கைப் பலா வின் கனியை விரலால் தோண்டித் தோண்டி எடுக்க, அதுவே பெரிய குழி போலானது. சுளைகளை எடுத்து வருவதற்காக அக்குழியில் புகுந்தது கடுவன். அச்சமயம் அருகிருந்த தென்னை மரத்திலிருந்து தேங்காய் ஒன்று வீழ்ந்து அக்குழியை அடைத்து விட்டது. உட் சென்ற கடுவன் வெளிவர இயலாது திகைத்துப் பின் தடையை நீக்கி வெளிவந்தது. தான் பிலத்துள் சென்ற பொழுது, கல்லால் அதன் வழியை அடைத்த தன் தம்பி மீது சீறிப் பாய்ந்த வாலி போலப் பழக்குழியினின்று வெளிவந்த கடுவன், மற்றொரு கடுவ

கற்பனைக் காட்சி புலவரின் கற்பனைத் திறத்திற்குச் சான்று பகர்கின்றது.

கம்பராமாயணச் செய்தியை மனத்தில் கொண்ட கவிஞர், அது போன்ற இயற்கைக் காட்சி ஒற்றைக் கற்பனை செய்கிறார். பலாப் பழத்தினுட் கடுவன் சென்றதும். தேங்காய் அதன் வழியை அடைத்ததும் உள்ளம் வியக்குமாறு அமைந்த கற்பனையே. இவை போன்றே,

"வாழைக் குருத்து மதிநடுப்போய்
மாரன் குடைக்கோர் காம்பாகித்
தேங்குத் திருத்தண் டகநாடு"[20]

எனவும், 'பாக்கு மரத் தேன் கூடுகளை வான்பிறைக் கோடு கிழித் தமையின் வழிந்த தேன் வீழும் துண்டீர வளநாடு'[21] எனவும் அமைந்த கற்பனைகள் அனைத்துமே வியப்புணர்ச்சியைத் தரவல்ல கற்பனை ஆக்கங்களே.

போர்க்களக் காட்சிகளைப் பாடுதல் என்பது புறநானூற்றுக் காலத்திலேயே தோன்றிய ஒரு மரபாகும். 'பின் தேர்க் குரவை' என்ற தொல்காப்பியப் புறத்திணையியல் துறை இக்கற்பனைக்குக் காரணமாகும்.[22] பரணி இலக்கியக் காலத்தில் களம் பாடுதல் என்ற பகுதியாக இக்கற்பனை விரிவடைந்தது. இவ்விரிவு காளிப்பேய், கூளிப்பேய், தாய்ப்பேய், குட்டிப்பேய் என்ற பல கற்பனைகளுக்கு இடமளித்தது. இக்களம்பாடும் கற்பனை, மீனாட்சி சுந்தரனார் பாடல்களிலும் காணப்படுகிறது. சான்றாகப் பின்வரும் பகுதியைக் காணலாம் :

'மால்வரை மறைக்கும் வெங்கேடகத்தை உண்கலமாகத் திருத்தியமைத்துத், துண்டிக்கப்பட்ட தலைகளைத் துடுப்புகளாகக் கொண்டு, மூளைப் பெருஞ்சோறு வாரிப்படைத்துப், பால்படுநிணப் பருப்பிட்டு, இழுது சொட்டும் பசிய இறைச்சிக் கறிகளைப் படைத்து, நெய்த் தோராகிய நெய் வார்த்துப் பல பெண் பேய்கள் நின்று உபசரிக்க இயன்ற மட்டும் உணவுண்ட ஆண்பேய், 'உடல் முற்றும் வயிறாகப் படைத்திலனே முன்னியற்றியோன்' என வருந்தும் போர்க்களம்.'[23]

அரிசிச் சோறு, பருப்பு, நெய், கறிவகை என மானிடர் உண்பது போலப் பேய் உணவுண்டால் எதனை உணவாகக் கொள்ளும் என எண்ணிப் பார்த்த கற்பனைகளின் விளைவே இத்தகு படைப்புக்கள்.

பிள்ளைத்தமிழ் நூல்களில் காணப்படும் இருவகைக் கற்பனை அமைந்த பிறபாடல்கள் பற்றிய புள்ளி விபரம் பின்னிணைப்பு எண். 4-இல் தரப்படுகிறது.

## 5. 2. 5 மீனாட்சிசுந்தரனாரின் கோவை நூல்களில் கற்பனை

5. 2. 5. 1 கோவை நூல்களில் பாடுபொருளாக எடுத்துக் கொண்ட அகச் செய்தியும், பாட்டுடைத் தலைவர்களின் சிறப்பும் முதலிடம் பெறுவதால் இயற்கை வருணனை குறைவாகவே அமைகிறது. அதனால் கற்பனைத் திறனும் குறைவாகவே பயன்படுத்தப் பட்டுள்ளது.

5. 2. 5. 2 பெரும்பாலும் முதலிரு தொடர்களும் பாட்டுடைத் தலைவனைப் புகழும் இயல்புக் கற்பனைகளாக அமைகின்றன. பின்னிரு தொடரில் அகச் செய்தியும், புலவரின் கற்பனையும் இடம் பெறுகின்றன. இவ்வாறு வருகின்ற கற்பனைகள் பெரும் பாலும் இயல்பு நவிற்சியாகவே அமைந்துள்ளன. உயர்வு நவிற்சி யாக அமைந்த கற்பனை அருகிக் காணப்படுகிறது.

''மைதவஞ் செய்தடை கண்ணார்''[24]

எனவும்,

''மறிவாளனைய கண்ணாய்''[25]

எனவும்,

''மஞ்சே குழலுழ னஞ்சே விழிமொழி வானமுதே
பஞ்சே பதம் ...''[26]

எனவும் அமையும் வருணனைகள் இயல்பான காட்சி வருணனை களாக உள்ளன.

மற்றோரிடத்துத் தலைவியை ஒரு கொடியாக உருவகிக்கும் தலைவன்,

''மலரா அரும்புங் குவியா மலருங்கொள் வல்லியுண்டே''[27]

என்கின்றான். இங்கு மலரா அரும்பு அவளது மார்பினையும், குவியா மலர் அவள் கைகளையும் குறிக்கின்றன.

5. 2. 5. 3 இயற்கை வருணனைகளும் இத்தகு இயல்புக் கற்பனை களாக அமைந்துள்ளன. இருளின் தன்மையைக்,

''கண்கட்டினை ஒக்கும் இருள்''[28]எனவும்,

''காலே கண்ணாகக் கருகிருள்''[29] எனவும்

கூறுமிடங்கள் இருளின் தன்மையைத் தெளிவாகக் காட்டும் இயல்புக் கற்பனைகள் எனலாம்.

மாரிக்கால இருளைக் குறிப்பிடுமிடத்து, 'மின்னலோடு பொழிகின்ற மேகம் விண்ணை மறைக்கும்; முழங்கிவரும் பெருவெள்ளம் மண்ணைமறைக்கும்; எனவே விண்ணும் மண்ணும் புலப்பட" இருள்[80] என்ற வருணனையும் இயல்பாக அமைந்துள்ளது.

தாமரை மலரைக் கண்டு பேசும் தலைவன், ''ஓ! தாமரையே! நீ மலராய் இருந்தும் இவள் முகம் ஒவ்வாய்; அரும்பாயிருந்தும் இவள் மார்பினை ஒவ்வாய்! பின் நீ மலர்ந்தென்ன மலராதிருந்தென்ன?''[31] எனக் கேட்கிறான். இங்கு இயல்பான கற்பனை உணர்வு, காதல் உள்ளம் காரணமாக, இன்னும் ஒருபடி மேற்சென்று மலரோடு பேசுவதாக அமைகின்றது. உவமையாய் அமையும் தாமரை, காதல் உணர்ச்சி காரணமாக உவமேயத்தை விட அழகு குறைந்ததாகக் கற்பனை செய்யப்படுகின்றது.

5.2.5.4 கோவைப் பாடல்களில் தலைவியின் மென்மையும், இளமையும் பற்றிப்பேசுமிடங்கள் உயர்வு நவிற்சியாக அமைகின்றன.

''பூமேன் மிதிப்பினுந் தீமேன் மிதித்தது போல்பதைப்பாள்''[32]
எனவும்,

''பஞ்சும் அஞ்சும் விரல்செறி மெல்லடி''[33]
எனவும் தலைவியின் மென்மைத் தன்மை பேசப்படுகின்றது.

''பல்லோ முளைத்தில வாயோ வினுமுலைப் பால்மணக்குஞ்
சொல்லோ குதலை நடையோ குறிது''[34]
என அமைகின்ற வருணனையைப் பார்க்குமிடத்து, நம் உள்ளத்தில் இது பொய்மைக் கற்பனை என்ற எண்ணமே விஞ்சி நிற்கிறது.

காதல் வயப்பட்டு, உடன்போக்காகச் சென்ற தலைவிக்குப் பல்லோ முளைத்தில, வாய் தாய்ப்பால் மணக்கும் என்புன போல வருணிப்பது, செவிலியின் தாய்மை உள்ளம் காரணமாக அமைந்த கற்பனையே. இவ்வாறு அமையும் மிகச் சில பாடல்களில் உயர்வு நவிற்சி காணப்படுகிறது.

## 5.2.6 முடிவுகள்

இயல்பான காட்சி வருணனைகளோடு, காரணம் கற்பித்துக் கூறலும், தன் விருப்பினை ஏற்றிக் கூறலும் மீனாட்சிசுந்தரனாரது கற்பனை வெளியீட்டு உத்திகளாக அமைந்துள்ளன.

வாழ்வியல் காட்சிகளைத் தெய்வக் குடும்பங்களோடு இணைத்து இயல்புக் கற்பனைகளாகப் புனைந்துள்ளார்.

இறைவன், இறைவியர் தம் தோற்ற வருணனைகள் புராண மரபுகளுக்கு மாறாமல் புனையப்பட்டுள்ளன.

இயற்கைக் காட்சி வருணனைகள் உயர்வு நவிற்சியாக அமைக்கப்பட்டுள்ளன.

வாளைமீன் வெடிகொண்டு துள்ளல் எல்லாப் பிள்ளைத் தமிழிலும் இடம் பெறுவதால், கவிஞரைக் கவர்ந்த கற்பனைக் காட்சி இது எனலாம்.

கோவை நூல்களில் இயல்புக் கற்பனையே மிகுதியான இடத்தைப் பெறுகிறது.

கோவை நூல்களில் உயர்வு நவிற்சி, தலைவியின் இளமைத் தன்மையைக் கூறல் போன்ற மிகச் சில இடங்களிலேயே காணப்படுகிறது.

## குறிப்புக்கள்

1. ச. வே. சுப்பிரமணியன், கம்பன், ப. 6.
2. மேலது., ப. 6.
3. R. L. Brette, Fancy and Imagination, p. 54.
4. முருகர். தால். 3.
5. திருவெண். தால். 5.
6. பெருந்திரு. தால். 8.
7. சேக்கிழார். தால். 1.
8. முருகர். சிறுதேர். 4.
9. அகிலாண்ட. செங். 3.
10. அகிலாண்ட. முத்தம். 8.
11. பெருந்திரு. முத்தம். 3,
12. மங்கள. பொன். 10.
13. மு. வரதராசன், இலக்கியத்திறன், ப. 165.
14. மேலது, ப. 145,
15. பெருந்திரு. நீராடல். 7.
16. பெருந்திரு. தால். 4.
17. காந்தி. தால். 4.
18. அகிலாண்ட. அம்மானை. 6.

19. காந்தி. நீராடல், 10.
20. சேக்கிழார். சிற்றில். 6.
21. சேக்கிழார். சிறுபறை. 4.
22. தொல். புறத். 21.
23. முருகர். சப். 4.
24. சீகாழி. 111.
25. மேலது., 24.
26. குளத்தூர். 88.
27. சீகாழி. 25.
28. குளத்தூர். 172.
29. மேலது., 192.
30. சீகாழி. 223.
31. மேலது, 39.
32. மேலது., 405.
33. குளத்தூர். 341.
34. மேலது., 342.

## 5. 3 மொழிநடை

### 5. 3. 0 முன்னுரை

இலக்கியத்தின் சிறப்பிற்குக் காரணமாய் அமையும் கூறுகளுள் மொழிநடையும் ஒன்றாகும். படைப்பாளி தான் கூறவந்த கருத்துக்குத் தரும் மொழிவடிவமே நடை எனப்படுகிறது.

நடை என்ற சொல்லுக்கு, ''ஒரு மனிதனது மொழி வழக்கில் காணப்படும் சில அம்சங்களை, அல்லது அவ்வழக்கிற் காணப்படும் அம்சங்கள் அனைத்தையும் சேர்த்துக் குறிக்கும் சொல்லாக நடை அமைவதுண்டு''[1] என்று க. கைலாசபதி பொருளுரைக்கிறார். ''நடை என்பது எழுதுபவனையும், எழுதப்படும் பொருளையும், அதனால் எழுப்பப்படும் உணர்ச்சிகளையும் பொறுத்து அமையும்''[2] என்று நடை அமையும் முறையினை விளக்குகிறார் சாலை இளந்திரையன். இலக்கியத்தில் மொழிநடை என்பது படைப்பாளி, படைப்பு, காலம் என்னும் மூன்றையும் சார்ந்து அமைகின்ற தன்மையை உணர முடிகிறது.

### 5. 3. 1 தனிமனித நடை

5. 3. 1. 1 மொழியியல் கூறுகள் வழியாகவே இலக்கியத்தின் மொழிநடை ஆராயப்படுகின்றது. கற்பனை, வருணனை, அணிகள் போன்ற கவிதைக் கூறுகளை, மொழியைக் கருவியாகக் கொண்டு வெளிப்படுத்தும் முறையில் கவிஞர்களுக்கிடையே வேறுபாடுகள் காணப்படுகின்றன. ''ஒவ்வொருவர்க்கும் கையெழுத்தில் வேறுபாடு இருத்தல் போல் நடையிலும் வேறுபாடு உள்ளது. கையெழுத்து வேறுபாட்டுக்குக் காரணம், இளமை முதல் கைக்குத் தந்த பழக்கமும் கையை ஆளும் மனத்தின் செம்மை, வேகம், வன்மை, மென்மை முதலிய பண்புகளும் ஆகும். அதுபோலவே, நடை வேறுபாட்டுக்குக் காரணமும், அந்தந்த ஆசிரியர் உள்ளத்திற்குத் தந்த பழக்கமும், அந்த உள்ளத்தின் உண்மை, நேர்மை, வேகம் நுண்மை முதலிய பண்புகளுமாகும்''[3] என இவ்வேறுபாட்டின் காரணத்தை மு. வ. புலப்படுத்துகின்றார்.

5. 3. 1. 2 ஆனால் இத்தனிமனித மொழிநடை என்பதைக் கைலாசபதி போன்றோர் ஏற்றுக்கொள்வதில்லை. ஒரு மனிதனின் மொழிநடையே காலத்தால் மாறலாம் எனக்கூறும் அவர்,

... ஆசிரியரின் தொடக்ககால நடையும் பிற்கால நடையும் இருப்பதனை எடுத்துக் காட்டி விளக்குகிறார்.

5.3.1.3 எனினும், தனிமனிதனின் மொழி அறிவுக்கும், அனுபவ வளர்ச்சிக்கும் ஏற்ப அவன் மொழி நடையில் காணப்படும் மாற்றம் ஒரு வளர்ச்சி நிலையே ஆகும். செம்மையான மொழிநடையினை அவன் அடையும்பொழுது, தனக்கென ஒரு தனிநடையை வகுத்துக் கொண்டு அந்நிலையே நிலைத்து விடுகின்றான். ''அத்தகுதனி நடையில் அவனது ஆளுமை, அறிவு, இதயம், உயிர்ப்பு என்ற அனைத்துமே படம்பிடித்துக் காட்டப்படுகின்றன.''[4]

5.3.1.4 ''தனியொருவரைக் குறித்துக் கூறுவதைப் போலவே ஒவ்வொரு காலப்பகுதியில் ஒவ்வொரு துறையைச் சார்ந்த மக்கட் கூட்டத்தினருக்குப் பொதுவாக அமைந்த மொழிவழக்குகளையும் நடை என்ற சொல்லால் குறிப்பதுண்டு''[5] என்பார் கைலாசபதி.

சங்கச் சான்றோர் பாடல்களில் பொதுவான மொழிநடைக் கூறுகள் பலவற்றைக் காணலாம். இதனைச் சங்ககால மொழிநடை என்கிறோம். அதுபோல ஒவ்வொரு காலத்தில் தோன்றிய இலக்கியங்களும் தமக்குள் சில கூறுகளிலாவது ஒப்புமை உடையனவாய் விளங்குதல் இயல்பு.

## 5.3.2 மீனாட்சிசுந்தரனாரின் மொழிநடை

5.3.2.1 19-ஆம் நூற்றாண்டுக் காலக்கட்டத்தைச் சார்ந்த மீனாட்சிசுந்தரனாரின் பிரபந்தங்களே இங்கு ஆய்வுக்கு உட்பட்டவை. அவர், தமது காலத்தில் பல்வேறு புதிய இலக்கிய வகைகள் தோன்றி, வளரத் தொடங்கினாலும், பழைய சிற்றிலக்கிய மரபுகளையே தம் படைப்பிலக்கியங்களுக்குப் பயன்படுத்தியுள்ளார். இதனால் அவர் எடுத்துக் கொண்ட இலக்கியத்திற்கேற்பக் கவிதை வடிவங்கள் அமைந்துள்ளன. கோவை இலக்கியங்கள் கட்டளைக் கலித்துறையிலும், பிள்ளைத்தமிழ் நூல்கள் விருத்தப் பாக்களாலும் அமைக்கப்பட்டுள்ளன.

5.3.2.2 ஒரு படைப்பாளியின் படைப்புக்களையே மிகுதியாகப் படிக்கும் பொழுது, அவனுடைய தனிநடையியல்புகளை ஓரளவு உணர முடிகிறது. அவற்றை மொழியியல் நோக்கில் ஆராயும் பொழுது தெளிவான முடிவுகள் கிடைக்கின்றன. ''இலக்கியத்தைப் படிக்கப் பயன்படும் பொழுதும், மொழியின் அழகினை ஆராய முற்படும் பொழுதும், சுருங்கக் கூறின் நடையியலாக மாறும் பொழுதுதான் மொழியியல் கல்வி இலக்கியமாக மாறுகிறது''[6] என்பது மேலைநாட்டார் கருத்து.

இம்மொழியியல் அடிப்படையில் இக்கவிஞரின் படைப்புக் களைக் கீழ்க்காணும் மூன்று நிலைகளில் ஆராயலாம்:

1. ஒலிக் கூறுகள்
2. சொல்லாட்சி
3. தொடர்பு அமைப்பு

## 5. 3. 2. 2. 1 ஒலிக் கூறுகள்

நடையியல் கூறுகளில் ஒலி முதலிடம் பெறுகின்றது. பல ஒலிகள் வரன்முறைப்படி இணையும் பொழுது அவை அழகிய படைப்புக்களாகின்றன.

"ஒரு மொழியினின்றும் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒலி நிலைகளே கலைப் படைப்பாகின்றது"[7] என்பார் கருத்தும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

பாடலின் ஒலிநிலைக் கூறுகள் கவிஞர்கள் பயன்படுத்தும் எதுகை, மோனை, வண்ணம், பொருளுக்கேற்ற ஒலி, அளபெடை, ஒலிக்குறிப்புச் சொற்கள் என்பனவாகும்.

## 5. 3. 2. 2. 1. 1 எதுகை, மோனை

5. 3. 2. 2. 1. 1. 1 முதலெழுத்துக்கள் ஒன்றிவரத் தொடுப்பது மோனை எனவும், இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது எதுகை எனவும் கூறப்படுகிறது. இலக்கியங்கள் இவ்வெதுகை மோனைக்குச் சிறப்பிடம் கொடுத்தன. ஒரே மாதிரியான ஒலியன்கள் எதுகை மோனையாக அமைவதால் பாடலின் ஓசை நயமுடையதா கின்றது.

5. 3. 2. 2. 1. 1. 2 மீனாட்சிசுந்தரனாரின் படைப்புகளுள் ஆய்வுக் குட்பட்ட பிள்ளைத்தமிழ், கோவை நூல்களில் பார்க்கும் பொழுது இவர் மோனைக்குச்சிறப்பிடம் கொடுக்கவில்லை என்பது புலனாகிறது.

5. 3. 2. 2. 1. 1. 3 சீகாழிக்கோவையில் இரு (332, 514) பாடல்களும், குளத்தூர்க் கோவையில் மூன்று (38, 173, 432) பாடல்களும் மட்டுமே ஒரே மோனையில் அமைந்தவையாக உள்ளன. அவையும் கூடநான்கு தொடர்களும் ஒரே சொல்லால் தொடங்குவ னவாக உள்ளன. ஒரே சொல்லாக அமைவதால் எதுகை, மோனை இரண்டுமே ஒரே பாடலில் இடம்பெற வாய்ப்பாகின்றது.

5. 3. 2. 2. 1. 1. 4 ஏனைய பாடல்கள் அனைத்தும் எதுகைச் சிறப்புப் பொருந்தியன.

''பதங்கொண்ட ...
இதங்கொண்ட ...
மதங்கொண்ட ...
சுதங்கொண்ட ...''[8]

எனவும்,

''கான்பெற்ற ...
வான்பெற்ற ...
தேன்பெற்ற ...
யான்பெற்ற ...''[9]

எனவும்,

''பொன்பூத்த ...
தென்பூத்த ...
மன்பூத்த ...
கொன்பூத்த ...''[10]

எனவும் இவ்வாறு அனைத்துப் பாடல்களும் அழகிய எதுகை பெற்று விளங்குகின்றன.

இவற்றின் மற்றொரு சிறப்பு, முதல் எழுத்துத் தவிர முதல் சீரின் ஏனைய எழுத்துக்கள் அனைத்துமே ஒன்றுபடுகின்றன. இவ்வமைப்புக் கோவைப்பாடல்கள் முழுமையிலும் அமைந்துள்ளது.

பிள்ளைத்தமிழ்ப் பாடல்களில் இரண்டாம் எழுத்து மட்டும் ஒன்றிவரும் எதுகை எல்லாப் பாடல்களிலும் அமைந்துள்ளது.

இவர் பாடல்களில் இவ்வெதுகை அமைப்பிற்காகச் சில இடங்களில் வடசொற் பயன்பாடு, புதிய சொல்லாக்கம், சொற்களைத் திரித்து வழங்கல் ஆகியன காணப்படுகின்றன.

5.3.2.2.1.1.4.1 வெள்ளிமலையாகிய கைலயங்கிரியை 'இரசதவரை' எனவும் 'இரசத விலங்கல்' எனவும் தம் பாடல்களில் குறித்துச் செல்கிறார். இரசதம் என்னும் வடசொல்லைப் பயன் படுத்தியமைக்குக் காரணம் எதுகைச் சிறப்பேயாகும்.

இரசத...
சுரபி...
உரகம்...
பரமர்...[11] எனவும்

இரசதம்...
சரணினை...
மரகதம்...
தரணி...[12] எனவும் வரும் பாடல்களில் இரண்டாம்

எழுத்தாகிய ரகரம் ஒன்றுபடத் தொடுப்பதற்காக இவ்வடசொல்லைப் பயன்படுத்துகிறார்.

### 5. 3. 2. 2. 1. 1. 4. 2 புதிய சொல்லாக்கம்

சீகாழிக்கோவையில் புணர்ச்சியில் மகிழ்ந்த தலைவன் கூற்றாக ஒரு பாடல் அமைகிறது.

''தண்ணாளி தேயன்பர் மேவிக் கலப்பத் தனையருளு
மெண்ணாளி காழிப் பிரானெனத் தன்னை யிகல் தெறுமைக்
கண்ணாளி யாதுங் கருதா தளிக்கக் கலந்தனம் யாம்
விண்ணாளி யாரண னாரணன் போகமும் வேண்டிலமே''[13]

என்னும் அப்பாடலில் தண்ணாளி, எண்ணாளி, கண்ணாளி, விண்ணாளி என்ற சொற்கள் எதுகை நயத்தோடு அமைந்துள்ளன. இங்கு 'எண்ணாளி' என்பது இறைவனைக் குறிக்கின்றது. ஆள்பவன் ஆளி; எண்ணத்தை ஆள்பவன் 'எண்ணாளி' என்ற நிலையில் இச் சொல்லைப் படைத்துக் கொண்டதன் காரணம் பாடலின் எதுகை நயமேயாகும்.

### 5. 3. 2. 2. 1. 1. 4. 3 சொல் திரிபு

''நவையா றுறாம லெனைப்புரப் பார்சண்பை நாட்டிளவேய்
குவையா முறித்துக் களிற்றின் பிடிக்குக் கொடுக்கும் வெற்பா
செவையாக நின்குறை நீயேசென் றோதெங்கள் செல்விமுன
மிவையா திகளெம்ம னோரிசை யாரச்ச மெய்துவரே''[14]

எனும் தோழிகூற்றில் 'செவ்வையாக' என்ற சொல் நவை, குவை இவை என்ற சொற்களின் எதுகைக் கேற்பச் 'செவை' என இடைக் குறையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

''உதையம் ...
இதையம் ...
குதைவரி ...
ததையும் ...''[15]

என்னும் பாடலில் பின்னிரு வரிகளுக் கேற்ப, உதயம். இதயம்என்ற ஐகாரம் சேர்க்கப்பட்டு 'உதையம்,' 'இதையம்' எனப் பயன்படுத்தப் பட்டுள்ளன. பிறிதோரிடத்துக்,

''காட்டை விழுங்கும் புகழ்வேத நாயகக் காளைமுந்நீர்ப்
பேட்டை யணைத்திற காலனந் துஞ்சும் பெருந்துறைவ
ரேட்டை யொழிப்பரெம் பால்வந் தின்னே பொய்ய
ரென்றுளியோர்
கேட்டை யணங்கிழை யேலென்று வாழ்த்துவங் கேழ்மயிலே'[16]

என்னும் பாடலில், எடுத்துக்காட்டை விழுங்கும் புகழ் உடையவன் என 'வேதநாயகம் பிள்ளை புகழப்படுகிறார், அதாவது தனக் குவமையில்லான் என்ற கருத்தே இவ்வாறு கூறப்படுகிறது. 'எடுத்துக்காட்டு' என்னும் சொல் எதுகைக்காகக் 'காட்டை விழுங்கும் புகழ்' என முதல்நிலை குறைத்துக் கையாளப்படுகிறது.

5. 3. 2. 2. 1. 1. 5 இவ்வாறு எதுகைக்கு மிகப்பேரிடம் கொடுத்த மைக்குக் காரணம் மீனாட்சிசுந்தரனாரின் சொல் வளமேயாகும். இவர் நிகண்டு, அகராதி போன்றவற்றைக் கற்றுத்துறைபோகியமை யும், அவற்றில் கொண்டிருந்த மிகுதியான தோய்வுமே இவ்வெதுகை விருப்பத்தின் காரணங்களாகும். கவிதையின் ஓசை நயத்தை இவ் வெதுகைகள் கட்டிக் காக்கின்றன.

## 5. 3. 2. 2. 1. 2 வண்ணம்

5. 3. 2. 2. 1. 2. 1 ஓரின எழுத்துக்கள் பாடலின் எல்லாத் தொடர் களிலும் பயின்று வருவதனைத் தொல்காப்பியர் போன்ற இலக்கணிகள் வண்ணம் என்னும் இலக்கணத்தால் குறித்தனர்.

5. 3. 2. 2. 1. 2. 2 மொழியியலார் வண்ணம் என்பதற்கு வேறொரு பொருள் கூறிப் பயன்படுத்துவர். ''ஒலிநிலையில் காணப்படும் மற்றொரு உத்தி வண்ணமாகும். ஒரே ஒலி அல்லது அதற்கினமான ஒலிகள் ஒரு அடியிலோ பாடல் முழுதுமோ பயின்று வருவதையே வண்ணமென்கிறோம். வல்லெழுத்துக்கள் மிகுந்து வருமானால் வல் லெழுத்து வண்ணம் எனப்படும் அதைப்போன்றே பிறவுமாகும்,''[17] என்பர்.

5. 3. 2. 2. 1. 2. 3 வந்த ஒலியே மீண்டும் மீண்டும் வந்துபாடலின் ஓசையைச் சிறப்பிக்கும் தன்மையை மீனாட்சிசுந்தரனார் பாடல்களில் மிகுதியும் காணலாம்.

''...கலைவல்லோர்செந்
நாவிரி பாவிரி பூவிரி காவிரி
நன்னீராடுகவே''[18]

எனவும்,

''பூமகள் நாமகள் கோமகள்
பொன்னிப் புதுநீராடுகவே'[19]

எனவும்,

''புண்ணிய நண்ணிய தண்ணிய ரண்ணிய
பொங்கமு தச்சுவையே''[20]

''ஓங்கை முகவர் தகவர் பகவ ரொளிமழுக்கொள்
பூங்கை யுடையர் விடையர் சடையர் புகலி வெற்பு'[23]

எனவும் அமைந்துள்ள இடங்களில் ஒரே வகையான ஒலிக் கூறுகள் தொடர்ந்து வந்து ஓசைநயத்தைச் சிறப்பித்துள்ளன. பாடுபொருளுக் கேற்ப ஓரின எழுத்துக்களைப் பயன்படுத்தியுள்ளமை குறிப்பிடத் தக்கது.

''நாத மகத்துவ வாயா தூயா மாயாவா
னாடர் முடிக்கணி பாதா போதா நீதாவோர்
சூத மடித்தெழு மாலா வேலா சீலாநீ
டோகை மயிற்பரி மோகா யோகா வேகாமா
மோத வமர்த்தெழு தாரா சோரா வீராதா
மோதரன் முற்பல ரேறே பேறே வீறேசேர்
மாதவ ருட்பொலி தேவே தாலோ தாலேலோ
வாவி விடைக்கழி வாழ்வே தாலோ தாலேலோ''[24]

என்றமைந்த பாடல் ஓசை இன்பம் பயப்பினும் சொற்பயன்பாடும், புணர்ச்சி நிலையும் பொருளைக் கடினப்படுத்திவிடுகின்றன. பிறிதோரிடத்துப்,

''புரவைக் கருதிப் புகலியின் மேவும் புராணர் வெற்பி
லிரவைக் கருதி யரவைக் கருதி யிரும்புனல் வாழ்
கரவைக் கருதிப் புகல்வதல் லாதெங்கள் காவலநின்
வரவைக் கருதிப் புகல்வாரு முண்டு கொன் மாநிலத்தே''[25]

என்னும் பாடலில், 'கருதி' என்னும் சொல் மீண்டும் மீண்டும் வர சொல் வண்ணம் அமைந்துள்ளமையைக் காணலாம்.

5.3.2.2.1.2.4 இவ்வாறு வண்ணம் என்னும் ஒலியியல் உத்தி மீனாட்சி சுந்தரனார் பாடல்களில் பெரும்பாலும் ஓசை இன்பத்தைத் தருகிறது. ஒரோவிடங்களில் பொருள்புரியா நிலையை ஏற்படுத்தி விடுகிறது.

## 5.3.2.2.1.3 பொருளுக்கேற்ற ஒலி

அழகிய சொற்களின் சேர்க்கையால் கவிஞன் தன் கருத்துக் களைப் புலப்படுத்தும் பொழுது அது கவிதையாகின்றது. தான் கூறவந்த கருத்தைப் புலப்படுத்தும் ஒலியமைப்புடைய சொற்களைத் தேர்ந்தெடுத்தல் கவிஞனின் தனிச் சிறப்பாகிறது.

''துருவரு நித்திலம் வைத்த தலைப்பணி சுற்று மிசைந்தாடச்
சூழிய மொடுநுதல் தாழக் கட்டிய சுட்டி யசைந்தாடப்
பொருவரு திருமுக முழுமதி யெழுசிறு புன்னகை நிலவாடப்
பொங்கொளி தங்கு குதம்பை ததும்பப் பொருகட் கயலாடக்
கருகிருள் இன்று விளங்கு மிளங்கதிர் கால்பொற் குழையாடக்
கான்மலர் பெயர்தோ றுங்கிண் கிணிகள் கலின் கலின் என்றாட
வருள்வளர் தருதிரு வுருவ்ஃமு மாடிட ஆடுக செங்கீரை
யழகிய திருவுறை யூரமர் நாயகி யாடுக செங்கீரை''[26]

என அமைந்த பாடல் செங்கீரையாட்டத்தைக் குறிப்பிடுகின்றது. இங்கு குழந்தை செங்கீரை ஆடும் பொழுது அசைந்தாடும் அணிகலன் களின் ஆட்டம் சொல்லாலும், ஓசையாலும் பெறப்படுகின்றது. ஐந்து சீர்கள் ஈரசைச் சீர்களாய் அமைய, ஆறாவது சீர் மட்டும் காய்ச்சீராக அமைந்தமையும், ஆட என்ற சொல் தேர்வுமே இவ்வோசை அமைப்பிற்குக் காரணமாகும்.

இவ்வாறு பொருளுக்கேற்ற ஓசைநயமுடைய பாடல்கள் பல காணப்படுகின்றன.[27]

## 5. 3. 2. 2. 1. 4 அளபெடை

அகவல் பாக்களில் அளபெடைகளைக் கையாளுதல் ஓசையின் பத்தை மிகுவிக்கும். இங்கு ஆய்வுக்குட்பட்ட இலக்கியங்களின் யாப்பமைப்பு கட்டளைக் கலித்துறையாகவும், விருத்தப் பாக்களாகவும் அமைந்துள்ளன. இவற்றில் சில இடங்களிலேயே அளபெடைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## 5. 3. 2. 2. 1. 5 ஒலிக்குறிப்புச் சொற்கள்

''ஒலியின் அடிப்படையில் சொற்கள் உருவாக்கப்பட்டுப் பயன்படுத்தப்படல் இலக்கிய, வாழ்வியல் இயல்பாக அமைகின்றது... ஒலியால் பொருளுணர்த்துவதாக இச்சொற்கள் பயன்படுகின்றன''[28] என ஒலிக்குறிப்புச் சொற்களின் பயன்பாட்டை ச.வே. சுப்பிரமணியன் குறிப்பிடுகின்றார். இவ்வொலிக் குறிப்புச் சொற்கள்,

''வெச்சென மொய்த்த பவக்கடல்''[29]
''கஃஃறெலிக் கான்''[30]
''பொள்ளென்று...
பொருக்கென்று ..''[31]

''மேற்புலத் திறனாய்வாளர்கள் கவிதையைச் 'சிறந்த சொற்களைச் சிறந்த இடங்களில் அமைக்கும் கலை'யென்றும் 'மானிட உணர்ச்சிகளைச் சரியான வடிவத்துடனும் ஒலி நயத்துடனும் அமைக்கும் வெளியீடே கவிதையென்றும் கூறுகின்றனர்.''[32]

சிறந்த சொற்களைக் கையாளுதல் என்பதும் கவிஞனுக்குக் கவிஞன் வேறுபடும் ஓரியல்பாகின்றது. மிகச் சிறந்த கவிஞர்கள் சொற்களைத் தேடிச் செல்வதில்லை. அவை தாமாகவே அவர்கள் படைப்புக்களில் வந்தமைகின்றன.

சொல்நிலையில் காணப்படும் நடையியல் உத்திகள் படைப்பின் சிறப்புக்குக் காரணமாகின்றன. மொழியியலார், ''சொற்களின் தேர்வு, பயன்படுத்தும் முறை, புதியனவற்றை ஆக்கும் திறமை, புதிய பொருள்களை ஏற்றும் திறமை, முதலியவை, இன்றியமையாத நடையியல் உத்திகளாகும்,''[33] என்பர்.

இவ்வடிப்படையில் மீனாட்சிசுந்தரனார் தம் கவிதைகளில் காணப்படும் சிறப்புச் சொற்களைக் கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம்.

### 5. 3. 2. 2. 2. 1 ஆக்கச் சொற்கள்

பழையன கழிதலும், புதியன புகுதலும் இலக்கணிகளால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றே. மீனாட்சிசுந்தரனார் தம் படைப்புக்களில் தேவைக்கேற்பச் சில புதிய சொற்களைப் படைத்துக் கொண்டுள்ளமை நோக்கத்தக்கது.

5. 3. 2. 2. 2. 1. 1 மனைவியை மனையாட்டி என்றும், முதியவளை மூதாட்டி என்றும், பெருமைக்குரியவளைப் பெருமாட்டி என்றும் செல்வம் மிக்கவளைச் சீமாட்டி எனவும் வழங்கும் வழக்குகள் உள்ளன. இவ்வழக்குச் சொற்களை மனத்துட் கொண்டு, கற்பினை உடையவளைக் 'கற்பாட்டி'[34] என்றும், கலைமகளைப் 'பனுவலாட்டி'[35] என்றும், குழல் உடையவளைக் 'குழலுடையாட்டி'[36] என்றும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

5. 3. 2. 2. 2. 1. 2 இறைவன், இறைவி, என்பது போல, ஈசன் என்ற சொல்லுக்குப் பெண்பாலாக 'ஈசை'[37] என்ற சொல்லையும், சிவன் என்ற சொல்லுக்குப் பெண்பாலாகச் 'சிவை'[38] என்றசொல்லையும் பயன்படுத்தியுள்ளார்.

இவை அனைத்தும். ஒப்புமையாக்கம் என்ற நிலையில் ஆக்கம் பெற்ற சொற்களாகும்.

5. 3. 2. 2. 2. 1. 3 இவைதவிரப் பொன்னி நதியின் பெருக்கைக் கண்டு திருமால் அஞ்சினான் எனக் கூறவந்த ஆசிரியர் ''பயத்தன் பயத்தனாக''[39] என்கிறார். இங்கு 'பயம்' என்றால் பால், அச்சம் எனப்பொருள்படும். பாற்கடலில் பள்ளிகொண்ட திருமாலைப் 'பயத்தன்' எனக் குறித்தமைக்கு ஏற்ப, அஞ்சினாள் என்பதைப் 'பயத்தனாக' என்று குறிப்பிடுகின்றார். எதுகை மோனைக்காகச் சொற்களின் மேல் புதிய பொருளை ஏற்றிக் கூறும் திறனை இங்கு காண்கிறோம்.

5. 3. 2. 2. 2. 1. 4 பரதவரைக் குறிப்பிடுமிடத்துச் 'செடியுடலர்[40]' எனக் குறிக்கிறார். துர்நாற்றத்தைப் பேச்சுவழக்கில் 'செடிநாற்றம்' என்று கூறுவது மரபு. புலால் நாறும் மேனியுடைய மீனவர்களை, இவ்வழக்கினை மனத்துட்கொண்டே 'செடியுடலர்' எனக்குறிப்பிட்டார் போலும். தவிரவும் இப்பாடலில்

''கடியவிழ் ...
முடிமிசை ...
வெடிபடு ...
செடியுடலர் ... ''

என அமையும் ஒவ்வொரு அடியின் முதற்சீரையும் நோக்க, எதுகைக் காக இச்சொல் பயன்படுத்தப்பட்டது என்றும் கொள்ளலாம்.

5. 3. 2. 2. 2. 1. 5 தேவருலக மகளிரைக் குறிக்குமிடத்து ''நஞ்சு பழுத்த நயனியர்''[41] எனக் குறிப்பிடுகின்றார். 'நயனம்' என்பது வடசொல் — நச்சுத் தன்மை உடைய கண்களை உடைய மகளிர் என்பது தோன்றும் வண்ணம் நயனம் என்ற சொல்லுக்குப் பெண் பால் விகுதியாகிய இகரம் சேர்த்துப், பலர்பால் என்பது தோன்ற 'அர்' விகுதியும் சேர்த்து, 'நயனியர்' என ஆக்கி உள்ளார்.

இவ்வாறு ஒப்புமையாக்கமாகவும், எதுகை மோனையாகவும் வழக்குச் சொற்களின் அடிப்படையிலும், பால்வேறுபாடு காட்டுவதற் காகவும் பல புதிய சொற்களை ஆக்கிக் கொண்டுள்ளார்.

## 5. 3. 2. 2. 2 அரிய சொற்கள்

அரிய சொற்பயன்பாடு என்பது, கவிஞரின் அறிவுத் திறனையும், பாண்டித்தியத்தையும் காட்டுவனவேயாகும். சிறந்த கவிதை என்பது, எளிதில் பொருள் புலப்படாமல் அமைவதேயாகும் என்பது, இவர்கால வித்துவான்களிடையே நிலவி வந்த ஒரு மதிப் பீடாகும். அவ்வெண்ணத்திற்கு மீனாட்சிசுந்தரனாரும் விதி விலக்கல்லர்,

இவர் பயன்படுத்தியுள்ள அரிய சொற்களும் அவற்றின் பொருளும் கீழே தரப்படுகின்றன :

| | | | |
|---|---|---|---|
| அஞ்சம் | — | அன்னம் | (மங்கள. நீராடல். 6) |
| உடல் | — | பொன் | (அகிலாண்ட. நீராடல். 10; காந்தி. அம்மானை. 7) |
| செதும்பு | — | சேறு | (முருகர். தால். 4) |
| செப்பு | — | விடையின் திமில் | (சீகாழி. 134) |
| ஞாங்கர் | — | வேல் | (பெருந்திரு. காப்பு. 8) |
| ஞெமுங்க | — | அழுந்த | (காந்தி. காப்பு. 1) |
| நரலை | — | கடல் | (பெருந்திரு. காப்பு. 1; மங்கள. பொன். 1) |
| நரிப்பு | — | இகழ்வு | (காந்தி. வாரானை. 10) |
| படு | — | மது | (குளத்தூர். 81) |
| பமரக்குலம் | — | வண்டுகள் | (அகிலாண்ட. சப். 9) |
| பவர் | — | சிவன் | (சீகாழி. 82) |
| பறி | — | பொன் | (பெருந்திரு. முத்தம். 7) |
| பித்தி | — | சுவர் | (அகிலாண்ட. பொன். 4) |
| மராளம் | — | அன்னம் | (அகிலாண்ட. பொன் 5: சேக்கிழார். தால். 1) |

இவை தவிரத் தொல்காப்பியரைக் குறிப்பிடுமிடத்துத் 'திரணதூ மாக்கினி'[42] எனக் குறிக்கிறார். திரணதூ மாக்கினி என்பது தொல்காப்பியரின் இயற்பெயராகத் தொல்காப்பியப் பாயிர உரையில் நச்சினார்க்கினியரால் குறிப்பிடப்படுகிறது.[43] அவ்வழக்கினைத் தம் பாடலில் பயன்படுத்தியமை ஓர் அரிய பெயர்ச்சொல் பயன்பாடாக உள்ளது.

'அதான்று'[44] என்பன போன்ற வழக்கிழந்த பழஞ்சொற்களையும் பயன்படுத்தியுள்ளார்.

### 5. 3. 2. 2. 2. 3 வடசொற்கள்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த கவிராயர்களில் பெரும்பாலோர் வடமொழி அறிவு பெற்றிருந்தனர். வடமொழி அறிவே அக்காலத்தில் சிறப்புடையதாக மதிக்கப்பட்டது. புலவர்கள் தம் படைப்புக்களில், தம் வடமொழி அறிவைப் புலப்படுத்துவதற்

தமிழ்ச்சொல் வளம் மிகுதியும் வாய்க்கப்பட்ட மீனாட்சி-சுந்தரனாரும் காலத்தால் கட்டுண்ட கவிஞராகவே விளங்குகிறார். தம் வடமொழிப் புலமையைப் புலப்படுத்தும் வண்ணம் அவர் கையாண்டுள்ள வடசொற்கள் பல.

6.2.2.2.3.1 சைவசமயத் தத்துவங்களுக்கும் சமயச்செய்திகளுக்கும் விளக்கம் கூறும்பொழுது, அவற்றுக்குரிய கலைச்சொற்களே பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன. இறைவனின் இயல்புகளைக் கூறுமிடத்து 'நிர்விகாரி', 'நிர் அகங்காரி', 'காரிஆகாரி'[45] போன்ற சொற்களைப் பயன்படுத்தியுள்ளார்.

தீட்சை முறைகளைக் கூறுமிடத்துச் சமையம், விசேடம், நிருவாணம்[46] என்ற சொற்களால் குறிக்கிறார். உயிர் இறையருளைப் பெறும் முக்திநிலையை உணர்த்துதற்குச் சித்தாந்த ஆசிரியர்கள் குறித்த சொற்களாகிய சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம்[47] என்ற சொற்களையே இவரும் கையாண்டுள்ளார். இன்னும் சைவ பரிபாடை, சம்பிரதாயம்[48] என்னும் சொற்களும் இவர் பாடல்களில் காணப்படுகின்றன.

இவ்வாறு சைவசித்தாந்தம் பேசப்படும் இடங்களில் எல்லாம் வடசொற்களைப் பயன்படுத்தியுள்ளார்.

5.3.2.2.2.3.2 வெள்ளிமலை என்பதைக் குறிக்கும் இடங்களில் 'இரசதவரை' என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். இச்சொல் சில இடங்களில் எதுகைக்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை மேலே கண்டோம். எதுகைக்காக இல்லாமலும் சில இடங்களில் இச்சொல் காணப்படுகிறது. பொற்சபை என்பதை 'இரணிய சபை'[49] என வழங்குகிறார்.

'பொன்' என்ற சொல்லை அறியாதவரல்லர் ஆசிரியர், இவரே ஹிரண்யன் என்ற வடசொல்லைப் 'பொலப்பெயரான்'[50] என்றும் காஞ்சன மாலை என்ற பெயரைப், பொன்மாலை[51] என்றும் தமிழ்ச் சொல்லாக்கித் தம் கவிதைகளில் கையாண்டுள்ளார்

பிறிதோரிடத்து, 'இரணியப் பெயரினோன்'[52] என்றே வழங்குகிறார். எனவே தம் இருமொழிப் புலமையைப் புலப்படுத்தவே மாற்றிமாற்றிச் சொற்களைக் கையாண்டுள்ளார் என்பது தெரிகிறது.

5.3.2.2.2.3.3 தமிழில் மொழி முதலாகாத எழுத்துக்களில் தொடங்கும் வடசொற்களை முறைப்படி தமிழ் ஒலிப்புக்கேற்ப மாற்றி 'உலோசனம்', 'அரதனகிரி', என அமைத்துள்ளார். இவை

ர 'சதக்கிருது', 'திரிநேத்திரம்' போன்ற காரணப் பெயர் ாயும் கையாண்டுள்ளார்.

3. 2. 2. 2. 3. 4 'பற்பபதத்திறைவா' என்பன போல வருபவை நயம் கருதிப் பயன்படுத்தியவை. இவை தவிரப், பிரபை, ாருகம், அம்போருகம், லச்சை, சயந்தனம், வருதினி, அனுஞை, ராசாரம், மாலிகையான், பதுமாதினி, தோடம், பராகம், ம், கீடம், சூகரம், பிரமரக்குலம், தாதகி, சந்தாபம், சலிலம், டம், போன்ற எண்ணற்ற வடசொற்களை இவர் படைப்புக்களில் ணலாம். இவை அனைத்தும் இவர்தம் வடமொழிப் புலமையைக் ட்டுவனவே.

'சலாம்' என்னும் அரேபியச் சொல்லைக் கையாண்டுள்ளமையும் றிப்பிடத்தக்கது.

### 3. 2. 2. 2. 4 அடிக்கடி பயின்று வரும் சொற்கள்

ஒரு கவிஞன் தன் படைப்புக்களில் அடிக்கடி சில சொற்களைப் பயன்படுத்தினால், அதன்மூலம் அவன் சொல் விருப்பினை றியலாம். மீனாட்சிசுந்தரனார் தம் பாடல்களில் அடிக்கடி ரும்பிக் கையாளும் சொற்கள் :

1. பிரபை
2. தகட்டகட்டிளவாளை
3. கரடக் கடாம்
4. குருட்டுத் திருட்டிருள்
5. மகிழ்நன்

5. 3. 2. 2. 2. 4. 1 இவற்றுள் 'பிரபை' என்பது ஒளியைக் குறிப் பிடும் வடசொல். இதனைப் 'பிரபை கஞல', 'பிரபை திகழ' என்றெல்லாம் பயன்படுத்தியுள்ளார். இவரே பிறிதோரிடத்து இதே பொருள் தரும் சொல்லாக 'வில்வீச' என்ற தமிழ்ச் சொல்லையும் பயன்படுத்துகிறார், எனினும் 'பிரபை' என்ற சொல்லின் ஒலிப்பு முறை இவரைக் கவர்ந்தது போலும். அதனால் பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார்.

5. 3. 2. 2. 2. 4. 2 வாளை மீனைக் குறிக்கும் இடங்களில் அதன் இளமைத் தன்மையைச் சிறப்பாகப் புலப்படுத்த விரும்புகிறார். அதனாலேயே 'தகட் டகட்டு வாளை' எனவும், 'தகட்டகட்டிள வாளை' எனவும், 'தகட்டகட்டுப் பகட்டு வாளை' எனவும் பல

அடைமொழிகளை இணைத்துப் பல இடங்களில் பயன்படுத்து கின்றார். இதே அடைமொழியைத் 'தகட்டகட்டிதழ்' எனத் தாமரையைக் குறிக்கவும் கையாளுகிறார்.

5. 3. 2. 2. 2. 4. 3 'கரடக் கடாம்' என்ற சொல்லை யானையைக் குறிப்பிடப் பயன்படுத்துகிறார். கரடம் என்றால் மதம்; கடாம் என்றாலும் மதம் என்பதே பொருள். ஒருபொருட் பன்மொழியாகக் 'கரடக்கடாம்' என்ற சொல்லை அடிக்கடி கையாண்டுள்ளார். இந்த அடைமொழியை இணைத்துக், 'கரடகும்பப் புயல்' எனவும், 'கரடக் கடா மலை' எனவும் 'கரடக் கறையடி' எனவும் பிற இடங் களிலும் யானையைக் குறிப்பிடுகின்றார்.

5. 3. 2. 2. 2. 4. 4 கணவன் என்பதைக் குறிக்கும் இடங்களில் 'மகிழ்நன்' என்ற சொல்லையே விரும்பிக் கையாளுகிறார்.

5. 3. 2. 2. 2. 4. 5 இருளின் தன்மையைப் புலப்படுத்தும் வண்ணம் 'குருட்டிருள்' எனவும், 'குருட்டுத் திருட்டிருள்' எனவும் குறிப்பிடு கின்றார்.

இவர் விரும்பிக் கையாளும் சொற்களைத் தொகுத்து நோக்க அவை பெரும்பாலும் வல்லின ஒலி உடையனவாகக் காணப்படு கின்றன.

## 5. 3. 2. 2. 2. 5 எண்ணுப் பெயர்கள்

ஒன்று முதலாக எண்ணப்படும் எண்களின் பெயர்களே எண்ணுப் பெயர்கள் எனப்படுகின்றன. இவை கவிதையில் இடம் பெறும் பொழுது பொருட்சிறப்புப் பெறுகின்றன, "ஒன்று முதல் தொடர்ந்த எண்களைத் தொடர்ச்சியாகப் பயன்படுத்தும் நிலை, இறைமையின் பரப்பையும் விரிவினையும், எங்கும் நிறை தன்மை யினையும், எல்லாமாகிய இயல்பினையும் சுட்டவுதவி, பெருவிளக் கத்தைச் சில எண்களில் சுருக்கி மொழியும் உத்தி நிலையில் சார் கின்றது"[53] என்கிறார் ச. வே. சுப்பிரமணியன்.

"தாக்கு மலமூன் றறச்சவட்டித் தாவா விருவல் வினைமுருக்கித்
தருமொன் றடைய வெளியேற்குந் தண்ணங் கருணை
புரிதாயே"[54]

எனுமிடத்து மும்மலமும், இருவினையும், ஒன்றாகிய வீடுபேறும் எண்ணுப் பெயர்நிலையில் குறிப்பிடப்படுகின்றன.

ருதுசாக் கிரமாதி யைந்துமந்

திரமாதி கரையாறு நீந்தியெழும்''[55]

பம் இடத்திலும் ஒன்று முதல் ஆறுவரை வரிசையாக எண்ணப் நிலையினைப் பார்க்கிறோம். இவை போன்ற பாடல்கள் யரின் சமய அறிவையும் கவித்திறனையும், சுருங்கக் கூறும் ப் உத்தித்திறனையும் காட்டுகின்றன.

### 2.2.2.6 பன்மை ஈறுகள்

'அவர்' என்ற பன்மைச் சொல்லோடு 'கள்' என்னும் விகுதி ந்து வழங்கும் வழக்கு வள்ளுவர் காலத்தினின்றே வழங்கி வந்த ு. இருப்பினும் பெரும்பாலும் பேச்சுமொழியிலும், உரைநடை ;கிலுமே இவ்வாறு இரண்டு பன்மை ஈறுகள் உடைய சொற் ாக் காணலாம். ஆனால் மீனாட்சிசுந்தரனார் தம் கவிதை நூல் ப் இவ்வமைப்பினைப் பயன்படுத்தியுள்ளார்.

'நால்வர்கள் தமிழ்', 'மூவர்கள்' 'கதுப்பினர்கள்', வுளர்கள்' எனப் பெயர்ச் சொல்லோடும் 'நிற்கின்றனர்கள் என ைச்சொல்லோடும் 'கள்' விகுதியை இணைத்துள்ளார்.' நிற் றார்கள்' என்ற இன்றைய வழக்கில் ஆர் விகுதியோடு 'கள்' தி இணைந்துள்ளமையினைக் காண்கிறோம் ஆனால் மீனாட்சி தரனார்' அன்' சாரியை கொடுத்து அதன் பின்னர்'அர்' 'கள்' ற இருவிகுதிகளும் சேர்த்து 'நிற்கின்றனர்கள்' என்ற சொல்லைக் யாளுகின்றார்.

### .2.2.3 தொடர் அமைப்பு

மீனாட்சிசுந்தரனார் பயன்படுத்திய சொல்நிலை உத்திகளைப் ாலத் தொடர் நிலை உத்திகளும் குறிப்பிடத்தக்கவை.

அடைத்தொடர், உவமைத்தொடர், குறிப்புவினை முற்றுத் ாடர், விளித்தொடர் என்பன போன்ற தொடர்களை நீக்கல் ந்தி, விரித்தல் உத்தி என்ற இருநிலைகளிலும் பயன்படுத்தி ர்ளார். நீக்கல் உத்தி என்பது சுருங்கக் கூறல்; விரித்தல் உத்தி ரித்துக் கூறலேயாகும்.

### 3. 2. 2. 3. 1 அடைத்தொடர்

பொருளின் இயல்புகளை விளக்குவதற்குப் பயன்படுபவை டைமொழிகள். இவை பண்பு, நிறம், செயல் போன்ற அனைத்

தையும் சில சொற்களால் விளக்குவன. வாளை மீனின் இளமைத் தன்மையைத் 'தகட்டகட்டுப் பகட்டிள வாளை' என்னுமிடத்து அடைமொழிகள் விளக்கி நிற்கின்றன.

'பெருமுலைச் சிற்றிடை யரம்பையர்கள்' [56] என்னுமிடத்து முரண்பட்ட சொல்லடை அடுக்கு அரம்பையர்தம் அழகினை விளக்குகின்றது.

''மடங்கலின்றி முடங்கல் விடும்
மைதோய் கருங்கண்[57]

என்பது மகளிர் கண்களின் செயலையும், பண்பையும்விளக்குகின்றது.

சிவபெருமானைக் குறிப்பிடுமிடத்து, 'செங்கட் கருங்களச் செக்கர்வான்' [58] என்கிறார். இந்த இறைவனின் ஒவ்வோர் உறுப்பையும் விரிவாகக் கூறாது, அவற்றின் இயல்புகள் புலப்படுமாறு முரண் தொடையில் அடைமொழி கொடுத்தமை நீக்கல் உத்தி எனலாம்.

## 5. 3. 2. 2. 3. 2 உவமைத்தொடர்

இவர் பாடல்களில் உவம உருபுகளோடு அமைந்த விரிவான உவமைத் தொடர்கள் மிகுதியாகக்காணப்படுகின்றன. அவை தவிர, ''மஞ்சே குழல், உழல் நஞ்சே விழி, மொழி வானமுதே'' [59] என்பது போன்ற உவமைத் தொகைத் தொடர்களும் சில இடங்களில் அமைந்துள்ளன. இத்தகு தொகைநிலைத் தொடர்களும் நீக்கல் உத்தியின்பாற்பட்டவையே.

## 5. 3. 2. 2. 3. 3 குறிப்புவினைமுற்றுத் தொடர்

குறிப்புவினைமுற்றாக அமைகின்ற தொடர்களும் சுருங்கக் கூறும் பாங்கில் அமைந்தவையே. ''குறிப்புவினைத் தொடர்களைப் பயன்படுத்துவது ஒரு வகையில் அடிவரையறையின்போது சிக்கனத்திற்கு வழி தருகிறது. குறிப்புவினை பயன்படுத்தப்படும் போது அங்கு வினைமுற்றுக்கள் வரவேண்டிய தேவை இல்லை'' [60] என்கிறார் ஜெ. நீதிவாணன்.

சிவபெருமானைக் குறிக்குமிடத்துச், 'சினந்து ஒலிக்கும் துடித்து'; 'இருநான்கு தோட்டு'; 'கள்ஊவிழ் பூந்தொடைத்து'; 'கருமாக் காண அரிதா மிருதாட்டு' எனவும், அவர்தம் செயல்களைக் கூறுமிடத்து 'பொதுக் கூத்தினர்' எனவும், 'பூமத்த மாமுடிச்

சாத்தினர்' எனவும் குறிப்புவினை முற்றில் முடிகின்ற தொடர்களைக் காண்கிறோம். அதுபோல இறைவியைக் குறிப்பிடும் இடங்களில் 'அமுதேயாம் மொழிச்சி' எனவும், 'பாசக்கரத்தி' எனவும் குறிப்பிடுவதும் இவ்வமைப்பேயாகும்.

## 5. 3. 2. 2. 3. 4 விளித்தொடர்

ஆய்வுக்குட்பட்ட பிள்ளைத்தமிழ் நூல்களில் முன்னிலை விளியாக வருவனயாவும் சிறுசிறு தொடர்களாக அமைந்துள்ளன.

''ஒரு கருத்தினை நேரடியாகச் சொல்ல விரும்பும்போது விளித்தொடர்கள் அதிகம் பயன்படுகின்றன''[61] என்கிறார், ஜெ. நீதிவாணன்.

பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையில் காப்புப் பருவம் தவிர, ஏனைய் பருவங்கள் அனைத்தும் பாடப்படும் குழந்தையிடம் பேசுவதாகவே அமைகின்றன. இதனால் சிறுசிறு விளித்தொடர்கள் அமைந்த பாடல்கள் மிகுதியாக உள்ளன.

''எண்ணுத லூற்றவர் உள்ளக் கமல மிருக்கும் அனப்பேடே
எப்பொழு துந்துதி பாடுநர் நாவினி லினிக்கும் பைந்தேனே
கண்ணுதல் பக்க மிருப்பா யென்றடி கைதொழு பவர் வாழ்வே
கார்தவ ழும்பனி மால்வரை பெற்ற கருங்கண்
மடப்பிடியே''[62]

எனவும்,

''கன்றே வருக மெய்ஞானக் கனியேவருக ஆனந்தக்
கரும்பே வருக''[63]

எனவும் அமையும் தொடர்கள் குறுகிய விளித்தொடர்களாகக் காணப் படுகின்றன.

## 5. 3. 2. 2. 3. 5 முடிக்கும் உத்தி

பிள்ளைத்தமிழ்ப் பாடல்களில் ஒரே வரி பல பாடல்களுக்கு இறுதி வரியாகின்றது. இதன் காரணம் சந்தப் பகுப்பேயாகும். ஒரே சந்தத்தில் அமைகிறன் பாடல்கள் ஒரேஇறுதி வரியைப்பெறுகின்றன. சந்த்த மாறும் பொழுது இறுதி வரியும் மாறுகிறது.

## 5. 3. 2. 2. 3 6 பழமொழி

இவைதவிரக் கருத்து விளக்கத்திற்குப் பழமொழித் தொடர்களைப் பயன்படுத்தியமையும் ஒரு நடையியல் உத்தியேயாகும்.

தலைவனின் குலச்சிறப்பையும், தலைவியின் குல இழிவையும் புலப்படுத்துதற்குத் தோழி, ''புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது''[64] என்ற பழமொழியைக் கூறுகிறாள். இங்கு மேற்குலத் தலைவன் கீழ்க்குலத் தலைவியை விரும்புதல் நன்றன்று என்ற விளக்கத்தைப் பழமொழி மூலம் காட்டுகிறார்.

தலைவனை எள்ளி நகையாடும் தோழி புன்னகை புரிய, அதனைப் பொறாத தலைவன்,

''வெப்பார் பிணிக்குப் புளியிட்ட தாயிற்றுன்
வெண்ணகையே''[65]

என்கிறான். இங்கு 'போனசுரத்தைப் புளிகொண்டழைத்தாற்போல' என்ற பழமொழியின் கருத்துக் காணப்படுகின்றது. ஏற்கனவே இருந்த காமமாகிய சுரம், தோழியின் நகைப்பால் புளிப்பட்டது போன்று மிகுதியாக வேதனை தருகிறது என்பதே இதன் விளக்கம்.

பரதவர்களைக் குறிப்பிடுமிடத்து,
''தேன்சா றெனச்சொலியம் மீன்சாறு பருகுங்கருஞ்
செடியுடலர்''[66]

என்கிறார். இங்கு 'தேன்சாறோ மீன்சாறோ' என்னும் மீனவர்தம் பழமொழி பயன்படுத்தப்பட்டமை நோக்கத்தக்கது. ஆய்வுக்குட்பட்ட இவர் தம் படைப்புக்களில் மூன்று இடங்களிலேயே பழமொழிகளைக் காண்கிறோம். நாட்டுப்புறத் தாக்கம் இவர் பாடல்களில் இல்லாமையே இதன் காரணம் எனலாம். பாமர நடையைவிடப் பண்டித நடையையே இவர் பெரிதும் விரும்பியமையும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

### 5. 3. 3 கடுமையான நடை

மீனாட்சிசுந்தரனார் பாடல்கள் என்றாலேயே அவை கடுமையான நடை உடையவை என்ற எண்ணம் அனைவர்க்கும் உரியது. அவருடைய பாடல்களை 'நாளிகேர பாகம்' என்று கூறுவர். அதாவது தேங்காயை உரித்து, உடைத்துப் பின் உள்ளிருக்கும் சுவையான நீரை அருந்துவது போன்றது இவர் தம் நடை.

அவ்வாறு கூறுவதன் காரணம் மேற்கூறிய அருஞ்சொல், வடசொல் பயன்பாடுகளும், சிலேடை, யமகம் போன்ற சொல்லணிகளும் ஆகும். இவை தவிரச் சொற்களைப் பிரித்தறியத் தடுமாற வைக்கும் கடுமையான புணர்ச்சிகளும் காரணமாகின்றன.

''மிறைநிறை மனனுடை யமரர்க டமருட னோவிட வலைக் கடல்''[67] எனவும்,

''வித்துரும விட்டமிட் டொட்டியெட் டித்தரள வெண்டாம் பிசைத்து[68]'' எனவும்,

''அருகொரு குளனிள மேதிச்சூன்முகி
 னிரைவிழ வெருவுவ ராளெட் டேடவி
ழயல்வளர் கதலிகள் சாயப் பாசநி
 றத்த மடற்பூகம்''[69]

எனவும், இவை போன்றமைந்த பிறதொடர்களும் புணர்ச்சியால் கடினநடை பெற்றமைவன. இவை தவிர,

''எழுந்தே பணைத்த முல்லையார் பொதுநல மெய்துபுதி
 கழுந்தே சுடைத்திருத் தந்தையைச் சார்ந்து''[70]

எனவரும் பாடலில் ,முதலடியின் ஈற்றுச்சீரின் இறுதியில் இரண்டாம் வரியின் முதல் சீருக்குரிய முதலெழுத்து அமைய, அதனால் 'திகழ்ந்தேசு' என்ற சொல்லின் திகரம் முதலடி ஈற்றிலும், 'கழுந்தேசு' என்பது இரண்டாம் அடித்தொடக்கமாகவும் அமைகிறது. இதனை 'வகையுளி' என்று இலக்கணிகள் கூறுவர். இத்தகு வகையுளிகளாலும் ஆற்றொழுக்குப்போன்றநடைதடைப்படுகின்றது.

## 5. 3. 4 யாப்பு

கவிதையின் வடிவத்திற்குப் பெரிதும் உதவுவது யாப்பாகும். பாவினங்களால் பிற்கால இலக்கியங்களின் யாப்பு மிகுந்த விரிவும், சிறப்பும் பெற்றன. சிற்றிலக்கியங்கள் ஒவ்வொன்றும் எத்தகு பாக்களால் பாடப்பெறுதல் வேண்டும் எனப் பாட்டியல் நூல்கள் கூறுகின்றன.

### 5. 3. 4. 1 பிள்ளைத் தமிழ்

பிள்ளைத்தமிழ் இலக்கியம் வகுப்பு, விருத்தம் என்ற பாவினங்களால் அமைதல் வேண்டும். பெரும்பாலும் ஆசிரியவிருத்தத்தால் அமைந்த பிள்ளைத்தமிழ் நூல்களே காணப்படுகின்றன.

ஆசிரிய விருத்தம் என்பது கழிநெடிலடி நான்காய்த் தம்முள் அளவொத்து வருவன என யாப்பிலக்கண நூல்கள் கூறுகின்றன.

மீனாட்சிசுந்தரனாரின் பிள்ளைத்தமிழ் நூல்கள் கழிநெடிலடி யாலமைந்த ஆசிரிய விருத்தப்பாக்களால் ஆனவை. இவர் பாடல்கள்

எண்சீர், பதின்சீர், பன்னிருசீர், பதினான்குசீர், முப்பத்திரண்டுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களாக அமைந்துள்ளன.

''வகுப்பு என்பதும் விருத்தமே. ஆனால் இஃது ஓர் அடியில் பற்பலசீர்கள் அமையப் பாடப்படும். ஒரு வகுப்பின் கால் அடியே ஒரு தனிப் பாட்டுப் போலக் காணப்படும், ''[71] என்று வகுப்பு என்பதற்கு விளக்கம் தருகிறார் பாலூர் கண்ணப்ப முதலியார். இத்தகு வகுப்புப் பாடல்களை அருணகிரியார் பாடல்களில் காணலாம்.

பாலூர் கண்ணப்ப முதலியார், ''வகுப்புப் பாவால் பாடப் பட்ட பிள்ளைத்தமிழ் நூல்கள் எதுவும் கண்ணுக்குத் தென்பட்டிலது என்றாலும், சிற்சில பிள்ளைத்தமிழ் நூல்களில் வகுப்புப் போன்ற பாடல்கள் காப்புப் பருவத்தில் அமைந்திருப்பதைக் காணலாம், ''[72] எனக் குறிப்பிட்டு, மீனாட்சி சுந்தரனாரின் படைப்புக்களுள் மங்களாம் பிகை பிள்ளைத்தமிழில் காப்புப் பருவத்தில் வரும் அமுதகும்பேசர் பற்றிய பாடலையும், பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழில் வரும் காப்புப் பருவத்தில் அழைத்து வாழ்வித்த பெருமான் பற்றிய பாடலையும் எடுத்துக்காட்டாகக் காட்டுகிறார்.

மீனாட்சிசுந்தரனாரின் பிள்ளைத்தமிழ் நூல்களில் வகுப்புப் பாடல் அமைந்துள்ள இடங்கள் : அகிலாண்ட. காப்பு. 2 (44 சீர்கள்); பெருந்திரு. காப்பு, 2 (32 சீர்கள்); காந்தி. காப்பு. 2 (32 சீர்கள்); திருவெண். காப்பு. 2 (32 சீர்கள்); முருகர். காப்பு. 2 (40 சீர்கள்), 3 (32 சீர்கள்); மங்கள. காப்பு. 2 (32 சீர்கள்); சேக்கிழார். பாயிரம். 2 (32 சீர்கள்).

இவற்றைத் தொகுத்து நோக்க, முப்பத்திரண்டும் அதற்கும் மேற்பட்ட சீர்களும் அமையப் பாடுவது வகுப்புப் பாடல் எனலாம். அம்பல. வில் மட்டும் வகுப்புப் பாடல் இல்லை. தாம் பாடிய விருத்தப் பாக்களுக்குப் பேரெல்லையாக 44 சீர்களைக் கொண்டுள்ளார்.[73] பாட்டியல் நூல்கள் கூறும் இலக்கண முறைப்படி ஆசிரியர் தம் பிள்ளைத்தமிழ் நூல்களின் யாப்பு அமைந்துள்ளது.

### 5. 3. 4. 2 கோவை இலக்கியம்

கோவை இலக்கியம் கட்டளைக் கலித்துறையால் அமைவது. ''கட்டளைக் கலித்துறையாவது, நெடிலடி நான்காய், வெண்டளை பொருந்தி, கடையொரு சீரும் கருவிளங்காய், கூவிளங்காய்ச் சீர் களிலொன்றாக, நேரசையை முதலாகவுடைய அடியொன்றுக்குப் பதினாறு எழுத்தும், நிரையசையை முதலாகவுடைய அடி

யொன்றுக்குப் பதினேழெழுத்தும் உடையதாய், ஏகாரத்தால் முடியும்''[74] என்பர்.

மீனாட்சிசுந்தரனாரின் மூன்று கோவை நூல்களுமே கட்டளைக் கலித்துறையில் அமைந்துள்ளன. அவற்றுள் சில பாடல்களில், ஏதாவது ஒரு தொடரின் ஈற்றுசீர் நாலசைச்சீராக அமைந்துள்ளது.

''...கோலந் தழீஇய பசுமயி லாடும்பொன் கொன்றைநல்கு ...''[75] எனவும்,

''...ஏரோதை சால்குளத் தூர்வேத நாயக வேந்தல்வெற்பி ...''[76]

எனவும் அமைகின்ற பாடல்வரிகளின் ஈற்றுச்சீர்கள் நேரசையாலிற்ற நாலசைச் சீர்களாக அமைந்துள்ளன.

இவ்வகைச் சீரைக் குறிப்பிடுமிடத்து.
''... கண்ணிய பூவினங் காய்ச்சீ ரனைய கனியொ டொக்கும்
ஒண்ணிழற் சீரசைச் சீரியற் சீரொக்கும் ஒண் தளைக்கே''[77]

என்கிறது யாப்பருங்கலக்காரிகை. பூவென முடியும் நாலசைச் சீர்கள் பாவினத்தில் வரின் காய்ச்சீராகக் கொள்ளுதல் வேண்டும் என்ற இவ்விலக்கணப்படி, மேற்காட்டிய நாலசைச் சீர்களைக் காய்ச் சீராகக் கொள்ளின் கட்டளைக் கலித்துறை இலக்கணம் பொருந்த முற அமைந்தமை காணலாம்.

## 5. 3. 5 முடிவுகள்

மீனாட்சிசுந்தரனார் தம் பாடல்களில் மோனைக்குச் சிறப்பிடம் தரவில்லை.

எதுகை நயத்திற்காக வடசொற்களைக் கையாண்டுள்ளார்; புதிய சொற்களை ஆக்கிக் கொண்டுள்ளார்; சொற்களைத் திரித்தும் பயன்படுத்தி உள்ளார்.

வண்ணம் என்னும் உத்தி பல இடங்களில் ஓசை இன்பம் தருகின்றது; சில இடங்களில் பொருளைக் கடினப்படுத்தி விடுகின்றது.

பொருளுக்கேற்ற ஒலிநயம் அமைந்த பாடல்கள் பெரும் பாலும் செங்கீரைப் பருவத்தில் அமைந்துள்ளன.

அளபெடைச் சொற்களைக் குறைவாகவும், ஒலிக் குறிப்புச் சொற்களை நான்கு இடங்களிலும் கையாண்டுள்ளார்.

ஒப்புமை ஆக்கமாகவும், எதுகை மோனைக்காகவும், வழக்குச் சொற்களின் அடிப்படையிலும் பால்வேறுபாடு காட்டுதற்காகவும் பல புதிய சொற்களை ஆக்கிக் கொண்டுள்ளார்.

அரிய சொற்களையும், வழக்கிழந்த பழஞ் சொற்களையும், மிகுதியாகக் கையாண்டமை பாடல்களின் நடையைக் கடினப்படுத்துகின்றது.

தம்காலச் சூழலுக்கு ஏற்ப வடசொற்களைத் தம் படைப்புக்களில் மிகுதியும் கையாண்டுள்ளார்.

பெரும்பாலும் வல்லின ஒலிப்புடைய சில சொற்களை மீண்டும் மீண்டும் பயன்படுத்தியுள்ளார்.

எண்ணுப் பெயர்களைப் பயன்படுத்தியமை ஆசிரியரின் சமய அறிவையும் சுருங்கக் கூறும் உத்தியையும் புலப்படுத்துகிறது.

பேச்சுமொழியிலும், உரைநடைவழக்கிலும் காணப்படும் 'கள்' என்னும் பன்மை ஈறு இவர் தம் கவிதை நடையில்காணப்படுகின்றது.

அடைத்தொடர், உவமைத் தொகைத் தொடர் குறிப்புவினைமுற்று ஆகியவை பெரும்பாலும் நீக்கல் உத்தியில் அமைந்துள்ளன.

விளித் தொடர்கள் சிறுசிறு தொடர்களாக அமைந்துள்ளன.

முடிக்கும் தொடர்கள் சந்தத்திற்கேற்ப மாறுகின்றன.

பழமொழித் தொடர்கள் கருத்து விளக்கத்திற்குப் பயன்பட்டுள்ளன.

கடினமான புணர்ச்சிகளாலும், வகையுளிகளாலும், இவர்தம் பாடல்கள் கடின நடையினைப் பெற்றுள்ளன.

பாட்டியல் இலக்கண நூல்கள் பிள்ளைத்தமிழ் கோவை நூல்களுக்குக் கூறும் யாப்பு, வழுவாமல் பின்பற்றப்பட்டுள்ளது.

## குறிப்புக்கள்

1. க. கைலாசபதி, இலக்கியமும் திறனாய்வும், ப. 94.
2. சாலை. இளந்திரையன், தமிழில் சிறுகதை, ப. 134.
3. N. Fyre Anatomy of Criticism மேற்கோள், மு. வரதராசன், இலக்கியத்திறன், பக். 237-238.

4. "His Whole Personality, Mind, Heart and Soul-is Mirrored in it"
   - Birjadish Prasad, A Background to the Study of English Literature, p. 213.
5. க. கைலாசசபதி, மு.நூல், ப. 96.
6. Linguistic study becomes literary only when it serves the study of literature, when it aims at investigating the aesthetic effects of language-in short, when it becomes stylistics'
   – -Rene Welleck and Austian Warren, Theory of Literature pp. 176-177
7. "A work of art is, first, a system of sounds, hence a selection from the sound - system of a given language Ibid., p. 176.
8. வியாசை. 15.
9. மேலது., 19.
10. குளத்தூர். 1.
11. அகிலாண்ட. பாயிரம், 5.
12. அகிலாண்ட. தால். 6.
13. சீகாழி. 21.
14. மேலது., 126.
15. காந்தி. தால். 7.
16. குளத்தூர். 297.
17. ஜெ. நீதிவாணன், நடையியல், ப. 39.
18. அகிலாண்ட. நீராடல் 7.
19. மேலது., 8.
20. முருகர். செங். 8.
21. குளத்தூர். 76.
22. சீகாழி. 135.
23. மேலது., 192
24. முருகர். தால். 9.
25. சீகாழி. 208
26. காந்தி. செங் 6.
27. அகிலாண்ட. செங் 6, 7, 8; பெருந்திரு. செங். 6, 7, 8; காந்தி. செங். 6, 7; திருவெண். செங். 6, 7, 8; முருகர். செங். 6, 7; அம்பல. செங். 7.
28. ச. வே. சுப்பிரமணியன், இளங்கோவின் இலக்கிய உத்திகள், ப. 190.
29. பெருந்திரு. முத்தம். 10,
30. மேலது., வாரானை. 5.

31. காந்தி. தால். 4.
32. ந. சுப்புரெட்டியார், கவிதையனுபவம், ப. 187
33. ஜெ. நீதிவாணன், மு.நூல், ப. 46
34. முருகர். காப்பு. 3.
35. திருவெண். காப்பு. 8.
36. மங்கள. செங் 9.
37. சீகாழி. 407
38. மேலது., 220
39. அகிலாண்ட. தால். 4
40. மேலது , முத்தம். 7.
41. காந்தி. வாரானை, 7.
42. சேக்கிழார். தால். 6,
43. நச்சினார்க்கினியர், தொல். எழுத்து. ப. 9
44. மங்கள. சப். 5.
45. சேக்கிழார். காப்பு 8.
46. சீகாழி. 226.
47. மேலது., 225.
48. சேக்கிழார். காப்பு. 1
49. முருகர். காப்பு. 2
50. அகிலாண்ட. காப்பு. 9.
51. மேலது., செங். 2.
52. காந்தி. பொன். 7.
53. ச. வே. சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப. 165.
54. பெருந்திரு. வாரானை. 8.
55. திருவெண். சப்பாணி. 1.
56. பெருந்திரு செங். 1.
57. முருகர். தால். 5.
58. அகிலாண்ட. பொன். 6.
59. குளத்தூர். 88.
60. ஜெ. நீதிவாணன், மு. நூல், ப. 58.
61. மேலது., ப. 57.
62. மங்கள. அம்மானை. 10.
63. காந்தி. வருகை. 10.
64. சீகாழி. 120.
65. மேலது., 152.
66. அகிலாண்ட. முத்தம். 7.
67. காந்தி. காப்பு. 10.
68. அகிலாண்ட. பொன். 1.
69. மேலது., சப். 10.
70. சீகாழி. 499

71. பாலூர் கண்ணப்ப முதலியார் (உ. ஆ.), பிள்ளைத்தமிழ் நூலாராய்ச்சி, சேக்கிழார் பிள்ளைத்தமிழ்' ப. 11.
72. மேலது., ப. 11.
73. ''மதிநதி தும்பை வாச விதழிக ரந்தை நாகம்
வனைசடை முன்கு லாவு புண்டரக் கீற்றினர்
வழுதிமு னந்து வாய நரிபல கொண்டு தாவும்
வலியய மென்று கூறி யங்குறத் தோற்றினர்
மகரம லம்பு நீரி லமரர்களஞ்சி வாடி
மறுகுற வந்த காரி கண்டமட் டேற்றினர்
மறையினொ டங்க மாறும் வலவர்க லங்கு றாதொர்
வடநிழ லின்பு றாவ மர்ந்துறத் தேற்றினர்
கொதிகொள் சுரந்தண் மேவ நிழல்விரி பந்த ரூடு
குளிர்புனல் கொண்டு சாலின் மொண்டெடுந்
தூற்றினர்
குலமலை நின்று தாழ நாறமலை வின்றி மேவு
கொடுமுடி தங்கு மேரு விண்டெடுத் தாற்றினர்
குவிகையு டன்க ணீர்கொ டுருகுவர் துன்ப மான
குவிதல்கொள் பஞ்சை வாரும் விஞ்சருட் காற்றினர்
குடபுல வந்தி மானு முடனிற நம்ப ரீறில்
குணமலி சம்பு நாதர் மென்கழற் போற்றுதும்
அதிகர சங்கண் மீறி யருமையி தென்று பேசு
மழுதையி கந்து பேசி டுங்குயிற் பேட்டினை
யனுதின மும்ப ராவி வழிபடு மன்ப ரான
வடியவர் கண்க ளார நின்றமெய்க் காட்சியை
யவிர்கதிர் குன்ற வீசு மணிகள்சு மந்த வாச
மலர்தரு கொம்பை யேட விழ்ந்துமிக் கூற்றெழு
மருநற வண்டி ராக மிடறுதி றந்து பாடி
யளிகளி ருந்து வாழ்சு கந்தநற் றூட்பொதி
வதியும லங்கன் மேவு மளகவ ரம்பை மாதர்
வனசமி ருந்த மாதர் கும்பிடத் தோற்றிய
மயிலைவ ளங்கு லாவு மணியைவி ளங்கு சோதி
வடிவைந றும்ப டீர குங்குமச் சேற்றளை
வனமுலை கொண்டு லாவு கொடியையி ருண்ட சோலை
மதுமடை விண்டு பாயு மம்புயப் பூச்செறி
மடுவைய லம்பி வாளை கமுகைய டர்ந்து பாய
மலிவள மொன்று காவை மங்கையைக் காக்கவே.''
74. புலவர். குழந்தை, தொடையதிகாரம், ப. 146.
75. குளத்தூர். 273.
76. மேலது., 276
77. யாப்பாருங்கலக் காரிகை, 8.

# 6. சமயக் கருத்துக்கள்

## 6.0 முன்னுரை

''இறைவனை அடைதற்கு உயிர்கள் கடைப்பிடித்தொழுகும் ஓர் அறவழியே சமயம் என்று கூறலாம்''[1] என்பர்.

சிந்து சமவெளி நாகரிகக் காலம் தொட்டுச் சைவ சமயம் போற்றப்பட்டுள்ளது இது பிற சமயங்களோடு போட்டியிட்டு, மறு மலர்ச்சியடைந்த காலம் பக்தி இயக்கக் காலம் எனக் குறிக்கப்படு கிறது. திருமுறை இலக்கியங்களும், பின்வந்த சித்தாந்த சாத்திர நூல்களும் சைவம் மீண்டும் இந்த மண்ணில் தழைக்க வழிவகுத்தன. 19–ஆம் நூற்றாண்டினரான மீனாட்சிசுந்தரனார் தம் படைப்புக் களில் எந்த அளவிற்குச் சமயக் கருத்துக்களைப் பயன்படுத்தியுள்ளார் என்பதை ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 6.1 சமய வாழ்வு

6.1.1 பிறப்பால் சைவ வேளாண் குலத்தைச் சார்ந்த மீனாட்சி சுந்தரனார், இயல்பாகச் சைவ சமய உணர்வு மிக்கவர். இளமைக் காலத்தில் திருவாவடுதுறை மடத்தைச் சார்ந்த வேலாயுத முனிவரிடம் சமய இலக்கியக் கல்வியும், பின்னர் ஸ்ரீ அம்பலவாண தேசிகரிடம் சமய சாத்திரக் கல்வியும் பெற்றார்.

6.1.2 தாம் சென்ற சிவத்தலங்களிலெல்லாம் அத்தல அன்பர் களின் வேண்டுகோளுக்கிணங்கித் தலபுராணங்களையும், பிள்ளைத் தமிழ் போன்ற பிற பிரபந்தங்களையும் எழுதினார். பொருளுக்காகப் பிற தெய்வங்களைப் பாடாத இயல்பினர் என்பது இவ்வாய்வின் முதல் இயலில் விளக்கப்பட்டுள்ளது. ''பிள்ளையவர்கள் தமக்கு சற்றுமுன் வாழ்ந்த குமரகுருபரரையும், கச்சியப்ப சிவாச்சாரியாரை யும் பின்பற்றிப் பிரபந்தங்களையும், தலபுராணங்களையும் எழுதித் தமிழையும் சைவத்தையும் வளர்த்தார். இவர் இருந்த மடத்துச் சூழ்நிலையும் இதற்கு ஒரு காரணமாய் அமைந்தது,''[2] என்பர்.

6.1.3 அக்காலத்தில் சைவ மடங்களில் சமயக் கல்வி மட்டுமே போதிக்கப்பட்டது திருவாவடுதுறை ஆதீனத் தலைமை வித்துவா னாக விளங்கிய மீனாட்சிசுந்தரனார் சமயக் கல்வியையே கற்பதும்,

கற்பிப்பதுமாகத் தம்வாழ்வை அமைத்துக்கொள்ள வேண்டிய சூழலில் இருந்தார். இவரது படைப்புக்களில் பெரும்பாலானவை சைவ சமயம் சார்ந்தவையே.

## 6.2 சைவம்

6.2.1 'சைவம்' என்பதை விளக்குவார் போல் திருமூலர்,

"சைவஞ் சிவனுடன் சம்பந்த மாவது"[3]

என்பார். "எல்லாப் பொருளையும் கடந்த நிலையிலும், எல்லாப் பொருள்களிலும் ஊடுருவியும் நிற்கும் பரம்பொருளையே 'சிவன்' எனக் கூறினாலும், அப்பரம்பொருள் நம்மோடு தொடர்பு கொள்ள எடுத்துக் கொண்டதிருக் கோலமும் அத்திருக் கோலத்தைக் குறிக்கும் திருநாமமும் இங்குப் பரம்பொருளைச் 'சிவன்' எனக் குறித்தற்குக் காரணமாகும். இத்திருக்கோலத்தின் வாயிலாகவும் இத்திருநாமத்தின் வாயிலாகவும் பரம்பொருளோடு தொடர்பு கொண்டு வாழ்தலே 'சைவம்' எனல் வேண்டும்,"[4] என்பர்.

சிவனையே முழுமுதலாகப் போற்றுவது சைவ சமயம். "வடமொழியாளர் சிவமெனுஞ் சொற்குக் காந்தி, மங்கலம், ஆனந்தம், அறவோர்உள்ளத்துறைவது, சராசரங்களின் தோற்ற ஒடுக்கத்துக்கு நிலைக்களனாய்க் கிடப்பது, இருளைப் போக்கி அருளைத் தருவது, முற்றறிவுடையது, தூயது, இன்பம் தருவது முதலிய பல பொருள் விரித்துள்ளனர்"[5] எனத் திரு. வி.க. குறிப்பிடுகின்றார்.

"சிவமெனுஞ் செம்பொருளைச் 'சாந்தம் சிவம் அத்வைதம்' என்று வேதாந்தம் வழுத்துகிறது,"[6] எனவும் அவர் கூறுகிறார்.

## 6.3 சைவ இலக்கியங்கள்

6.3.1 சிவபரத்துவக் கொள்கையினைத் திருமந்திரம், தேவாரம், திருவாசகம், முதலான பன்னிரு திருமுறை நூல்களிலும், மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கிலும், புராண இதிகாசங்கள் கூறும் கதைகளிலும் காணலாம்.

பக்தி இலக்கியங்கள் எனப்படும் தேவாரம், திருவாசகம் போன்றவை, அடியார்கள் அடைந்த பேரின்ப அனுபவ வெளியீடுகளாக அமைந்துள்ளன. அவை அக்காலத்தில் சமயப் பிரசார சாதனங்களாகவும் பயன்பட்டன.

6.3.2. மீனாட்சிசுந்தரனார் சமய உணர்வை வெளிப்படுத்தும் தன்னுணர்ச்சிப் பாடல்களைப் பாடவில்லை. கோவை, பிள்ளைத்

தமிழ், உலா, கலம்பகம், அந்தாதி போன்ற சிற்றிலக்கிய வடிவங் களை எடுத்துக் கொண்டு, அவற்றின் வாயிலாகவே தம் சமய உணர்வுகளையும், கருத்துக்களையும் வெளிப்படுத்துகிறார். எனவே இவரது சமய உணர்வை நேரடியாகப் புலப்படுத்தாமல் மேற்குறித்த சிற்றிலக்கிய வடிவங்கள் வாயிலாகவே உணர்த்தக் காண் கிறோம்.

## 6. 4 மீனாட்சிசுந்தரனார் படைப்புக்கள்

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட பிள்ளைத்தமிழ் நூல்களுள்,

| | |
|---|---|
| இறைவியைப் பற்றியன | —5 |
| முருகனைப் பற்றியது | —1 |
| சைவ சமயப் பெரியோர்களைப் பாடுபவை | —2 |

அவர் பாடிய எட்டுப் பிள்ளைத்தமிழ் நூல்களும் சமயச் சார்புடையவையே.

கோவை நூல்களில் சீகாழிக்கோவை, சீகாழி இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு சிற்றின்பத்தைப் பாடுவதன் மூலம் பேரின்பம் பாடும் நூலாக அமைந்துள்ளது.

### 6. 4. 1 சமயக் கருத்துக்கள்

மேற்கூறிய நூல்களில் அமைந்துள்ள சைவ சமயக் கருத்துக் களைப் பின்வருமாறு பகுக்கலாம்.

1. சைவ சித்தாந்தக் கருத்துக்கள்
2. புராண மரபுக் கதைகள்
3. அடியவர் இயல்பும், வரலாறுகளும்

#### 6. 4. 1. 1 சைவ சித்தாந்தக் கருத்துக்கள்

''சித்தாந்தம் என்பது முடிந்த முடிபு எனப் பொருள்படும். இறை, உயிர், தளை ஆகிய முப்பொருண்மையையும் கூறுவது சைவ சித்தாந்தமாகும்.''[7] என்பர்.

இம்மூன்று பொருண்மைகளும் சைவ இலக்கியங்களாலும், சித்தாந்த நூல்களாலும் தெளிவுறுத்தப்பட்டவை. இவற்றின் இயல்புகளை மீனாட்சிசுந்தரனார் ஆங்காங்கு தம் இலக்கியங்களில் குறித்துச் செல்கிறார்.

## 6. 4. 1. 1. 1 இறையியல்பு

இறை இயல்புகளாகச் சித்தாந்திகள் கூறுவன பல. அவற்றுள் இறைவனின் அநாதி நிலை, உரு, அரு, அருவுருவான தன்மைகள், அவன் ஆற்றும் தொழில், அவன் குணங்கள் ஆகியன மீனாட்சி சுந்தரனார் பாடல்களில் பரவலாகப் பேசப்படுகின்றன.

### 6. 4. 1. 1. 1. 1 அநாதியானவன்

இறைமை என்பது முதலும் ஈறும் இல்லாதது. உலகத்துப் பொருட்களின் தோற்றத்துக்கெல்லாம் தான் காரணமாகி இருப்பினும் தன்னளவில் ஆதியும் அந்தமும் இல்லாதவன் இறைவன்.

இக்கருத்தையே சிவஞானபோதம் முதற் சூத்திரம் உணர்த்துகிறது. ''தோற்றக் கேடுகளதுண்மை காட்சி முதலிய அளவைகளான் அறிய வாராமையிற் பிரபஞ்சம் நித்தப் பொருளேயாம்,''[8] என்பது சிவஞான போதச் சிற்றுரை.

''அந்தமும் ஆதியில்லான் அளப்பிலன்''[9]
என்பது சிவஞான சித்தியார்.

அனைத்திற்கும் மூல காரணமானவன் இறைவன். ஆனால் அவனுக்கு மூலமில்லை.

''சிவன் முதலே யன்றி முதலில்லை''[10]
எனத் திருக்களிற்றுப்படியார் குறிக்கிறது.

இக்கருத்துக்களையே மீனாட்சிசுந்தரனார்,
கடையு மிடையு முதலுமில்லான்''[11]
எனவும்,
''ஈறென்ற தாதியோ டில்லான்''[12]
எனவும்,
''தற்றாயொடு தந்தை யில்லான்''[13]
எனவும் பல இடங்களில் குறித்துச் செல்கிறார்.

### 6. 4. 1. 1. 1. 2 உருவ தத்துவம்

முழு முதலாகிய இறைவனின் உருவ தத்துவம் ஆச்சாரியர்களின் கருத்துக்கேற்ப மாறுபடுகிறது. உருவானவன், அருவானவன் என்றும் குறிக்கப் பெறுகிறான் இறைவன். தவிர, மூன்று வடிவினன், ஒன்பது வடிவினன், இருபத்தைந்து வடிவினன் என்ற கருத்துக்களும் காணப்படுகின்றன.

### 6. 4. 1. 1. 1. 2. 1 உரு, அரு, அருவுரு

'உருமேனி', 'அருமேனி', 'அருவுருவான திருமேனி' மூன்றுமே இறைவனுடைய வடிவங்கள் எனக் கருதப்படுகின்றன.

திருமந்திரத்திற்குச் சன்மார்க்க விளக்கம் எழுதிய சுத்தானந்த பாரதியார், இவ்வுருவ வழிபாட்டிற்கு அழகிய விளக்கம் தருகிறார்.

''இறைவன் குணங் குறியற்ற தூயன்; நிராமயன்; மாசற்றவன்' என்றால் மனிதச் சிறுமூளைக்கு விளங்காது. பலருக்கு உருவமொன்று எதிரில் இருந்தாலே தான் அன்பு நிலைக்கும்; மனம் அதில் ஈடுபடும். மனம் நிலைத்து, சித்தந் தெளிந்து, அந்தக் கரணங்கள் அடங்கி, உள்விழி திறந்த ஞானிகளே இறைவனை அகண்டாகார மோன வடிவாக, அருவாக, சிதம்பரமாக, பரம்பர மாக வழிபடல் இயலும். புறவியல் உணர்வில் மனக் குழப்பத்தில் உழலும் பலகோடி மாந்தர் மெய்வழிக் கடவுளையடைய முதற்படி யாக நின்றுதவுவது உருவத் தொழுகையே யாகும்'''[14] என்கிறார் அவர்.

ஆகமங்கள் கருத்துப்படி இறைவனுக்குரிய மூர்த்தம் சிவலிங்கமே. 'சிவன் பகுப்பின்றி எங்கும் வியாபித்திருப்பினும், சிவலிங்கத்தில் தயிரில் நெய்போல் விளங்கியும், மற்றை இடங்களில் பாலில் நெய் போல் விளங்காமலும் இருப்பதாகக் கூறுவர்.''[15]

இவ்வாறு இறைவனைப் பற்றிக் கூறப்படும் உருவ, அருவக் கொள்கையினை ஏற்றுக் கொண்ட மீனாட்சிசுந்தரனார்,

''அருவர் உருவர் அருவுருவாளர்''[16]

எனக் குறித்துச் செல்கிறார்.

### 6 4. 1. 1. 1. 2. 2 மூன்று வடிவங்கள்

உருவத் திருமேனியாகிய இறைவனுக்குப் பல வடிவங்கள் காட்டப்படுகின்றன. சிவஞான சித்தியார் இறைவனின் மூன்று வடிவங்களைக் குறிப்பிடுகின்றது. அவை : போக வடிவம், யோக வடிவம், வேக வடிவம் என்பன.[17]

### 6 4.1.1.1.2.2.1 போக வடிவம்

உயிர்களுக்கு இன்பம் நல்குவதற்காக உமையொரு பாகனாக வீற்றிருக்கும் அர்த்தநாரீஸ்வரர் திருக்கோலமே போக வடிவமாகும். அம்மையோடு இணைந்ததால் அருள் உணர்வோடு கூடிய சிவத்தைப் போக வடிவில் காண்கிறோம்.

"இமய மடந்தை புணர்ந்தும் விகாரமிலா முதல்வன்"[18] என அத்தோற்றத்தின் விகாரமற்ற தன்மை சீகாழிக்கோவையில் பேசப்படுகின்றது.

"செய்ய திருமேனியொரு பாதியமர் பைங்கிள்ளை"[19]

எனவும்,

"அத்திவனத்தமர் அத்தரிடத்தவள்"[20]

எனவும்,

"குடநடு வமர்பவர் இடமமர் மடமயில்"[21]

எனவும் பிள்ளைத்தமிழ் நூல்களில் போக வடிவம் போற்றப்படுகின்றது.

### 6. 4. 1. 1. 1. 2. 2. 2 யோக வடிவம்

ஆன்மாக்களுக்கு உய்தி தருவதற்காக இறைவன் ஞானாசிரியனாய் எழுந்தருளுவதே யோக வடிவம். குருந்த மரத்தடியில் மாணிக்க வாசகருக்கு முக்தி கொடுத்த இறைவனின் வடிவம் யோக வடிவமாகும். தட்சிணாமூர்த்தியின் திருக்கோலத்தோடு சனகர் முதலிய நால்வர்க்கும் வேதத்தின் பொருள் உரைக்கக் கல்லால மரத்தடியில் இறைவன் எழுந்தருளியமையும் யோக வடிவமேயாகும். இவ்வடிவச் சிறப்பை,

"பொருவரு நீர்மை யிவரொடு நால்வர் புடைவளைப்ப
மருவரு மாலடிமேவு படாத வளம்படுவெங்
குருவரு யோகி..."[22]

எனவும்,

"மறையினொ டங்கமாறும் வலவர்கலங் குறாதொர்
வடநிழலின்பு றாவமர்ந்துறத் தேற்றினர்"[23]

எனவும்,

"பிறங்கு கல்லாலடி யமர்ந்தருள்
புரிந்தவெண் பிறைமுடிப் பெருமான்"[24]

எனவும் பிற இடங்களிலும் பேசப்படுகின்றது.

### 6. 4. 1. 1. 1. 2. 2. 3 வேக வடிவம்

தீமையை அழிப்பதற்காக இறைவன் எடுக்கின்ற வடிவமே வேக வடிவம் எனப்படுகின்றது. இறைவன் திரிபுரத்தை எரித்தற்கு எடுத்த வடிவம் வேக வடிவம் எனலாம். திரிபுராந்தகன் என்ற நிலையில் பல இடங்களில் மீனாட்சிசுந்தரனார் இறைவனைப் புகழ்கிறார்.[25]

### 6. 4. 1. 1. 1. 2. 2. 3 ஒன்பது வடிவம்

இறைவனின் ஒன்பான் வடிவங்களைச் சிவஞானசித்தியார்,

''சிவஞ்சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தருள் உருத்தி ரன்தான் மாலயன் ஒன்றின் ஒன்றாய்ப்
பவந்தரும் அருவம் நாலிங் குருவநால் உபயம் ஒன்றா
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்''[26]

எனக் குறிக்கிறது.

ஈண்டு அருவத் திருமேனி நான்கும், உருவத் திருமேனி நான்கும், அருவுருவத் திருமேனி ஒன்றும் ஆக ஒன்பது வடிவங்கள் குறிப்பிடப்படுகின்றன. எனினும் இவற்றுள் சக்தி, விந்து என்பவை சக்தி பேதங்களாகும். இதனை, ''இவ்வொன்பது பேதத்துட் சக்தி, விந்துவென்னும் இரண்டும் சக்தி பேதமாயினும், ஏனை மனோன்மணி முதலிய பேதம் போலன்றி ஒன்றினொன்றாகப் பவந்தரு முறையிற் காரணமாய் இடைநிற்றல் பற்றிச் சிவபேதத்துடன் வைத்தெண்ணி நவந்தரு பேதமெனப்பட்டன,''[27] எனச் சிவஞானசுவாமிகள் அருளிச் செய்த பொழிப்புரை குறிப்பிடுகின்றது. எனவே ஓரேழ்பேதம் இறைவனுக்குரியவை என்பது பெறப்படுகின்றது.

அடுத்த பாடலில் சிவஞானசித்தியார் இவ்வோரேழ் வடிவத் திற்கும் இயைய, இறைவியும் ஏழு வடிவங்கள் கொண்டவள் எனக் குறிக்கிறது.

''சக்தியாய் விந்துசக்தி யாய்மனோன் மனிதாளுகி (பாடலில் உள்ளபடி)
ஒத்துறு மகேசை யாகி உமைதிரு வாணியாகி
வைத்துறுஞ் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி ஒருத்தியாகும்
எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்''[28]

என்பது சிவஞானசித்தியார் பாடல்.

இக்கருத்துக்களை மனத்தில் நன்கு தெளிவுறக் கொண்ட மீனாட்சிசுந்தரனார் தம் பாடல்களில் சிவன், சக்தி இருவரின் வடிவங் களையும் குறிப்பிடுகின்றார்.

''ஒன்பான் உருவ முளனா கியுமுருவம் ஒன்றுமிலான்''[29]

எனவும்,

''அருவ முருவ மருவுருவ மமையு மொருநான் கொருநான்கொன்
றாகஒன்பான் திருமேனி அடிகள்''[30]

எனவும் இறைவனின் நவத்தரு பேதத்தைப் போற்றுகிறார். பிறிதோரிடத்து,

''மதிசக்தி யாய்விந்து வாய்மனோன் மணியாய்
மகேசையா யுமையாய்த்திரு
மகளாய்நல் வாணியா யின்னும்வே
றாயிறை வருக்கியைய நின்றுயிர்க்குப்
பொதிவுற்ற மலவிரு ளொளித்தின்ப
மருள் புனிதை''[31]

ர கிறார். ஈண்டு ''எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் ) யள்'' என மேற்கூறிய சித்தியார் கருத்து அப்படியே பேசப் -டுள்ளது. இதே கருத்து,

''சக்திமுத லொளிரும் வாணி யீறாக
வோரேழ் பேதமாய்நிற்கு முமையே''[32]

என்வும் பேசப்படுகிறது.

## 4.1.1.1.2.4 இருபத்தைந்து வடிவம்

இருபத்தைந்து தத்துவங்களைக் கடந்த இறைவன், இருபத் த ந்து வடிவங்கள் உடையவன் என்ற கருத்தும் இவரால் றி க்கப்படுகிறது.

ஐ யைந்தி னப்பாலானை யைந்துமெய்ச் சாமியெண்ணெண்
கலையானை யாறினொ டாறுக் கதீதன்''[33]

ன இறைவனைக் குறிக்கிறார்.

இப்பாடலில் இறைவன் இருபத்தைந்து தத்துவங்களைக் _ந்தவன் என்பதும், 'ஐயைந்துமெய்ச்சாமி' என இருபத்தைந்து டி வங்கள் உடையவன் என்பதும், அறுபத்தினான்கு கலைகள் டையவன் என்பதும், முப்பத்தாறு தத்துவத்திற்குத் தலைவன் ன் பதும் பெறப்படுகின்றன.

இங்கு இருபத்தைந்து மெய் என்பது ஆகமங்கள் கூறிய ருபத்தைந்து மூர்த்தங்களைக் குறிப்பதாகும். முப்பத்தாறு தத்து ங் களும் இறை இயல்பைக் காட்டுவனவே.

## 4.1.1.1.2.5 ஐந்தொழில்

உலக உயிர்கட்கு அறிவிற்கு அறிவாய் நிற்கும் இறைவன் ந்து தொழில்கள் நடத்துபவன் என்பதை,

''அலகிலா உயிர்ப்பு லன்கட்கு அறிவினை ஆக்கிஐந்து
நலமிகு தொழில்க ளோடும் நாடகம் நடிப்பன் நாதன்''[34]

ன் கிறது சிவஞானசித்தியார்.

''மன்னுயிர்க் கிரங்கி வகுத்த வைந்தொழில்''[35]

என்கிறது சிவப்பிரகாசம்.

உலக இயக்கத்திற்காக ஐந்து முகங்களைக் கொண்டும் இறைவன் விளங்குகிறான். இக்கருத்தினையே மீனாட்சிசுந்தரனார்,

''ஓங்கு ஐமுகவர்''[36]

எனக் குறிப்பிடுகின்றார். ஐம்முகங்களாவன : ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம் என்பன. இவை முறையே அனைத்துமாளுதல், காத்தல், அழித்தல், விளக்கல், தோற்றுவித்தல் என்னும் தொழிலன.[37]

இவ்வைந்து தொழிலையும் நடத்துவதற்காகவே இறைவன் பொன்னம்பலத்தில் நடமிடுகிறான்[38] எனவும் மீனாட்சிசுந்தரனார் குறிப்பிடுகின்றார்.

பிறிதோரிடத்து, இவ்வைந்து தொழில்களையும் இறைவனோடிருந்து இறைவியும் ஆற்றுகிறாள் என்கிறார்.

''ஆலங் கருங்களத் திறைவருட னீங்கா
தமர்ந்துபரை யாதியிச்சை
யறிவுதொழி லாகியு யிரைம்பாச மற்றுய்ய
வைந்தொழில் நடாத்து மயிலே''[39]

என இறைவியை அழைக்கிறார். இங்கு உயிர்கள் மலங்களற்று உய்தியடைய இறைவனோடு கூடிப் பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி ஞானசக்தி, கிரியாசக்தி என்னும் ஐந்து வடிவங்களோடு, ஐந்தொழில் நடத்துபவள் இறைவி எனப் போற்றுகின்றார்.

ஓரேழ் பேதமாய் இறைவனுக்கியைய நின்றமை போல, தொழிலிலும் இறைவனுக்கேற்பத் தானும் ஐந்து வடிவங் கொண்டு ஐந்தொழில் நடத்துபவள் இறைவி என்பது, சக்தி சிவம் என்ற இரண்டும் ஒன்றில் ஒன்றாய் விளங்கும் தன்மையை உணர்த்தி நிற்கின்றது.

இவ்வாறு இறைவனோடு இறைவி நடாத்தும் ஐந்தொழில் இவர் பாடல்களில் பல இடங்களில் குறிக்கப்படுகின்றது.[40]

### 6. 4. 1. 1. 1. 2. 6 முக்குணம்

இறைவனின் தொழிலை மூன்று என்பாரும் உளர்,

''ஆக்கி எவையும் அளித்தா சுடன் அடங்கப்
போக்கும் அவன் போகாப் புகல்''[41]

எனத் திருவருட்பயன் முத்தொழிலைக் குறிக்கின்றது. இம்முத் தொழில்கட்கேற்ப முக்குணம் கொண்டவன் இறைவன்.

''மூன்று குணங்களாவன சத்துவகுணம், ரஜோகுணம், தமோ குணம் என்பன. படைக்கும் பிரமனாக இருக்கும்போது ரஜோ குணத்தையும், காக்கும் திருமாலாக இருக்கும் போது சத்துவ குணத்தையும், அழிக்கும் உருத்திரனாக இருக்கும் போது தமோ குணத்தையும் மேற்கொள்கிறார்''[42] என இம்முக் குணங்கட்கும் விளக்கம் கூறப்படுகிறது.

இம்முக்குணங்களை மீனாட்சிசுந்தரனார் பெருந்திரு. வில் அம்மானைக் காய்களுக்கு உவமையாக்குகிறார்.

'சத்துவ குணம் திரண்டது போல நித்தில அம்மானைக் காய்கள் அமைந்துள; அவற்றை இறைவி தன் கையில் கொள்ளும் பொழுது அவள் கையின் சிவந்த நிறத்தால் சிவப்பேறி ரஜோ குண மாகியும், குழல் ஒளிவிரவிக் கார் நிறம் பெற்று தாமத குணத்தையும் ஒத்து விளங்குகின்றன'[43] என்கிறார்.

இங்கு இறைவனின் முக்குணங்களின் நிறபேதமும் ஆசிரியரின் கற்பனைக்குத் துணை செய்துள்ளன.

### 6. 4. 1. 1. 2 உயிரியல்பு

6. 4. 1. 1. 2. 1 சீவன் அல்லது உயிர் என்பது பசு எனப்படுகிறது. உடலையும், மனத்தையும் இயக்குகின்ற கருத்தாவே உயிர் உயிர்கள் பாசத் தொடர்போடு இருக்கும் பொழுது பசு எனப்படுகின்றன.

6. 4. 1. 1. 2. 2 உயிர் தனது பயணத்தில், இறைவனைச் சென்று சேருமுன் அடைகின்ற நிலை வேறுபாடுகள் அவத்தைகள் எனப்படும். இவை ஐந்து எனச் சிவஞானபோதம் கூறுகின்றது.[44] கனவு, நனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் எஎன்பன ஐந்து அவத்தை களாகும்.

கேவலம், சகலம், சுத்தம் என்பன ஆன்மா அடையும் காரண அவத்தைகள் எனச் சிவஞானசித்தியார் குறிப்பிடுகின்றது.[45]

கேவலம் என்பது பிறப்பொடு கூடுதற்கு முன்னுள்ள நிலை; சகலம் பிறப்பொடு கூடிய நிலை; சுத்தம் பிறப்பை வென்ற நிலை.

இவற்றுள் முதல்இரு நிலைகளும் மீனாட்சிசுந்தரனார் பாடல் களில் குறிப்பிடப்படுகின்றன.

''ஆரு நினைப்பாகிய திறப்பும் அடரும் மறப்பாகிய அடைப்பும்
ஆயதொழிலை நாடோறு மாற்றுஞ் சகல கேவலம்''[46]

என்கிறார். இந்த, பிறப்போடு கலந்த சகலநிலையும், பிறப்பிற்கு முந்திய கேவல நிலையும் குறிப்பிடப்படுகின்றன.

பிறிதோரிடத்துச் சகல, கேவல நிலைகளைத் தாமரை மலரோடு இணைத்து,

''... சகலமொடு கேவலம்ஒழி நல்லவர்போற்
பண்பார் மலர்தல் குவிதலில் லாதபொற் பங்கயம்''[47]

என்கிறார்.

6.4.1.1.2.3 ஆன்மாவை மூவகைப் படுத்துவர். அவை சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என்பன. சகலர் என்போர் மும்மலங்களையும் உடையவர்; பிரளயாகலர் ஆணவம் கன்மம் இரண்டும் உடையோர்; விஞ்ஞானகலர் ஆணவம் மட்டும் உடையவர்கள்; பிறவற்றை வென்றவர்கள்.

இம்மூவகையினரையும் 'கலர்' என்ற சொல்லால் மீனாட்சி சுந்தரனார் குறிப்படுகின்றார்.

''கலர் மல வாய்ப்படு பேயர்''[48]

எனவும்,

'' கலராகினார் அணுகாக் காழி ''[49]

எனவும்,

'' கலர்வருத்தங் கருதாக் காழிநாதர்[50]

எனவும் இவர் குறிப்பது ஆன்மாக்களின் இம்மூவகையினரையுமே ஆகும்.

6.4.1.1.2.4 இம்மூவகை ஆன்மாக்களிடத்தும் இறைவன் நிலைபெறும் தன்மையை,

''மேவிய கேவல நிலைமலர் பைந்தரு
விட்டக லாத்தழலும்
வளைதரு சகல நிலைக்கட் கற்பொலி
வன்றழ லுஞ்சுத்தம்
வாய்ந்த நிலைக்க ணயத்தழ
லும்பொர மன்னி வயங்கிடுவோய்''[51]

என்கிறார்.

இங்கு உயிர்களில் இறைவன் நிலைக்கும் தன்மையைக், கேவல நிலையில் மரத்தில் பொதிந்த தழல் போலவும், சகல நிலையில்

கல்லில் பொதிந்த தழல் போலவும், சுத்த நிலையில் இரும்பில் பொதிந்த தழல் போலவும் நிலைபெறுபவன் என உவமை வழி யாகப் புலப்படுத்துகிறார்.

இரும்பில் பொதிந்த தழல் ஏனையவற்றைவிட நீண்ட நேரம் நிலைக்கக் கூடியது என்பது சுத்த நிலையின் சிறப்பை உணர்த்துவ தாக அமைகிறது.

### 6. 4. 1. 1. 3 பாசவியல்பு

6. 4. 1. 1. 3. 1 ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களே பாசம் எனப்படும். இது உயிர்களின் இயல்பாய் அமைவது.

ஆணவம் என்பது உயிர்களுக்கு இறைவனைக் காட்டாது மறைக்கும் இயல்பினது.

கன்மம் என்பது ஒருவன் செய்யும் நல்வினை தீவினைகள் ஆகும்.

மாயை என்பது நல்வினை, தீவினைக்குக் கருவியாய் அமையும் உடலும் உலகமுமாம்.

இவற்றுள் ஆணவம் என்பது உயிர்களோடு அநாதியாய் அமைவது. இதனைச் சகலமலம் என்றும் கூறுவர்.

ஆணவத்தைக் குறிக்குமிடத்து மீனாட்சிசுந்தரனார்,

''அடியேன் மூலமலத்தை விளர்க்கக்
காணும் குழலமுதே''[52]

என்கிறார். 'மூலமலம்' என்பது ஆணவத்தையும், அதனை விளர்க்கச் செய்யும் குழல் என்பது, ஆனவத்தின் கருமை நிறத்தையும் குறிப்பன,

தவிர,

''மயலார் எனக்கு மலமாயை கன்மம்
மடித்தருளும் இயலார்''[53]

எனவும்,

''பொல்லா மலம்''[54]

எனவும் பல இடங்களில் இம்மலங்கள் பேசப்படுகின்றன.

6. 4. 1. 1. 3. 2 இம்மும்மலங்கள் அநாதியாகிய இயல்பை,

''நெல்லிற் குமியும் நிகழ்செம்பினிற் களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே — வல்லி
மலகன்மம் அன்றுளவாம்''[55]

என உவமையோடு விளக்குவர் சிவஞான முனிவர்.

வனைக் காணலாம்.

"நென்முளை யாமென் மலங்கெடுத்தாள் சண்பை நித்தன்"[56] எனவும்

"செய்யுறு மாசான மூலமலம்"[57]

எனவும் சாத்திரங்கள் கூறும் உவமைகளைக்கூட இடம் மாறாமல் எடுத்தாளும் தன்மை நோக்கத்தக்கது.

### 6.4.1.1.4 ஆன்மா, இறையருளை அடையும் முறைகள்

மும்மலங்களால் கட்டுண்ட ஆன்மாக்கள் இறைவனது அருளைப் பெறுகின்ற வளர்ச்சி நிலைகளும் சித்தாந்த சாத்திரங்களில் கூறப்படுகின்றன. அவை மலபரிபாகம், இருவினை ஒப்பு, சக்திநிபாதம் என்பன.

6.4.1.1.4.1 மலபரிபாகம் என்பது மூலமாகிய ஆணவம் தன் முனைப்பு இழக்கின்ற நிலையாகும்.

6.4.1.1.4.2 இருவினை ஒப்பு என்பது ஆன்மா நல்வினை, தீவினைப் பயன்களை ஒப்ப நோக்கும் சமதரிசன நிலையாகும்.

6.4.1.1.4.3 சக்திநிபாதம் என்பது ஆணவம் தன்வலி ஒடுங்க, ஆன்மா 'எல்லாம் சிவன் செயல்' என ஒடுங்கிப் போதல்.

சக்திநிபாதம் என்பதை மலபரிபாகம், இருவினை ஒப்பு என்ற இரு நிலைகளும் அடைந்த நிலை என்றும் கூறுவர்.

இவற்றை உளம்கொண்ட மீனாட்சிசுந்தரனார்,

"மாயா மலம்கரும மலம்இவைக்
கேதுவாம் மலம்வே ரொடும் கழன்று
வலியதன் சக்திகெடு மாறுதிரு அருள்பதிய
வந்துபதி செம்மலர்த் தாள்",[58]

எனப்பாடுகின்றார்.

இங்கு மாயா மலமும், கரும மலமும் வேரோடும் கழன்ற நிலை என்பது மலபரிபாகம், இருவினை ஒப்பு அடைந்த நிலையாகும். மலத்தின் வலிமை கெடத் திருவருள் பதிதல் என்பது சக்திநிபாதத்தைக் குறிக்கும்.

சக்திநிபாதம் பெற்ற ஆன்மாக்களை,

"பங்கமிலாச் சமயாதி அடைந்து
பராம்சிவ சின்னமுறும்
பாகமருஉம் பக்குவர்"[59]

எனக் குறிக்கிறார். இங்கு 'பாகமருஉம் பக்குவர்' என்பது மலபரிபாக நிலை அடைந்து சக்திநிபாதம் அருளப் பெற்றவர்களைக் குறிக்கும். 'சிவசின்னம்' என்பது ஐந்தெழுத்து, திருநீறு, உருத்திராக்கம் என்பன.

பிறிதோரிடத்து,

''ஒருமூ வகையா யெண்ணிலவா
யுணர்த்த வுணர்சிற் றறிவினவா
யுண்மை யினவாய்ச் சதசத்தா
யுறுகண் ணியல்பா யுழல்பசுக்க
ளருமா தவசன் மார்க்கநெறி
யடைந்த னாதி யாயளவி
லாற்ற லுடைத்தாய்ச் செம்புறுமா
சானமூல மலநீங்கி
யுருவோடருவங் குணங்குறியற்
றொளியாய் நிறைந்த பதியையுணர்
வுணர்வா னுணரும் பொருளொழியா
தொழிந்து கதிர்மீன் போற் கலந்து
திருவா ரின்ப முறவருள்வாய்''[60]

என்று பசுக்களின் இயல்பு, மலத்தின் இயல்பு, இறைவன் இயல்பு மூன்றையும் ஒரே பாடலில் கூறுகிறார். இங்கு சிற்றறிவினவாகிய பசுக்கள் செம்புறு களிம்பாம் மூலமலத்தை நீக்கி, இறைவனோடு கதிரில் மீன்போல் கலக்கின்ற சிவானுபவ நிலை விளக்கம் பெறுகிறது.

### 6.4.1.1.5 இறைவன் தானாக வந்தருளும் தன்மை

இறைவன் உயிர்களை தன்னிடத்து இணைத்துக் கொள்ளும் பாங்கினைச் சித்தியார், 'வேடுவர் குலத்தில் வளர்ந்த தன் மகனை, மன்னவன் இனம் கண்டு கொண்டு தானே அழைத்துக் கொள்ளுதல் போல மலம் அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்'[61] என உவமையோடு விளக்குகின்றது.

இறைவன் தானே இரங்கி வந்து அருளும் நெறியினை மீனாட்சிசுந்தரனாரும் பல இடங்களில் குறித்துச் செல்கிறார்.

'' வாரார் ஊசல் வடமலைப்ப
மாறாதேறி உடனலைந்தவ்
வுடநாண் அறக்கீழ் விழவானை

போரார் பஞ்சப் புலக்கயிறு
பொருக்கென் றறத்தஞ் செயல்யாவும்
போக்கிக் கிடக்கும் பசுக்கள் தமை
புகன்று தாங்கும் பூங்கொடி "[62]

என இறையருள் உயிர்களைத் தாங்கும் இயல்பினை உவமை வழி விளக்குகிறார்.

ஊஞ்சல் கயிறு அறுந்துவிடக் கீழே விழுபவனை உடனே நிலம் தாங்கிக் கொள்ளும். அதுபோன்று பாசத் தொடக்கினை அறுத்துக் கிடக்கும் பசுக்கள் தம்மை இறைவன் தானே வந்து தாங்கிக் கொள்வான் என்கிறார்.

'மலமாதிகள் தவிர்த்துத் தனித்து நிற்கும் ஆன்மாவைத் தன்னோடிணைத்துப் பேரின்பம் தருபவன்'[63] எனவும் இதே கருத்துப் பிறிதோரிடத்தும் பேசப்படுகிறது.

### 6.4.1.1.6 சிவ தீக்கை

மூவகை ஆன்மாக்களுக்கும் இறைவன் அருள் செய்யும் முறையே தீக்கை எனப்படுகிறது.

"...........................................................'
திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்
பாவனையால் மிகுநூலால் யோகப் பண்பால்
பரவிவரும் அவுத்திரியாற் பாசநாசம்
மேவ அருளுதவும் ...[64]

எனத் தீக்கை முறைகளைச் சிவப்பிரகாசம் கூறுகிறது.

இத்தீக்கை சமய தீக்கை, விசேட தீக்கை, நிருவாண தீக்கை எனப்படும்.

6.4.1.1.6.1 சமய தீக்கை என்பது ஞானாசிரியன், மாணாக்கனைச் சமய ஒழுக்கத்திற்கு உரியன் ஆக்குதல்.

6.4.1.1.6.2 விசேட தீக்கை என்பது சமய தீக்கை அடைந்தவனை இறைவனின் மகனாகுமாறு செய்து, சிவபூஜை, யோக நெறி, சிவாகமங்களை ஓதுதல் ஆகியவற்றுக்கு உரியனாக்குதல்.

6.4.1.1.6.3 நிருவாண தீக்கை என்பது அவனது இருவினைகளையும் போக்கிச் சிவபெருமானின் திருவருளில் ஒடுங்கச் செய்தல்.

இம்மூன்று தீக்கை முறைகளையும் மீனாட்சிசுந்தரனார் கூறும் முறை நோக்குதற்குரியது.

''சமைய விசேட நிருவாண மென்றுநஞ் சண்பைப்பிரா
னமைய வுரைத்த துணர்ந்தாய்கொ னீதனி யாதவதே
சமையநி னங்கை தொடலே விசேடந் தரித்தகலை
யமைய நெகிழ்த்திட லேநிரு வாணமெய் யாமிதுவே''

எனுமிடத்து இம்மூன்று தீக்கைகளையும் சிற்றின்பத்தோடு இணைத்து, அச்சொற்கள் வேறு பொருள் படுமாற்றையும் கூறிக் கிறார் (காண்க: 4.7.3.5).

## 6.4.1.1.7 சாதனம்

இறைவனை அடைய விரும்பும் ஆன்மாக்கள் தங்கள் நிலைக் கேற்பப் பலவழிகளிலும் முயற்சி செய்கின்றன. இம்முயற்சி வழி களே சாதனம் எனப்படுகிறது.

6.4.1.1.7.1 சாதனத்தின் படிநிலைகளாகக் கூறப்படுவன சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன.

''சரியை என்பது சரீரத்தால் இறைவனுக்குச் செய்யும் தொண்டு. திருக்கோயில் திருப்பணி, சிவமூர்த்தங்களை வழிபடல், அடியாரைப் பூசித்தல் என்பன சரியையின் பாற்படும்.

கிரியை என்பது அகத்தாலும், புறத்தாலும் இறைவனுக்குச் செய்கின்ற வழிபாடாகும்.

யோகம் என்பது தியான சமாதிகளால் ஆன அகத் தொழில் ஒன்றினால் இறைவனது அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு.

ஞானம் என்பது சரீரத் தொழில், மனத்தொழில் இரண்டையும் விடுத்துக், கேட்டல், சிந்தித்தல் ஆகிய அறிவு நெறியில் இறைவனை வழிபடல்,''[6], என விளக்குவர். மீனாட்சிசுந்தரனார்.

''புகழ் சரியை கிரியை அனுட்டித்து
வருகின்ற புண்ணியப் பேற்றினார்''[68]

என இருநெறிகளையும்

''இகழ்வில் சிவ யோகசா தனம்மரீஇ
அம்முறை இயங்குதிற லாளர்''[69]

என ஒரு நெறியையும் போற்றுகின்றார்.

இச்சாதனங்களால் இறையடி அடைந்த அடியவர்தம் வரலாற்றையே பெரியபுராணம் விரித்துரைக்கின்றது என்பதை,

''இவர்சரி யையர் இவர்கிரி யையர் யோகத்
தினர் இவர் இவர்ஞான
இயல்பினர் இவர்...
அவரவர் செயல்முதல் அருளிய வலவ''

எனக் கூறிச் சேக்கிழாரைப் பாராட்டுகின்றார்.[70]

## 6. 4 1. 1. 7. 2 இதயத் தாமரை

சாதனங்களில் மற்றொன்று இதயத்தையே தாமரை மலராக்கி அர்ச்சித்தல். இதயத் தாமரையின் விளக்கத்தைச் சிவஞானசித்தியார் தருகிறது.

''உந்தியில் அமைந்த பிருதிவி தத்துவம் கிழங்காகவும், ஏனைய இருபத்திமூன்று தத்துவங்களும் அவ்வுந்தியினின்று தோன்றி எட்டுவிரல் அளவினதாய நாளவடிவினதாகவும், வித்தியா தத்துவம் ஏழும், சுத்த வித்தையும் ஆகிய எட்டுத்தத்துவங்களும் எட்டு இதழ் வடிவாகவும், சிதைவுறாத அவ்வெட்டு இதழ்களும் அக்கரங்களை முறையே உடையதாகவும், ஈசுவரம், சதாசிவம் என்னும் இரண்டு தத்துவமும் கேசரவடிவமாகவும், சக்தி தத்துவம் பொகுட்டில் காணப்படும் ஐம்பத்தோரு பீசவடிவமாகவும், நாட்டப்படும் இதயக் கமலம் இறைவன் அமர்தற்குரிய ஆசனமாம்,''[71] என்பது இதயக் கமலத்திற்குச் சிவஞானசித்தியார் தரும் விளக்கம்,

இதனை,

''நடு நிலமுன் னிருபத்து
நான்கு நாளம் வித்தையெட்டு
நறிய விதழ் கணாலெட்டு
நாலெட் டாய கேசரங்கள்
நீடு மீசர் சதாசிவரே
நிகழும் சக்தி கேசரத்துள்
நிலவும் பொகுட்டு வடிவுசிவ
நிலைய வனைய பொகுட்டகத்துட்
கூடு மைம்பத தொருபீசங்
குலாய விதய பங்கயத்தில்
குறிக்கு நந்தா ணிலையென்று
கொண்டா டெங்கட்கு அருள்வாய்''[72]

எனும் பாடலில் அப்படியே அமைத்துள்ளமை நோக்கற்குரியது.

இங்கு சிவஞானசித்தியார் இதயத்தை எவ்வாறு இறைவன் வீற்றிருக்கும் தாமரையாக உருவகம் செய்தாரோ, அதே கருத்தும் அதே உருவகமும் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது

6. 4. 1. 1. 8 இவ்வாறு மீனாட்சிசுந்தரனார் தம் பாடல்களில் ஏற்ற இடங்களில் சித்தாந்தக் கருத்துக்கள் பலவற்றைக் கையாண்டுள்ளார். பதியாகிய இறைவனின் அநாதித்தன்மையும், வடிவ தத்துவங்களும், தொழில், குணம் போன்றவையும் பேசப்படுகின்றன. பசு அடைகின்ற அவத்தை நிலைகளும், பசுக்களின் சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர்என்ற வகைகளும், இவ்வொன்மாக்களிடம் இறைவன் நிலைபெறும் தன்மையும் குறிப்பிடப்படுகின்றன.

ஆணவம், கன்மம், மாயை என்னும் பாசவியல்பும், இறைவன் அருள் செய்யும் முறையும், ஆன்மா இறையருளை அடைகின்ற பேற்றுநிலைகளும் பேசப்பட்டுள்ளன.

சமய உண்மைகளுக்கு மாறுபடாமல் கருத்துக்களைக் கூறுவதோடு அமையாமல், சமயவாதிகள் பயன்படுத்திய செம்பிற்களிம்பு போல, நெல்லிற்கு உமிபோல எனபன போன்ற உவமைகளையும், இதயத் தாமரைபோன்ற உருவக விளக்கங்களையும், பயன்படுத்தியுள்ளார்.

6. 4. 1. 1. 9 புறச் சமயங்கள்

சமயவாதிகள் இன்பம் எனக் கருதுவது பல நிலைகளை. அவற்றைச் சிவஞானசித்தியாரின் பரபக்கம் விளக்கிக்கூறும்.

சேக்கிழார் பிள்ளைத்தமிழில் ஒவ்வொருவரும் எவ்வெவற்றை இன்பம் எனக் கூறுவர் என விரிந்துரைக்கின்றார் ஆசிரியர்,

அரிவையர் புணர்ப்பே இன்பம் என்னும் உலகாயதரும், ஐந்து கந்தம் கெடுதலே இன்பம் என்னும் பௌத்தருள் சௌத்ராந்திகரும், குணம் மூன்றும் ஒழித்தல் இன்பம் என்னும் நிகண்டவாதியரும், இருவினைக்கேடு இன்பம்என்னும்பிரபாகரரும்,மலநாசம் இன்பம் என்னும் பேதவாதிகளும்,விக்கிரகநித்தம் இன்பம் என்னும் சிவசமயவாதிகளும் ஞானமே இன்பம் என்னும் மாயாவாதிகளும், உயிர் கெடுதல்இன்பம் என்னும் பாற்கரியரும், பகுதிமேற்கெடுதல் இன்பம் என்னும் பாடாணவாதிகளும், சித்தி இன்பம் என்னும் சங்கிராந்த வாதிகளும் இப் பாடலில் விரித்துரைக்கப்படுகின்றனர்

இக்கருத்து, சிவப்பிரகாசத்தில் முக்தி பேதங்களதியல்பு எனக் கூறப்பட்ட பாடலை அடி ஒற்றி எழுதப்பட்டதாகும்.[74]

## 6. 4. 1. 2 புராண மரபுக் கதைகள்

6.4. 1. 2. 1 ''புராணங்கள் நிலையான உண்மையினைப்; பேசுவன: ஒரு குறிப்பிட்ட காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியைப் பேசுவனவல்ல' என்பர்.[75]

சிவபரத்துவமே புராணங்களின் உட்பொருள். புராண, இதிகாச நூல்களும் வேத நூல்களைப் போலவே சைவ சமயத்தின் பிரமாண நூல்களாகக் கொள்ளப்படுகின்றன.

6. 4. 1. 2. 2 பதினெண் புராணங்கள் என்று கூறினும் சைவ புராணங்களாகக் கருதப்படுபவை பத்து. அவை சைவ புராணம், பவிடிய புராணம், மார்க்கண்டேய புராணம், கலிங்க புராணம், கந்த புராணம், வராக புராணம், வாமன புராணம், மச்ச புராணம், கூர்ம புராணம், பிரமாண்ட புராணம் என்பர்.[76]

இப்புராணங்களில் இறைவன் இறைவியரது செயல்களாகக் காட்டப்படும் நிகழ்ச்சிகள் இறைவனின் முழுமுதல் தன்மைகளை விளக்குவன.

6. 4. 1. 2. 3 அப்புராணக் கதைகளில் பலவற்றைத் தம் படைப்புக்களில் மீனாட்சிசுந்தரனார் போற்றுகின்றார்.

## 6. 4. 1. 2. 2. 1 சிவன் பற்றிய புராண மரபுக் கதைகள்

1. திருப்பாற்கடல் கடையும் பொழுது வாசுகி என்னும் பாம்பு உமிழ்ந்த நஞ்சைத் தானுண்டு தேவர்களைக் காத்தவன். அந்நஞ்சு அவன் மிடற்றோடு நின்றுவிட்டதால் கரிய கண்டம் உடையவன். அதனால் நீலகண்டத் திருநாமம் பெற்றவன்.[77]

2. திருமாலும் பிரமனும் அடிமுடிதேடிய செய்தி சிவபரத்துவத்தைக் காட்டுவதாகும். செருக்கினால் தமக்குள் போட்டியிட்டுக் கொண்டு, பன்றியாகவும் அன்னமாகவும் அடிமுடி தேடியலைந்து, காண இயலாது தம் செருக்கடங்கினர்.[78]

3. பொன், வெள்ளி, இரும்பாலாகிய மூன்று கோட்டைகளைக் கட்டிக் கொண்டு திரிபுராதிகள் தேவர்க்கும், மக்களுக்கும்

துன்பம் உண்டாக்கினர். அக்காலத்துத் தேவர்கள் வேண்டத் தன் நகைப்பால் திரிபுரம் எரித்துத் 'திரிபுராரி' என்ற பெயர் கொண்டான்.[79]

4. கைலயங்கிரியில் இறைவன் தவத்தில் ஆழ்ந்திருந்த காலத்துத் தேவர்கள் வேண்டுகோளுக்கிணங்கித், தென்றலைத் தேராகவும், கரும்பினை வில்லாகவும், வண்டுகளை நாணாகவும் கொண்ட மன்மதன் மலர் அம்புகளை எய்தான். தவம் கலைந்த நிலையில் கோபம் கொண்ட இறைவன் தன் நெற்றிக் கண்ணால் மன்மதனை எரித்துக் 'காமாரி' என்ற பெயர் கொண்டான்.[5]

5. தன்னால் பிறப்பிக்கப்பட்ட சலந்திரன், தன்னை எதிர்த்துப் போரிட்ட காலத்து, விருத்தராய் அவன்முன் சென்று, நிலத்தைத் தம் காலால் கீறி எடுப்பித்து அச்சக்ரத்தால் அவனை அழியச் செய்தான். இதனால் 'சலந்திராரி' எனப்பட்டான்.[81]

6. திருமால் ஆயிரம் தாமரை மலர்கொண்டு இறைவனைப் பூசித்த காலத்து, ஒருமலர் குறையத் தன்கண்ணினைத் தோண்டி எடுத்து இறைவனுக்கு மலராக அர்ச்சித்துத் தான் சிவபூஜையை முடித்தான். மனம் மகிழ்ந்த இறைவன் திருமாலுக்குத் தாமரைக் கண்ணன் என்ற பெயரையும், இட்ட சித்தியும், சுதரிசனம் என்ற சக்கரப் படையும் கொடுத்தருளினான்.[82]

7. தன்னை மதிக்காது வேள்வி செய்த தக்கன், அவ்வேள்விக்கு உதவிய எச்சன் இருவர்தம் தலைகளையும் வீரபத்திரரை ஏவித் துண்டித்தவன்.[83]

8. திருமால் தன் அவதாரக் காலங்களில் பலமுறை செருக் குற்றான். மச்சாவதாரத்தில் செருக்குற்ற திருமாலைக் கொக்கு வடிவம் கொண்டு சென்று அம்மீனின் கண்ணினைக் கொத்தி எடுத்துத் தன் விரல் ஆழியாகக் கொண்டான். இதனால் 'மச்சாரி' எனப்பட்டான்.

கூர்மாவதாரத்தில் செருக்குற்ற திருமாலின் ஓட்டைத் தகர்த்து மார்பணியாகக் கொண்டு 'கூர்மசம்கார மூர்த்தி' எனப் பெயர் பெற்றார்.

வராக அவதாரத்தில் திருமால் செருக்குற்றபோது, அவ் வராகத்தின் கொம்பினை முறித்து அணிந்து 'வராக சம்கார மூர்த்தி' எனப் பெயர் பெற்றார்.

திருமாலின் நரசிங்க அவதாரத்தில், நரசிங்கத்தின் தோலை உரித்துச் 'சரபமூர்த்தி' எனப்பட்டார்.

வாமன அவதாரத்தில் செருக்குற்ற திருமாலின் முதுகெலும் பாகிய கங்காளத்தை வீணா தண்டமாக்கிக் 'கங்காளத் திருநாமம்' பெற்றார்.[84]

9. தாருகாவனத்து முனிவர்களின் செருக்கினை அடக்கி, அவர்தம் யாகத்தின் வழிவந்த முயலகன், யானை, புலி, மான் முதலியவற்றை அடக்கியவர்.[85]

10. மார்க்கண்டேயருக்குப் பெரும்பதம் நல்குதற்காகக் கூற்றுவனை உதைத்தவர்[86]

11. வியாக்கிர பாதர் என்ற முனிவரின் மகன் உபமன்யுவிற் காகப் பாற்கடலைக் கொடுத்தவர்.[87]

12. உமையம்மை சிவனின் திரிநேத்திரங்களைத் தன் கைக ளால் பொத்த, அதனால் உண்டான கங்கையைத் தலையில் அணிந்தவர்.[88]

13. சங்கார காலத்துப் பிரமன், விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்களை அழித்து, அவர்தம் எலும்புகளையும் நீற்றையும் அணிந்தவர்.[89]

14. பகாட்சன் என்ற அரக்கனை அழிக்கச் சென்ற பொழுது, வேதங்களைக் குதிரையாகக் கொண்டவர்.[90]

15. சக்திக்கு ஞானம் உபதேசிக்கையில், அவள் பாராமுக மாய்க் கேட்டமையின் கோபம் அடைந்து அவளை வலைஞர் குலத்தில் பிறக்குமாறு சபித்தவர் என்பது புராணச் செய்தி. உமையம்மையை மணக்கத் தானும் வலைஞராய்த் தோன்றியவர்[91]

16. இறைவனால் இருநாழி நெல் அளந்து கொடுக்கப் பெற்ற உமையம்மை, அதனைக் கொண்டு உலகில் முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்தாள்.[92]

17. கம்பா நதியில் இருந்த சிவலிங்கத்திற்குப் பூசை செய்த உமையம்மை அவ்விலிங்க வடிவத்தைத் தழுவ, அவளது மென்மைக் கேற்பத்தானும் குழைந்து கொடுத்தான் இறைவன்.[93]

18. பாண்டியன் மகளாய்த் தடாதகை என்னும் பெயரோடு உமை தோன்றிய பொழுது, அவளை மணந்து அருளியவர்.[94]

19. சனகர் முதலிய நால்வர்க்கு ஞானம் நல்கத் தட்சிணா மூர்த்தியானவர்.[95]

20. பொன்னனையாள் என்னும் தாசிக்காக இரசவாதம் செய்து கொடுத்து அவள் துன்பம் நீக்க, அதனால் மகிழ்ந்து பொன்னால் செய்த இறைவன் சிலைக்கு அவள் முத்தம் கொடுத்த போது, நகக்குறிதன் கன்னத்தில் பெற்றவர்.[96]

21. தனகுத்தன் என்பான் மனைவிக்குப் பேறுகாலத்தில் அவளது தாயின் உருக்கொண்டு சென்று உதவித் தாயுமானவர் என்ற திருநாமம் பெற்றவர்.[97]

22. அண்டத்தை நடுங்கச்செய்த மான்ஒலியைத் தன்செவியில் புகுத்திக் கொண்டவர்.[98]

23. திருமாலை ஆனேறாகக் கொண்டவர்.[99]

### 6.4.1.2.3.2 ஏனைய தெய்வங்கள் பற்றிய புராணக் கதைகள்

1. கஜமுகாசுரனை வென்று, அவன் தேவர்களிடம் பெற்று வந்த வணக்கமாகிய சிரத்தில் குட்டிக்கொள்ளல், செவிபற்றி இருந்து எழுல் ஆகியவற்றை விநாயகர் தனக்கென ஆக்கிக் கொண்டார்.[100]

2. அசுரர்களைத் தன் வலிமையால் வென்றவன் முருகன்.[101]

3. முருகன், வள்ளியை மணக்க விநாயகரை யானையாய் வரச்செய்தான்; வேங்கை உருக்கொண்டு நின்றான்.[102]

4. வேதத்தின் பொருள் அறியாத பிரமனைக் குட்டிச் சிறையிலடைத்தவன்; தந்தைக்கு உபதேசித்தவன் முருகன்.[103]

5. திருமால், பாற்கடல் கடையும் முன் வெண்மை நிறமும், அதன்பின் நஞ்சின் வேகத்தால் கருமை நிறமும் பெற்றுப் பின் காஞ்சி இறைவனை வேண்டிச் செம்மை நிறம் பெற்றனன்.[104]

### 6. 4. 1. 2. 3. 3 சந்திரனைப் பற்றிய புராணக் கதைகள்

சந்திரனைப் பற்றிய பல புராணச் செய்திகள் இவர்தம் பிள்ளைத்தமிழ் நூல்களில் அமைந்த அம்புலிப் பருவப் பாடல்களில் காணப்படுகின்றன.

1. சந்திரன் திருப்பாற் கடலில் தோன்றியவன்.

2. அத்திரிக்கு அநசூயையிடம் பிறந்தவன்.

பேரன்பு கொண்டதால் தக்கனின் பகையைப் பெற்றனன்.

5. தக்கன் வேள்வியில் அவமானப் பட்டவன்.
6. பிரமனால் கயரோகம் பெறச் சாபம் பெற்றவன்.
7. விநாயகர் சதுர்த்தியன்று கண்ணுறத் தக்கவன் அல்லன்.
8. இறைவனின் சென்னியில் இடம் பெற்றவன்.
9. இராகு கேதுக்களால் விழுங்கி உமிழப் பெற்றவன்.
10. தன் ஆசிரியனாகிய பிரகஸ்பதியின் மனைவி தாரையைப் புணர்ந்தவன்.
11. காமனின் குடையாக விளங்குபவன்.[105]

இவ்வாறு எண்ணற்ற புராணப் பழமரபுக் கதைகளைத் தம் படைப்புக்களில் ஆங்காங்கே பயன்படுத்தியுள்ளார்.

6.4.1.2.4 இவற்றைத் தொகுத்து நோக்குமிடத்து, இறைவன் நஞ்சுண்டமை, திருமாலும் பிரமனும் அடிமுடிதேடியலைந்தவரலாறு, காமனை எரித்தமை, திரிபுரம் எரித்தமை, திருமாலை ஆனேறாகக் கொண்டமை என்ற செய்திகள் மிகுதியாகப் பேசப்படுகின்றன. இவையனைத்துமே இறைவனின் தலைமைத் தன்மையை நிலை நாட்டும் புராணக் கதைகளாக உள்ளன.

தவிர, இறைவி முப்பத்திரண்டு அறங்களையும் ஆற்றுபவள் என்ற செய்தியும் மிகுதியாகப் பேசப்படுகின்றது.

## 6.4.1.3 அடியாரியல்பும், வரலாறுகளும்

இறைவனின் அடியவர்களையும் இறைவனாக எண்ணி வழிபடலும் ஒருசமய நெறியாகும். சமயக் குரவர் தம் சைவ நெறி வழிப்பட்ட வாழ்வும், அவர்தம் வாழ்வில் நடந்த அதிசயங்களும் மக்களிடத்தே செல்வாக்குப் பெற்றன.

''பல்லவர் காலத்தில் சைவத் தொண்டு செய்து மறைந்த நாயன்மார்களின் வரலாறுகள்—சோழர் காலத்தில் திருத்தொண்டத் தொகை, நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதி, சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணம், சைவத் திருமுறைகள் இவற்றால் நாட்டில் நன்கு பரவின. பலகோயில்களில் நாயன்மார் உருவச்சிலைகள் பூசிக்கப்பட்டன; விழாக்கள் நடை

பெற்றன. இவற்றால் பொது மக்கள் நாயன்மார்களின் பெயர் களையும், வரலாறுகளையும் நன்கறிந்திருந்தனர் என்பதும், அப்பெயர்களைத் தாங்கள் தாங்கி மகிழ்ந்தனர் என்பதும் பல கல்வெட்டுக்களால் அறியப்படும் செய்தியாகும்,[106] என்பர்.

இயல்பாகவும், சூழ்நிலையினாலும் மிகுதியான சைவப் பற்றுக் கொண்ட மீனாட்சிசுந்தரனார் இவ்வடியார் இயல்புகளையும், வாழ்க்கை வரலாறுகளையும், இறைவன் இவர்கட்கு அருளியமை யினையும் தம் பாடல்களில் பாடி மகிழ்கிறார்.

## 6. 4. 1. 3. 1 அடியார் இயல்பு

சிவனைச் சிந்தனை செய்யும் மெய்யடியார்தம் பொது இயல்பு களை ஆங்காங்கு குறிப்பிடுகின்றார்.

சரீரத் தொண்டினாலும், வழிபாட்டு முறைகளாலும் இறை வனை வேண்டும் அடியவர் பெருமை,

''கருதுபொழு தாறும் மலர் மாலைசந்
தாதிபல கைக்கொண்டு பூசையாற்றும்
பெருகாத காமத்தர் செல்வமே மாதவப்
பெரியோர்கள் பெற்றபேறே
பிழையறப் பாமாலை பெருநய முறப்பாடும்
பெற்றியோ ருற்றவாழ்வே''[107]

என்னுமிடத்துப் பேசப்படுகின்றது.

அழுதழுது உருகி இறைவனை வேண்டும் அடியவர் தம்பெருமை,

''நனியா தரஞ்செய் துள்ளுருகி
நைந்து குழைந்து நாத்தழும்ப
நாளும் வழுத்தும் பேரடியார்''[108]

எனவும்,

''உன்னும் மனவாக் குடன்மூன்று
மொன்றா துடற்ற லொழிதரவுள்
ளுருகி யுருகி நெகிழ்ந்து நெகிழ்ந்துடைய்யு
மிடையும் பேரடியார்''[109]

எனவும்,

''படிபூத்த வெள்ளப் பரப்பென
விரைத்துப் பரந்தெழுங் கருணைவெள்ளப்
பரவையுட் பாடிக் கரங்குவித்
தாடியழல் பட்டமெழு கொத்துருகும் வெண்
பொடிபூத்த மேனியடியார்''[110]

எனவும் பல நிலைகளில் போற்றப்படுகின்றது.

உறையூர்ப் பெருமை பாடவந்த ஆசிரியர், 'மூவர்கள் வாயருமைத் தமிழ்பாடி, சமய நன்னூல் பலவும் நன்கறிந்து, புற மதங்களைச் சாடும் நூல்கள் பல கற்றுப், பதி, பசு, பாசம் ஈது எனத் தெளிவுற்றாராய், ஐந்தெழுத்து ஓதும் அடியார் பலர் நிறை உறையூர்'[111] எனக் காந்தி. இல் குறிப்பிடுகிறார்.

இவைபோல அடியார் பெருமை பேசும் இடங்கள் பல காணப் படுகின்றன.[112]

இவ்வாறு பொதுவாக அடியவர் பெருமை பேசும் மீனாட்சி சுந்தரனார், திருத்தொண்டர்களைப் பற்றிய சிறப்புச் செய்திகளையும் மிகுதியாகப் பாடுகின்றார். பிள்ளைத்தமிழ் நூல்களில் பாயிரத்திலும், காப்பிலும் அடியவர்களைப் பாடிய தன்மை முன்னரே குறிப்பிடப் பட்டது (இதே ஆய்வேடு இயல் எண் 3).

## 6. 4. 1. 3. 2 திருஞானசம்பந்தர்

அடியார் வரலாறுகளில் மிகுதியாகப் பேசப்படுவது ஞானசம்பந்தர் வரலாறேயாகும்.

1. திருஞானசம்பந்தர் இறைவியிடம் ஞானப்பால் உண்டமை
2. இறைவனிடம் பொற்றாளம், முத்துச்சிவிகை, பொன் ஆகியவை பெற்றமை
3. திருமணக் காலத்துச் சோதியில் கலந்தமை
4. பாண்டியனுக்கு வெப்பு நோய் நீக்கியமை
5. வையையில் இட்ட ஏடு எதிரேறியமை
6. தோணிபுரத்தில் வீற்றிருக்கும் இறைக் காட்சியைத் திருவீழி மிழலையில் கண்டமை
7. பாலையை நெய்தலாக்கியமை

8. திருச்சின்ன முழக்கம்

9. சமணர்களைக் கழுவேற்றியமை

ஆகிய செய்திகள் பேசப்படுகின்றன.

இவற்றுள் இறைவி ஞானப்பால் அருளிய செய்தி மிகப்பல இடங்களில் பேசப்படுகின்றது. இவர் பாடிய சீகாழிக்கோவை, சம்பந்தர் தோன்றிய தலம் பற்றிய நூலாக அமைந்தமை இதற்கொரு காரணம் எனலாம். ஞானசம்பந்தர்பால் மிகுதியான ஈடுபாடு கொண்டவர் மீனாட்சிசுந்தரனார் என்பதும் மற்றொரு காரண மாகும்.

## 6.4.1.3.3 திருநாவுக்கரசர்

1. இவர் சமண சமயம் அடைந்தமை
2. இவர் வருகை கேட்டு அப்பூதியார் எதிர் கொண்டமை
3. இறைவன் சூலைநோயால் ஆண்டுகொண்டமை
4. பழையாறை வடதளியில் இறைவன் திருக்கோலம் காண நின்றமை
5. சிவ முத்திரைகள் பெற்றமை
6. திருவீழி மிழலையில் காசுபெற்றமை
7. கல்லோடு கடலில் மிதந்தமை
8. நீற்றறை நடுவிருந்தமை

ஆகிய வரலாற்றுச் செய்திகள் இடம் பெறுகின்றன.

## 6.4.1.3.4 சுந்தரர்

இறைவனோடு தோழமை மார்க்கத்தில் தொடர்புகொண்ட சுந்தரர் வரலாறும் இவர் பாடல்களில் இடம் பெறுகின்றது.

1. பரவையாரின் ஊடல் தீர்க்க இறைவனை வேண்டியதும் இறைவன் தூது நடந்ததும்
2. தான் உரைத்த சூள் தப்பிக் கண்ணிழந்தமை
3. குருகாவூரில் உணவு பெற்றமை

4. பரவையார், சங்கிலியார் இருவரையும் மணந்தமை
5. குண்டையூரில் நெல் பெற்றமை
6. முதலை உண்ட பாலகனை உயிர்ப்பித்தமை
7. கலிக்காமர் கொண்ட பகையை இறையருள் நீக்கியமை
8. திருமணக் காலத்து இறைவனால் தடுத்தாட் கொள்ளப் பட்டமை
9. சேரமானோடு வெள்ளையானை மீதேறிக் கைலை சென்றமை ஆகிய செய்திகள் இடம் பெறுகின்றன.

### 6. 4. 1. 3. 5 மாணிக்கவாசகர்

1. மணிவாசகருக்காக இறைவன் பிட்டுக்கு மண்சுமந்தமை
2. பாண்டியனுக்கு இருமையும் காட்டியமை
3. புத்தர்களை ஓட்டியமை
4. குருந்த மரத்தடியில் ஞானோபதேசம் பெற்றமை
5. நரியைப் பரியாகப் பெற்றமை
6. ஊமைப் பெண்ணிற்குப் பேசுந்திறன் தந்தமை என்னும் செய்திகள் பேசப்படுகின்றன.

### 6. 4. 1. 3. 6 பிற நாயன்மார்

இந்நால்வர் தவிரச் சண்டேசுவரநாயனார் பெருமையும் பாயிரங்களில் இடம்பெறுகின்றது.

1. ஊன் உணவு ஊட்டிய கண்ணப்பர்
2. திருச்சிற்றம்பல ஓசை கேட்கும் சேரமான்பெருமாள் நாயனார்
3. தன் குலம் அடங்க மாய்த்த கோட்புலியார்
4. பேயுருவம் வேண்டிப் பெற்ற காரைக்காலம்மையார்
5. கல்லால் எறிந்து வழிபட்ட சாக்கிய நாயனார்
6. தன் மனைவியையே கொடுத்த இயற்பகைநாயனார்
7. மீனினைப் பிடித்துப் பிடித்து இறைவனுக்கென்று மீண்டும் மீண்டும் நீரினுள் விடுத்த அதிபத்தநாயனார்

என்ற நாயன்மார் வரலாறுகளும் தக்க இடங்களில் பேசப்படுன்றன.

## 6.5 அருட்பா மறுப்பும் மீனாட்சிசுந்தரனாரும்

தீவிர சமயப் பற்றுடையவராக விளங்கினாலும்கூட மீனாட்சி சுந்தரனார் தம் காலத்தில் நடந்த சமய வாதங்களில் கலந்து கொள்ளாமலே வாழ்ந்திருக்கிறார். இவர் காலத்தில் வாழ்ந்த இராமலிங்க சுவாமிகள் சமரச சன்மார்க்க நெறியை மக்களிடையே பரப்பினார். இவரது பாடல்கள் திருவருட்பா எனப்போற்றப்பட்டன.

அக்காலத்தில் வாழ்ந்த மற்றொரு பெரும் புலவர் ஆறுமுக நாவலர். இவர் இராமலிங்கரின் திருவருட்பாவினை மறுத்துப், 'போலி அருட்பா மறுப்பு' எழுதினார். ''திருவருட்பிரகாச வள்ளலாரென்னும் பெயரும் அவர் பாடலுக்குத்திருவருட்பாவென்னும் பெயரும் இடப்பட்டது நகைப்புக்கிடமேயாமென்றும் இராமலிங்கம் பிள்ளையும் அவர் மாணாக்கர்களும் உலகத்தாரை வஞ்சித்துப் பொய்ப் புகழ் பெற்று வயிறு வளர்க்கப் புகுந்த வேடங்களே என்றும்''[118] மிகக் ககடுமையாகத் தாக்கி எழுதினார். இது தொடர்பாகச் சென்னை உயர்நீதிமன்றத்தில் வழக்கொன்றும் நடந்தது.

இவ்வளவு பரபரப்பாக ஒருசமயவாதம், தம் காலத்தில் நடந்தும்கூட, அதுபற்றி மீனாட்சிசுந்தரனார் எக்கருத்தும் வெளியிட்டாரில்லை. திருவருட்பாவை விரும்பிக் கேட்கும் பற்றுள்ளம் உடையவர், மீனாட்சிசுந்தரனார். அதே நேரத்தில் ஆறுமுகநாவலர் திருவாவடுதுறை ஆதீனத்தில் மிகுந்த செல்வாக்கும், ஆதரவும் பெற்றிருந்தார். இவருக்கு 'நாவலர்' என்ற பட்டமே ஆதீனத்தால் வழங்கப்பட்ட ஒன்று என்பது, இதே ஆய்வின் இரண்டாம் இயலில் குறிப்பிடப்பட்டது.

எனவே தம் நண்பராகவும்,ஆதீனத்தின் ஆதரவு பெற்றவராகவும் விளங்கிய நாவலருக்கு எதிராகத் தம் கருத்துக்களைத் தெரிவிக்க மீனாட்சி சுந்தரனார் விரும்பவில்லை எனத் தெரிகிறது.

## 6. 6 முடிவுகள்

மீனாட்சிசுந்தரனார் தம் சமய உணர்வினைத் தன்னுணர்ச்சிப் பாடல்களாக வெளிப்படுத்தவில்லை. சிற்றிலக்கியம் என்ற வடிவத்தின் மூலமே உணர்த்துகின்றார்.

சித்தாந்தக் கருத்துக்களுள், இறைவனின் இயல்புகளாகிய அநாதித் தன்மை, வடிவ தத்துவங்கள், தொழில், குணம் ஆகியவை பேசப்படுகின்றன.

உயிரின் இயல்புகளுள், அது அடையும் அவத்தை நிலைகள் பேசப்படுகின்றன. மூவகை ஆன்மாக்களாகிய சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என்பனவும், இவ்வான்மாக்களிடம் இறைவன் நிலை பெறும் தன்மையும் உணர்த்தப்படுகின்றன.

ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களும், அவற்றது தன்மையும், ஆன்மா இறையருளைப் பெறும் முறைகளும், இறைவன் அருள் செய்யும் தன்மைகளும் பேசப்படுகின்றன.

சமய உண்மைகளுக்கு மாறுபடாமல் கருத்துக்களைக் கூறுவதோடு, சமயவாதிகள் பயன்படுத்திய 'செம்பிற் களிம்பு போல', 'நெல்லிற்குமி போல' என்பன போன்ற உவமைகளையும், இதயக் கமலம் போன்ற உருவகங்களையும் பயன்படுத்தியுள்ளார்.

சிவஞானசித்தியார் கூறும் புறச்சமயக் கருத்துக்களும் பேசப் படுகின்றன.

புராண மரபுக் கதைகள் மிகுதியாக இடம்பெறுகின்றன. அவற்றுள் இறைவனின் தலைமைத் தன்மையை உணர்த்தும் கதைகள் மிகுதியாகப் பேசப்படுகின்றன. சைவ புராணக் கதைகள் மட்டுமே இடம்பெறுகின்றன.

அடியவர்களிடம் இவர் கொண்ட பற்றின் காரணமாக, அவர் களின் வரலாற்று நிகழ்ச்சிகளைத் தக்காங்கு பயன்படுத்துகின்றார். திருஞானசம்பந்தர் வரலாறு இவர் பாடல்களில் பேரிடம் பெறுகிறது.

தன்காலச் சமய வாதங்களில் இவர் கலந்து கொள்ளவில்லை. ஆதீனத்தைச் சார்ந்து வாழ்ந்தமையின், அதற்கு எதிராக அருட்பா பற்றிய தன் கருத்துக்களை இவர் வெளியிடவில்லை.

## குறிப்புகள்

1. திரு. வி. கலியாணசுந்தரனார், சைவத்தின் சமரசம், ப. 8.
2. ஆ. கந்தசாமி, திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, தமிழ் இலக்கியக் கொள்கை 3, ப. 160.
3. திருமந்திரம், 1486.
4. ப. அருணாசலம், சைவ சமயம் (ஓர் அறிமுகம்), ப. 1.

திரு. வி. கலியாணசுந்தரனார், மு. நூல், ப. 18.

மேலது., ப. 18.

கு. சுந்தரமூர்த்தி, சீகாழிக்கோவை, ஆராய்ச்சி முன்னுரை, ப. XIII.

சிவஞானமுனிவர், சிவஞானபோதமும் சிவஞானமுனிவர் அருளிச்செய்த சிற்றுரையும், ப. 20.

சிவஞானசித்தியார், சூ.1, அதி. 2. பா. 44.

திருக்களிற்றுப்படியார், 64.

சீகாழி 144.

மேலது., 530.

மேலது., 415

சுத்தானந்த பாரதியார், திருமந்திர விளக்கம், ப.10.

. ப. அருணாசலம், மு. நூல், ப. 5.

சீகாழி. 156.

. சிவஞானசித்தியார் சுபக்கம், சூ. 1, அதி. 2, பா. 50

. சீகாழி. 467

. திருவெண். செங். 3.

. அகிலாண்ட. செங். 8.

. மங்கள. சப். 9.

. சீகாழி. 47.

. அகிலாண்ட. காப்பு. 2.

. முருகர். சப். 1.

. பெருந்திரு. செங். 3, சப். 4, மங்கள. வாரானை. 9; சீகாழி. 19, 71.

. சிவஞானசித்தியார் சுபக்கம், சூ. 2. அதி. 4, பா. 74.

. சிவஞானசுவாமிகள் பொழிப்புரை, சிவஞானசித்தியார் சுபக்கம் ப. 147.

. சிவஞானசித்தியார் சுபக்கம், சூ. 2. அதி. 4. பா. 75.

. சீகாழி. 142.

. பெருந்திரு. வாரானை. 9.

. காந்தி. பொன். 2.

. பெருந்திரு. வாரானை. 9;

. சீகாழி. 158.

34. சிவஞானசித்தியார் சுபக்கம், சூ. 5. அதி. 2. பா. 7
35. சிவப்பிரகாசம், சூ. 1, பா. 18.
36. சீகாழி, 192.
37. சதுரகராதி, பக். 266-267.
38. சீகாழி. 356.
39. திருவெண். வாரானை, 5.
40. பெருந்திரு. பாயிரம். 3; திருவெண். தால், 7; மங்கள.
41. திருவருட் பயன், 4.
42. எச். வைத்தியநாதன், வழிபாடும் சமயமும், ப. 51.
43. பெருந்திரு. அம்மானை. 4.
44. சிவஞானபோதகம், 4.
45. சிவஞானசித்தியார், சூ. 4. அதி. 3. பா. 37.
46. மங்கள காப்பு. 7.
47. சீகாழி 221.
48. திருவெண். காப்பு. 3.
49. சீகாழி. 39.
50. மேலது., 176.
51. அம்பல. தால். 7.
52. திருவெண். தால். 6.
53. சீகாழி. 27.
54. மேலது., 364.
55. சிவஞானபோதம், உதாரண வெண்பா, 12.
56. சீகாழி. 380.
57. பெருந்திரு. முத். 1.
58. சேக்கிழார். வாரானை. 5.
59. மேலது., தால். 6.
60. பெருந்திரு. முத். 1.
61. சிவஞானசித்தியார் சுபக்கம், சூ. 8.
62. காந்தி. முத். 1.
63. மங்கள. காப்பு. 8.
64. சிவப்பிரகாசம், 8.
65. கு. சுந்தரமூர்த்தி (உ. ஆ.), சீகாழிக்கோவை, ப. 56
66. சீகாழி. 226.

67. பாலூர் கண்ணப்ப முதலியார் (உ. ஆ.), சேக்கிழார் பிள்ளைத்தமிழ், பக். 260-265.
68. சேக்கிழார். சிறுபறை. 3.
69. மேலது.
70. சேக்கிழார். செங். 9.
71. சிவஞானசித்தியார் சுபக்கம், சூ. 9. அதி. 3. பா. 9.
72. அம்பல. முத். 3.
73. சேக்கிழார். வாரானை. 3.
74. சிவப்பிரகாசம், பா. 50.
75. ப. அருணாசலம், மு. நூல், ப. 3.
76. மேலது., ப. 22.
77. சீகாழி. 18, 70, 81, 90, 91, 110, 140, 165, 198, 209, 228, 303, 304, 310, 379, 408, 421, 427, 484, 491, 491, 497; பெருந்திரு. பாயிரம். 2, செங். 10, முத் 5.
78. சீகாழி. 26, 38, 62, 97. 190, 217, 423; அகிலாண்ட அம்மானை. 5; காந்தி. வாரானை. 8; மங்கள வாரானை 6.
79. சீகாழி. 13, 19, 54, 71, 82, 137, 504, 506, 507, 518; மங்கள. வாரானை. 9; பெருந்திரு. செங். 3, சப். 4.
80. சீகாழி. 55, 254, 401; காந்தி. பொன். 5. மங்கள. சப். 1; பெருந்திரு. காப்பு. 2, தால். 6.
81. பெருந்திரு. சப். 4.
82. சீகாழி. 185, 510; காந்தி. சப். 2.
83. பெருந்திரு. சப். 4.
84. சீகாழி. 1, 332; பெருந்திரு. சப். 4
85. சீகாழி. 206; பெருந்திரு. சப். 4.
86. மேலது., 517.
87. காந்தி. நீராடல். 1; பெருந்திரு. சப். 6.
88. திருவெண். செங். 4; மங்கள. அம்மானை. 3; பெருந்திரு. சப். 1.
89. சீகாழி. 217, 275, 419.

92. திருவெண். காப்பு. 2, செங். 1. அம்மானை. 2, பொன்.10 அகிலாண்ட. சப். 4, முத். 2; காந்தி. சப், 1, பொன். 3; பெருந்திரு. காப்பு 5; சேக்கிழார். சிறுதேர். 2.

93. சீகாழி. 220; சேக்கிழார். சிறுதேர். 2.

94. திருவெண். சப். 3; அகிலாண்ட. செங். 2.

95. சீகாழி. 345; முருகர். சப். 1.

96. அம்பல. முத். 10.

97. சீகாழி. 481.

98. திருவெண். சப். 8; பெருந்திரு. முத். 6.

99. சீகாழி. 59, 68, 232, 263, 295; பெருந்திரு. செங். 3.

100. திருவெண். சப். 6; பெருந்திரு. பாயிரம். 1.

101. பெருந்திரு. முத். 8; பொன். 8; முருகர். செங். 7, தால். 8. சப். 4, 6.

102. முருகர். வாரானை. 8.

103. முருகர். காப்பு. 3, 6, சப். 3.

104. சேக்கிழார். தால். 4.

105. சந்திரன் பற்றிய புராணச் செய்திகள் ஆசிரியரின் எல்லாப் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் அம்புலிப் பருவத்தில் காணப்படுவதால் பாடல் எண்கள் அடிக்குறிப்பில் தரப்படவில்லை.

106. மா. இராசமாணிக்கனார், சைவ சமய வளர்ச்சி, ப. 235.

107. திருவெண். அம்மானை. 5.

108. திருவெண். முத். 2.

109. மேலது., நீராடல். 6.

110. அகிலாண்ட. பொன். 2.

111. காந்தி. சப். 10.

112. பெருந்திரு. முத். 2, 9; காந்தி. அம்மானை. 9; திருவெண். முத் 5, அம்மானை. 10; மங்கள. முத். 4, வாரானை. 7, நீராடல். 10.

113. ச. பொன்னுசாமி (ப.ஆ.), ஆறுமுகநாவலர் பிரபந்தத்திரட்டு, ப. 109.

# 7. முடிவுரை

7.1 இவ்வாய்வேட்டில் கீழ்க்காணும் கருத்துக்கள் ஆராயப்பட்டன.

மீனாட்சிசுந்தரனார் தம் பிள்ளைத்தமிழ் நூல்களில், பாயிரப் பகுதியில் முதலில் விநாயகரைப் பாடிப் பின் சைவசமய இறைக் குடும்ப வரிசைப்படி இறைவன், இறைவியைப்பாடி, மீண்டும் விநாயகரை வணங்கித் தொடங்குகிறார்.

முதலில் இவர் எழுதிய பிள்ளைத்தமிழ் நூல்களில் விரிவான பாயிரமும், பின்னர் எழுதியவற்றில் விநாயக வணக்கம் மட்டும் காணப்படுகின்றன.

காப்புப் பருவத்தில் அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழும், சேக்கிழார் பிள்ளைத்தமிழும் ஆசிரியரின் சமய உணர்விற்கேற்ப மாறு பட்டுக் காணப்படுகின்றன.

விழுக்காட்டளவில் பார்க்கும் பொழுது, செங்கீரைப் பருவம் 29%, சப்பாணிப் பருவம் 45%, முத்தப் பருவம் 60%, வருகைப் பருவம் 58%, அம்மானைப் பருவம் 58%, நீராடல் பருவம் 54%, பொன்னூசல் பருவம் 46%, சிறுபறைப் பருவம் 40%, சிறு தேர்ப் பருவம் 30% பொருட் தொடர்புடையனவாக அமைந்துள்ளன.

தாலப்பருவப் பாடல்கள் அனைத்துமே தலைப்பிற்குரிய பொருட் தொடர்பின்றிக் காணப்படுகின்றன. அம்புலிப் பருவமும், சிற்றில் பருவமும் முழுமையும் பொருட் தொடர்புடையனவாக அமைந்துள்ளன.

ஒரே சந்தத்தில் பாடல்கள் அமையும் பொழுது, ஈற்றடி எல்லாப் பாடல்களுக்கும் ஒரே வரியாக அமைகிறது, சந்தம் மாறும் போது ஈற்றடியும் மாறுகிறது.

தலபுராணத்திலும் பிள்ளைத்தமிழ் பாடியமை ஆசிரியருக்குப் பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையின்மீது இருந்த பற்றைக் காட்டு கிறது.

பாங்கற் கூட்டத்தில், வேட்கை தாங்கற் கருமை கூறல் என்ற நம்பியகப்பொருட் துறை, சீகாழிக்கோவையில் கிழவோன் பாங்கனை ஆண்டுச் செல்ல வேண்டும் என்றல், தலைவியுருவு வெளிப்பட்டமை

கண்டு தலைவன் ஐயுற்றிரங்கல், காணுங்கொலோ என்று தலைவன் ஐயுற்றிரங்கல், பாங்கனை உள் மகிழ்ந்து வைத்தல் என்ற நான்கு துறைகளாக விரிந்துள்ளன.

பாங்கி மதி உடன்பாட்டில், 'நடுங்க நாட்டம்' என்ற துறையை இறையனாரகப்பொருள் உரை மறுக்கிறது. ஆனால் திருக்கோவையார் உரை விளக்கத்தில் பெருமழைப் புலவர் இதனை, 'நன்னிலை நடுங்க நாட்டம்' என ஏற்றுக் கொண்டுள்ளார். மீனாட்சிசுந்தரனாரின் படைப்புக்களுள் குளத்தூர்க்கோவையில் தோற்றத்தாலாராய்தல், ஒழுக்கத்தாலையந் தீர்தல், எனவும், சீகாழிக்கோவையில் பிறைதொழுகென்றல், கரந்துரைத்தல், கரவு நாட்டம், சுனைநயப்புரைத்தல், சுனைவியந்துரைத்தல் என விரிவாக இடம்பெறுகிறது.

கெடுதி வினாதல் என்ற நம்பியகப்பொருட்துறை சீகாழிக் கோவையில் வேழம் வினாதல், பன்றி வினாதல், மரை வினாதல், கலைமான் வினாதல், மதமாவொடு மனம் வினாதல் என விரிவாக இடம்பெற்றுள்ளது. குளத்தூர்க்கோவையில் மான் வினாதல், மனம் வினாதல் இரண்டும் காணப்படுகின்றன. இறையனாரகப்பொருள் உரையில்காணப்படும்வழி வினாதல், இடை வினாதல்,மொழியாமை வினாதல் என்பவை சீகாழிக்கோவையில் இடம் பெறுகின்றன.

நம்பியகப்பொருளின் மெய்தொட்டுப் பயிறல் என்ற துறை இவர் நூல்களில் வண்டோச்சி மருங்கணைதல் என்று இடம் பெறுகிறது.

மாவிரதியரை வினாதல், உய்த்துணர்ந்தோரை உரைமின் ஏன்றல், புறவொடு புலம்பல் என்ற துறைகளையும், கண்டோர் கூற்றில், 'அந்தணரையும் சான்றோரையும் முன்னிட்டு வரைந்து கொண்டுழிக் கண்டோர் மகிழ்ந்து கூறல்' என்ற துறையினையும் திருக்கோவையாரினின்றும் பெற்றுள்ளார்.

இறையனாரகப்பொருள் உரையில் காணப்படும் துறை விளக்கங்களையும், திருக்கோவையார் கொளுக்களையும் ஆங்காங்கே அமைத்துள்ளார் எனினும், ஆசிரியர் மிகுதியும் பின்பற்றியது நம்பியகப்பொருளையே எனலாம்.

தோழி கூற்று எண்ணிக்கையில் மிகுதி. தலைவன் கூற்று

கூற்று அவளது நாகரிக உணர்வினையும், உலகியல் அறிவையும் காட்டுகின்றன.

முதல், கரு, உரிப் பொருள்களுக்கு முக்கியத்துவம் தரவில்லை என்றாலும் அவை புறக்கணிக்கப்படவில்லை. அகவிலக்கியங்களின் சிறப்பியல்பான உள்ளுறையும் ஆங்காங்கே அமைந்துள்ளது.

சீகாழிக்கோவையில், சீகாழியின் மூர்த்தச் சிறப்பு, தலச் சிறப்பு, அமைப்பிடம், இயற்கை வளம், அவ்வூர் மக்கள் பெறும் பேறு ஆகியன பேசப்படுகின்றன. அகச்செய்திகளின் நிகழ்விடம் ஆகும் பொழுது, சீகாழி உவமையாக்கப்படுகின்றது. பிற சிவத் தலங்களோடு இணைத்துப் பேசப்படுகின்றது.

சீகாழி இறைவன் சிறப்பு, இயற்கைப் பொருள்களுக்கும், அகச்செய்திகட்கும் உவமையாகின்றது. அவன் அடியார்க்கருளியமையும், பிற புராணச் செய்திகளும் அகச்செய்திகளுக்கு உவமையாக்கப்பட்டுள்ளன.

நம்பியகப்பொருளில் கூறப்படாத துறைகள் பல சீகாழிக் கோவையில் காணப்படுகின்றன. இறுதியில் எழுதிய கோவையாதலால் இவ்வளர்ச்சி நிலை காணப்படுகிறது.

சிற்றின்ப உணர்வு மிக்க பாடல்கள், பேரின்பத்தோடு இணைத்துப் பாடப்பட்டமை, ஆசிரியரின் சமயப் பற்றை விளக்கி நிற்கின்றது.

தலபுராணச் செய்திகள் ஓரளவு காணப்பட்டாலும் அகப்பாடும் மரபு தவறாது அமைந்தமையின் சீகாழிக்கோவையைத் தலபுராணம் எனக்கூறவியலாது.

காதல் உணர்வினை மென்மையாக வெளிப்படுத்தும் பாங்கு மூன்று கோவையிலும் காணப்படுகின்றது. சிற்றின்ப உணர்வுமிக்க பாடல்கள் எண்ணிக்கையில் குறைவாகவே உள்ளன.

குளத்தூர்க்கோவை தவிர, ஏனைய இருகோவை நூல்களிலும் காப்புப் பாடலாக விநாயகர் துதி அமைகிறது. குளத்தூர்க்கோவை காப்புச் செய்யுளின்றிக் கைக்கிளையில் தொடங்குகின்றது. இதன்

காரணம் குளத்தூர்க்கோவையின் பாட்டுடைத் தலைவர் கிறித்தவ ராக அமைந்தமை போலும் என ஐயுறத் தோன்றுகிறது. சீகாழிக் கோவையில் மட்டும் அவையடக்கம் அமைந்துள்ளது.

பழமை இலக்கியச் சாயல் மாறாத இவர்தம் இலக்கியப் போக்கிற்குக் காரணங்கள், ஆசிரியரின் சமயப் பற்று, வாழ்ந்தஇடம், வாழ்க்கை நிலை ஆகியவையே.

இவர் கையாண்டுள்ள அணிகளின் சிறப்பை நோக்கும் பொழுது, இயற்கைப் பொருட்கள், சமயக் கருத்துக்கள், புராணச் செய்திகள், அடியவர் வரலாறு, சித்தாந்தக் கருத்துக்கள், அகச் செய்திகள் அனைத்தும் அழகிய அணிகளால் சிறப்புப் பெறுகின்றன.

சிலேடையணி, மடக்கணி போன்றவை இவர்தம் பாடல் நடையைக் கடுமைப்படுத்துகின்றன.

இயல்பான காட்சி வருணனைகளோடு, காரணம் கற்பித்துக் கூறலும், தன் விருப்பினை ஏற்றிக் கூறலும் மீனாட்சிசுந்தரனாரின் கற்பனை வெளியீட்டு உத்திகளாக அமைந்துள்ளன.

வாழ்வியல் காட்சிகளைத் தெய்வக் குடும்பங்களோடு இணைத்து இயல்புக் கற்பனைகளாகப் புனைந்துள்ளார். இறைவன், இறைவியர்தம் தோற்ற வருணனைகள் புராண மரபுகளுக்கு மாறாமல் புனையப்பட்டுள்ளன.

இயற்கைக் காட்சி வருணனைகள் உயர்வு நவிற்சியாக அமைக்கப்பட்டன. வாளைமீன் வெடி கொண்டு துள்ளல் எல்லாப் பிள்ளைத்தமிழிலும் இடம்பெறுவதால், கவிஞரைக் கவர்ந்த கற்பனைக் காட்சி இது எனலாம்.

கோவை நூல்களில் இயல்புக் கற்பனையே மிகுதியாக இடம் பெறுகிறது. உயர்வு நவிற்சி, தலைவியின் இளமைத் தன்மையைக் கூறல் மிகச்சில இடங்களிலேயே காணப்படுகிறது.

ஆசிரியரின் மொழிநடையினைப் பார்க்கும் பொழுது, இவர் மோனைக்குச் சிறப்பிடம் தரவில்லை எனத் தெரிகிறது. மேலும், எதுகை நயத்திற்காக வடசொற்கள், புதிய சொல்லாக்கம், சொற்களைத் திரித்து வழங்கல் ஆகியன பயன்படுத்தப்பட்டுள்ளன,

வண்ணம் என்னும் உத்தி பல இடங்களில் ஓசை இன்பத்தைத் தந்தாலும், சில இடங்களில் பொருளைக் கடினப்படுத்திவிடுகின்றது.

ஒப்புமை ஆக்கமாகவும், எதுகை மோனைக்காகவும், வழக்குச் சொற்களின் அடிப்படையிலும், பால்வேறுபாடு காட்டுதற்காகவும் பல புதிய சொற்களை ஆக்கிக் கொண்டுள்ளார்.

அரிய சொற்களையும், வழக்கிழந்த பழஞ் சொற்களையும் மிகுதியாகக் கையாண்டமை பாடல்களின் நடையைக் கடினப்படுத்துகிறது.

தம்காலச் சூழலுக்கேற்ப வடசொற்களைத் தம் படைப்புக்களில் மிகுதியும் கையாண்டுள்ளார்.

பெரும்பாலும் பேச்சு வழக்கிலும், உரை நடையிலும் காணப் படும் 'கள்' என்னும் பன்மைஈறு இவர்தம் கவிதை நடையில் காணப்படுகின்றது.

அடைத் தொடர், உவமைத் தொகைத் தொடர், குறிப்பு வினைமுற்றுத் தொடர் ஆகியவை நீக்கல் உத்தியில் அமைந்துள்ளன. விளித் தொடர் சிறுசிறு தொடர்களாக அமைந்துள்ளது. பழமொழித் தொடர்கள் கருத்துவிளக்கத்திற்குப் பயன்படுகின்றன.

கடினமான புணர்ச்சியும், வகையுளிகளும் இவர் நடையைக் கடுமைப்படுத்துகின்றன.

கோவை நூல்களில் பாடல்கள் கட்டளைக் கலித்துறையில் அமைந்துள்ளன. பிள்ளைத்தமிழ்ப் பாடல்கள் எண்சீர், பதின்சீர், பதினாறு சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களாகவும், முப்பத்தி ரண்டு முதல் நாற்பத்தினான்கு சீர்வரை அமைந்த வகுப்புப் பாக்களாகவும் அமைந்துள்ளன.

மீனாட்சிசுந்தரனார் தம் சமய உணர்வினைத் தன்னுணர்ச்சிப் பாடல்களாக வெளிப்படுத்தவில்லை. சிற்றிலக்கியம் என்ற வடிவத் தின் மூலமே உணர்த்துகிறார்.

சமய உண்மைகளுக்கு மாறாமல், இறையியல்பு, உயிரியல்பு, பாசவியல்பு ஆகியவற்றைப் பேசுகிறார். அத்துடன், சமயவாதிகள் பயன்படுத்திய உவமைகளும் உருவகங்களும் மாறாமல் இவர்தம் பாடல்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

புராண மரபுக் கதைகள் மிகுதியாக இடம் பெறுகின்றன. அவற்றுள்ளும் இறைவனின் தலைமைத் தன்மையை உணர்த்தும் கதைகள் மிகுதியாகப் பேசப்படுகின்றன. சைவ புராணக் கதைகள் மட்டுமே இவர் பாடல்களில் இடம்பெறுகின்றன.

அடியவர்களிடம் இவர் கொண்ட பற்றின் காரணமாக அவர்களின் வரலாற்று நிகழ்ச்சிகளைத் தக்காங்கு பயன்படுத்துகின்றார். திருஞானசம்பந்தர் வரலாறு இவர் பாடல்களில் பேரிடம் பெறுகிறது.

தம் காலத்தவரான இராமலிங்க சுவாமிகளின் திருவருட்பா மீது மிகுதியான பற்றுக் கொண்டவர். எனினும் ஆதீன ஆதரவு பெற்ற ஆறுமுகநாவலர், திருவருட்பாவினை மறுத்துப் பிரசாரம் செய்த பொழுது அது பற்றித் தன் கருத்துக்களை மீனாட்சிசுந்தரனார் வெளியிடவில்லை. திருவாவடுதுறை ஆதீனத்தின் ஆதரவின் கீழ் இவர் வாழ்ந்தமையே இதன் காரணம் எனலாம்.

## 7·2 மீனாட்சிசுந்தரனார் பற்றிய கருத்துரைகள்

19 - ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் சிறப்பிடம் பெறும் மீனாட்சிசுந்தரனார் வாழ்ந்த காலம், இடம் அவர்தம் புலமை இன்னபிறவற்றைப் பற்றிய சான்றோர் கருத்துரைகள் இங்குத் தொகுத்தளிக்கப்படுகின்றன.

இவர் வாழ்ந்த காலத்தைக் ''கவிராயர்கள் மலிந்த காலம்' இராமலிங்கர், ஆறுமுகநாவலர், மீனாட்சிசுந்தரம் பிள்ளை நூற்றாண்டு'' என்று மது. ச. விமலானந்தம் குறிப்பிடுகின்றார் (தமிழ் இலக்கிய வரலாறு, ப. 341).

19-ஆம் நூற்றாண்டு இலக்கிய வளர்ச்சியை ஆய்வு செய்த சதாசிவம் இவரைக் 'கம்பனுக்கு அடுத்த பெருங்கவிஞர்' எனப் போற்றிக், கம்பனின் காவிய நடையும், சேக்கிழார், கச்சியப்பர், சிவஞான சுவாமிகள் ஆகியோரின் சமயப் பற்றும் இவர் பாடல்களில் காணப்படுவதாகக் கூறுகிறார் (Tamil Poetry of the 19th Century, p. 2).

''கவிமழை பொழிந்து புவிபுகழ வாழ்ந்ததோடன்றித் தமிழ்ப் பேரறிஞர்களை உருவாக்கித் தமிழை உய்யச் செய்த பெருமை இவருக்குண்டு'' என இவர் தம் கவித்திறனையும், கற்பிக்கும் ஆற்றலையும் ச. சாமிமுத்து குறிப்பிடுகிறார் (இலக்கிய வரலாறு. பக். 172—173).

தம் ஆசிரியரின் கற்பிக்கும் ஆற்றலைப் பேசுமிடத்து உ. வே. சாமிநாதையர், ''என் ஆசிரியர் பாடம் சொல்லும் போது கையிலே புத்தகம் வைத்துக் கொள்ளும் பழக்கமில்லை. அப்பெரியாருக்கு அவ்வளவு செய்யுட்களும் மனப்பாடமாகவே இருந்தன... 'இவர்கள் இதற்காகவேஉதித்தவர்கள்' என்ற எண்ணம்எனக்கு உண்டாயிற்று. பாடம் சொல்வதில் அவருக்குச் சலிப்பே ஏற்படாது'', எனக் கூறிப் பெருமைப்படுகிறார் (என் சரித்திரம், ப. 263).

இவருடைய கவித்துவத்தைப் பற்றிப் பேசுமிடத்து, ஸ்ரீதரன், கே. குருசாமி, ''இவருடைய பிற்காலப் படைப்புக்கள் வியத்தகு கற்பனையும், சைவசித்தாந்தக் கருத்துக்களும், சொற்சிலம்பங்களும், புலமை நிறைந்த சொற்செட்டுக்களும் உடையவை,'' என்கிறார் (A Poet's Poet, p. 9). மேலும், இவர்தம் கவிபாடும் ஆற்றலை, ''இவர்தம் கவிப் பெருக்கு எக்காலத்தாலும், சூழலாலும், மனநிலையாலும் பாதிக்கப்படுவதில்லை. விருந்தினர்களுடன் பேசிக்கொண்டிருக்கும் பொழுதே, தம் புதிய படைப்புக்களை அருகிலிருக்கும் மாணவரிடம் கூறி எழுதச் செய்வார். பார்ப்போருக்கு மனப்பாடம் செய்த பாடல்களைக் கூறிக் கொண்டுள்ளாரோ என்ற ஐயமும், வியப்பும் தோன்றும்,'' என்று கூறுகிறார் (A Poet's Poet, p. 128).

இவ்வாறு வியத்தகு புலமை வாய்ந்த மீனாட்சிசுந்தரனாரின் சிறப்பினைத் திறனாய்வாளர்கள் புகழ்ந்து போற்றியது போலவே, அவர்தம் படைப்புகள் சமுதாய உணர்வும், பயனும் பெற்றவையா என்ற சிந்தனையும் சில கருத்து வெளியீட்டுக்குக் காரணங்களாக அமைகின்றன.

சாலை இளந்திரையன் குறிப்பிடுமிடத்துக், ''கம்பனை மிஞ்சிய பாவலன் எனப் பாராட்டிய மக்களுக்குப் புதுமைக் காவியம் எதையும் அவர் தரவில்லை. அவருடைய செய்யுள் வெள்ளம் தல புராணங்களாகவும், சிற்றிலக்கியங்களாகவுமே பெருகி வடிந்து போயிற்று,'' என்கிறார் (புதுத்தமிழ் முன்னோடிகள், பக். 72-73)

புதுமை இலக்கியங்கள் பற்றிப் பேசும் சி. கனக சபாபதி, ''மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் தமது எண்ணற்ற செய்யுள் நூல்களால் புதுமை இலக்கியத்தின் பொருளடக்கத்திற்கும், உள்ளடக்கத்திற்கும் ஒன்றும் சிறப்பாகச் செய்யவில்லை'' என்று குறிப்பிடுகின்றார். (எழுத்து, மே 1983, ப. 90).

## 7.3 மதிப்பீடு

கீழ்க்காணும் கருத்துக்கள், இவ்வாய்வின் பயனாய் மீனாட்சி சுந்தரனார் பற்றிய மதிப்பீடாக அமைகின்றன.

பிள்ளைத்தமிழ் கோவை நூல்களில், அந்தந்த இலக்கிய மரபுகளைப் பேணிக் காத்துள்ளார். மிகையான உயர்வுநவிற்சிக் கற்பனைகளும், அழகிய அணிகளும் இவர்தம் பாடல்களை அழகு படுத்துகின்றன. சங்க இலக்கிய அகமரபுகள் கோவை நூல்களில் கட்டிக் காக்கப்பட்டுள்ளன. நம்பியகப்பொருள் கூற்று வகைகளும், திருக்கோவையார், இறையனார் களவியல் உரை ஆகியவையும், இவர்தம் கோவை நூல்களின் துறையமைப்பிற்குப் பெரிதும் துணை செய்துள்ளன.

இவர் காலத்துச் சிற்றிலக்கியங்கள் பலவற்றில் விரசம் நிறைந்த பாடல்களை மிகுதியும் காணலாம். அக இலக்கியம் பாடினாலும், மிகச்சில இடங்களிலேயே சிற்றின்ப உணர்வுடைய பாடல்களைப் பாடியுள்ளார். அவையும் புணர்தல், புகழ்தல் போன்ற துறைகளில் அமைந்தமையால், அவ்வுணர்வினைப் பெற்றுள்ளன. சீகாழிக் கோவையில் அச்சிற்றின்பப் பாடல்களும் பேரின்பத்தோடு இணைத்துப் பேசப்பட்டமை குறிப்பிடத்தக்கது.

ஆசிரியர்தம் சமய உணர்வினை அவர்தம் பாடல்களில் மிகுதியும் காணமுடிகின்றது. இறைவன், இறைவி, இறைக் குடும்பம் இவற்றைப் பாடுவதையும், அடியவர் புகழ்பாடுதலையும் பேரின்பமாகக் கருதியுள்ளார்.

சமயச் செய்திகள் மட்டுமல்லாமல், சைவசித்தாந்தக் கருத்துக் களும், சித்தாந்திகள் தம் கருத்துவிளக்கத்திற்கு பயன்படுத்திய உவமை, உருவகம் போன்றவற்றையும் இவர் பாடல்களில் காண முடிகிறது.

பிள்ளைத்தமிழ் இலக்கிய நெறியில் இவருக்கிருந்த பற்றினை, இவர்தம் பிள்ளைத்தமிழ் நூல்கள் மட்டுமல்லாமல், திருக்குடந்தைப் புராணத்தின் ஆராவமுதப் படலமும் உணர்த்துகின்றது.

இலக்கியப் பற்றும், அறிவும் மட்டுமன்றி இலக்கண அறிவும் செறிந்தவர். தாம் படைத்த இலக்கியங்களில் ஆங்காங்கு இலக்கணக் கருத்துக்களை உவமைகளாகப் பயன்படுத்துகிறார்.

இவர்தம் கவிதையில் காணலாகும் கடுமையான நடை, இவர் காலக் கவிராயர்களால் பெரிதும்போற்றப்பட்டது. ஆயின், இருபதாம் நூற்றாண்டின் எளிமைப்படுத்தப்பட்ட கவிதைநடை, இத்தகு கடின நடைகளைக் காலத்திற்கு ஒவ்வாதவை எனப் புறக்கணிக்கின்றது.

சமயப் பற்று மிகுதியும் உடையவர் எனினும், ஆதீனக் கட்டுப் பாட்டிற்கு மீறித் தம் கருத்துக்களை வெளியிடவில்லை. திருவருட் பாவை மறுத்த ஆறுமுகநாவலரைத் திருவாவடுதுறை ஆதீனம் ஆதரித்த போது, இவர் தம் கருத்தை வெளியிடாமையே இவர்தம் கட்டுப்பாடான வாழ்க்கை நெறியைக் காட்டுகிறது.

மிகச் சிறந்த ஆசிரியராகக், கற்பனை வளம், சமயம், தத்துவம், இலக்கிய மரபுகள், சொற்செறிவு என இவை அனைத்தும் நிறைந்த கவிதைகள் புனையும் கவிஞர் பெருமானாக விளங்கியவர் மீனாட்சிசுந்தரனார். ஆனால் இவ்வளவு திறமைகள் இருந்தும், இவர் பிற்கால இலக்கிய வளர்ச்சியில் நிலை பெற இயலவில்லை

19-ஆம் நூற்றாண்டு, பழைய இலக்கியநெறியின் முடிவுக்கும், புது இலக்கியத் துறைகளின் தோற்றத்திற்கும் இடைப்பட்ட ஒரு காலக்கட்டமாகும். இக்காலத்தில் வாழ்ந்த மீனாட்சிசுந்தரனாரின் வாழ்க்கை, பொருளாதாரச் சார்பு காரணமாகத் திருவாவடுதுறை ஆதீனத்திற்கு அடிமைப்பட்டுவிட்டது. அவ்வாதீனத்தை மீறி அவர் எச்செயலும் செய்ய முற்படவில்லை.

இவர் காலத்தில் சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள், இவரது நண்பராகிய வேதநாயகராலேயேபாடப்பட்டுள்ளது. தாயுமானவரும், இராமலிங்கரும் தொடர்ந்து சமரச சன்மார்க்கம் எனச் சமயநெறியில் புதுமையைப் புகுத்தியுள்ளனர். சமயப் பற்றுடையவராக இருந்தும் கூட, இவர் சமரச சன்மார்க்கத்தில் ஈடுபடவில்லை. அதிலும் கூடப் பழைய சைவசமய நெறியினையே போற்றியுள்ளார்.

இவருடைய படைப்புக்கள் அனைத்தும் தலபுராணங்களா கவும், சிறு பிரபந்தங்களாகவும் ஆனமைக்கும் இப்பழமை விருப்பமே காரணம் ஆயிற்று. சமகாலச் சமுதாய உணர்வினை இவர் பாடல் களில் காணமுடியவில்லை. தம்கால அரசியல், பொருளாதாரம், சமுதாயம் இவற்றில் ஏற்பட்ட சிக்கல்கள், அன்னியர் படையெடுப்பு, பிற மதங்களின் ஆதிக்கம் எவையுமே இவர் பாடல்களில் தாக்கம் பெறவில்லை.

சைவத்தை வளர்த்தல் ஒன்றையே ஆதீனம் குறிக்கோளாகக் கொண்டு விளங்கியது. அதுவே மீனாட்சிசுந்தரனாருக்கும் கொள்கையாயிற்று. இப்பொருளாதாரச் சார்பும், பழமை விருப்பமுமே ஆசிரியரின் கவிதைப் பெருக்கை ஒரு குறிப்பிட்ட வட்டத்திற்குள் கட்டுப்படுத்தியவை எனலாம்.

## 7. 4 ஆய்வுப் பயன்

இவ்வாய்வினை முதல்படியாகக் கொண்டு, மீனாட்சி சுந்தரனாரின் ஏனைய பிரபந்தங்கள் அனைத்தும் எதிர்கால ஆய்வாளர்களால் ஆராயப்படுதற்கு வாய்ப்புள்ளது. இவ்வாய்வுப் பகுப்பில் அடங்கிய மீனாட்சிசுந்தரனாரின் கற்பனை வளம், அணி நலம், மொழிநடை, சமய உணர்வு என்பவற்றைத் தனித்தனித் தலைப்புக்களாகக் கொண்டு, இவர்தம் படைப்புக்கள் அனைத்தையும் இணைத்து ஓர் ஒருங்கிணைந்த பார்வையாகவும் ஆராயலாம்

## I. திருவாவடுதுறை ஆதீனத்தின் அகச்சந்தான குரவர்கள்

1. ஸ்ரீ நந்திதேவர்
2. சனற்குமாரர்
3. சத்திய ஞானதரிசினி
4. பரஞ்சோதி முனிவர்

## II. புறச்சந்தான குரவர்கள்

1. ஸ்ரீ மெய்கண்டார்
2. ஸ்ரீ அருள்நந்திதேவர்
3. ஸ்ரீ மறைஞான சம்பந்தர்
4. ஸ்ரீ உமாபதி சிவம்
5. ஸ்ரீ அருள்நமச்சிவாயர்
6. ஸ்ரீ சிவப்பிரகாசர்
7. ஸ்ரீ நமச்சிவாய தேசிகர்

## III. குருமகாசந்நிதானங்கள்

1. ஸ்ரீ நமச்சிவாய தேசிகர்
2. ஸ்ரீ மறைஞான தேசிகர்
3. ஸ்ரீ அம்பலவாண தேசிகர்
4. ஸ்ரீ உருத்திரகோடி தேசிகர்
5. ஸ்ரீ வேலப்ப தேசிகர்
6. ஸ்ரீ குமாரசாமி தேசிகர்
7. ஸ்ரீ பிற்குமார தேசிகர்
8. ஸ்ரீ மாசிலாமணி தேசிகர்
9. ஸ்ரீ இராமலிங்க தேசிகர்
10. ஸ்ரீ வேலப்ப தேசிகர்
11. ஸ்ரீ பின்வேலப்ப தேசிகர்
12. ஸ்ரீ திருச்சிற்றம்பல தேசிகர்

13. ஸ்ரீ அம்பலவாண தேசிகர்
14. வேளூர்-ஸ்ரீசுப்பிரமணிய தேசிகர்
15. ஸ்ரீ அம்பலவான தேசிகர்
16. மேலகரம்—ஸ்ரீ சுப்பிரமணிதேசிகர்
17. ஸ்ரீ அம்பலவாண தேசிகர்
18. ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்
19. ஸ்ரீ வைத்தியலிங்க தேசிகர்
20. ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிகர்

(பின்னிணைப்பு —2. நூலில் சேர்க்கப்படவில்லை)

## பின்னிணைப்பு எண். 3

சீகாழியின் பன்னிருபெயர்க் காரணம் :

1. பிரமபுரம் — பிரமதேவர் பூசித்துப் பேறு பெற்றமை.
2. வேணுபுரம் — தேவேந்திரன் தன் பாவம் தீர்க்க மூங்கில் வழியாக இத்தலத்தே இறங்கிப் பூசித்தான்.
3. புகலி — சூரபன்மனால் துன்பமடைந்த தேவர்கள் புகலடைந்து, அடைக்கலமாக வந்து தங்கிச் சிவனை வழிபட்டமை.
4. வெங்குரு — பிரமதேவனால் இகழப்பட்ட அசுரகுரு வாகிய சுக்கிரன் நாரதமுனிவரிடம் உப தேசம் பெற்று இத்தலத்தை அடைந்து பூசித்துத் தேவகுருவுக்குச் சமானமான தன்மையைப் பெற்றார்.
5. தோணிபுரம் — யுகமுடிவுக் காலத்தில் உலகனைத்தும் வெள்ளத்துள் அழுந்தப் பிரணவ உருவ மாகிய தோணியாய் இவ்வூர் மிதக்க, அதில் இறைவனும், இறைவியும் வீற்றிருந் தனர்.
6. பூந்தராய் — வராக அவதாரத்தில் திருமால் இரணி யாக்கன் என்னும் அரக்கன் ஒளித்து வைத்த பூமியைத் தன் கொம்புகளில் ஏந்திவந்து தந்து, பின்னவ்வரக்கனைக் கொன்ற பழி நீங்கும் வண்ணம் பூசித்த தலம்.

7. சிரபுரம் — பாற்கடல் கடையப்பட்ட காலத்தில், சயிங்கேயன் என்னும் ஓர் அசுரன் வேற்றுருத் தாங்கி வந்து அமுதுண்ண முனைந்தான். அவனைச் சூரியன் காட்டிவிடவே, திருமால் அவ்வரக்கன் தலையை வெட்டினார். தலை இராகுவாயிற்று; உடல் கேதுவாயிற்று. தலையாகிய இராகு பூசித்து ஒன்பது கோள்களில் ஒன்றாயிருக்கும் பேறு பெற்றமையால் சிரபுரம் எனப்பட்டது.

8. புறவம் — அக்கினி புறாவடிவம் கொண்டு வந்து சிபிச் சக்கரவர்த்திக்குத் தான் செய்த தீமை நீங்குதற் பொருட்டுத் தவம் செய்து பாவம் நீங்கிய இடம். அதனால் புறவம் எனப் பட்டது.

9. சண்பை — கபில முனிவர் இட்ட சாபப்படி யாதவர் குலத்தை அழிக்க இரும்பு உலக்கை பிறந்தது. அதனைப் பொடி செய்து கடலில் வீசக் கடற்கரை ஓரங்களில் சண்பைப் புற்களாக முளைத்தன. அப்புற்களைப் கொண்டு யாதவர் போரிட, அவை இரும்பு உலக்கைகளாக மாறி அனைவரையும அழித்தன. சண்பையால் ஏற்பட்ட இப் பாவம் நீங்கக் கண்ணபிரான் பூசித்த தலம் ஆதலால் சண்பை எனப்பட்டது.

10. சீகாழி — இறைவன் நடனத்தில் தோல்வியுற்ற காளியம்மையார் பூசித்த இடம் ஆதலால் சீகாழியாயிற்று.

11. கொச்சைவயம் — ஆற்றினிடையே பராசரர் மச்சகந்தியைப் புணர்ந்ததனாற் பெற்ற துர்க்கந்தமும், பழியும் போகும்படி பூசித்து அவ்வாறே பேறு பெற்ற தலம். ஆதலால் கொச்சை வயம் எனப்பட்டது.

12. கழுமலம் — உரோமச முனிவர் இத்தலத்தை அடைந்து ஞானோபதேசம் பெற்றுத் தம்மலங்கழுவப் பெற்று விளங்கியதால் கழுமலம் எனப் பட்டது.

ஆதாரம் : C. K. சுப்பிரமணிய முதலியார், சிவத்தலங்களில் திருப்பெயர் வரலாறும், சீகாழிப் பன்னிருதிருப்பெய வரலாறும்,

செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு. 8, பக். 395-411; 526-540.

## பின்னிணைப்பு எண். 4

## I. இயல்புக் கற்பனையாக அமைவன

### 1. அகிலாண்ட நாயகி பிள்ளைத்தமிழ்

1. இறைவன் தோற்றம், பாயிரம். 2.
2. தலவளம், பாயிரம் 2.
3. இந்திரன் பற்றிய புராணச் செய்திகளுக்குக் கற்பனைக் காரணம் படைத்துக் கூறல், காப்பு. 6.
4. இறைவி இறைவனைப் புந்திச் சிறைப்படுத்தியதன் காரணம் கூறல், காப்பு. 6.
5. திருமகள் பாற்கடலில் திருமாலைக் குடியேற்றியதன் காரணம் கூறல், காப்பு. 7.
6. இறைவியின் கூந்தல் வருணனை, தால். 3.
7. இறைவியின் வலைஞர்குல வாழ்வு, செங். 3.
8. ஊடல் காலத்தில் இறைவி இறைவனை உதைத்தமை, செங். 4. முத். 4.
9. முருகன் அணிந்துள்ள முத்து பற்றிய வருணனை, முத். 5
10. இறைவி பாலருந்தும் காட்சி, முத். 8.
11. கதிர்வர நிலவுமறைதல், வாரானை, 2.
12. மாணிக்க அம்மானை, அம்மானை, 3.
13. புவன அம்மானை, அம்மானை, 4.

## 2. பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழ்

1. ஆகாயம் புகைநிறம் எனக் கூறல், பாயிரம். 6.
2. இறைவன் தோற்றம், காப்பு. 2.
3. இறைவி தோற்றம், காப்பு. 3.
4. திருமகள் திருமாலுக்குப் பாற்கடல் தந்தமை, காப்பு. 7
5. வாளைமீன் பாய்தல், காப்பு 9.
6. தவளை வருணனை, காப்பு 10.
7. இறைவி வருணனை, காப்பு. 11.
8. தென்னை உயர்ச்சி, தால். 2.
9. நிலவளம், தால். 3.
10. சோலை வளம், தால். 8.
11. இறைவன் தோற்றம், சப். 5.
12. இறைவன் இறைவி திருமணக் காட்சி, சப். 8.
13. இறைவன் தோற்றம், முத். 3.
14. இறைவி வருணனை, முத். 4.
15. வருகைச் சிறப்பு, வாரானை. 1,
16. அம்மையின் பாதச் சிறப்பு, வாரானை. 3, 7.
17. மருதவளம், அம்மானை, 9
18. நகர்வளம் வருணனை, நீராடல். 9.
19. ஊஞ்சல் சிறப்பு, பொன். 1.
20. இறைவி தோற்ற வருணனை, பொன், 9.

## 3. காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்

1. மக்கள் இன்பம் துய்த்தல், தால். 2.
2. இறைவன் தோற்றம், செங். 2.
3. இறைவியின் இளமைப் பருவம், செங். 3.
4. இறைவியின் செங்கீரை ஆட்டம், செங். 7.
5. இறைவிக்குச் செய்யப்பட்ட ஒப்பனை, சப். 4.
6. இறைவியை அழைக்கும் முன்னிலை விளி, முத். 8,
7. இறைவி வருகை; நகர் வளம், வாரானை. 1.
8. இறைவி தோற்றம், வாரானை. 2.
9. இறைவியின் பாதச் சிறப்பு, வாரானை. 4.

## 4. திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ்

1. இறைவியின் முக்குத்திச் சிறப்பு, பாயிரம். 1
2. கடல் வளம் கூறல், பாயிரம். 2.
3. இறைவன் தோற்றம், காப்பு. 2.
4. திருமகள் திருமாலுக்குப் பாற்கடல் தந்தமை. காப்பு. 7.
5. இறைவியின் தோற்றச் சிறப்பும் பிற சிறப்புக்களும், செங். 1, 10; தால். 6, 7. 8, 9; சப். 8, 9, 10; முத். 1, 2, 3.
6. கடல்வளமும் நிலவளமும், தால். 5.
7. நாட்டு வளம், வாரானை, 6, 8, 9.
8. இறைவி வருணனை, நீராடல். 1.
9. ஊஞ்சல் வருணனை, பொன். 1, 3, 7.
10. இறைவி வருணனை (பாதாதிகேசம்), பொன். 10.

## 5. திருவிடைக்கழிமுருகர் பிள்ளைத்தமிழ்

1. மேருமலையை விநாயகர் முற்றும் பழாச் செங்காய் எனல், பாயிரம். 1.
2. இறைவன் வருணனை, காப்பு. 1.
3. முருகன் விளையாட்டுக்கள், செங். 1, 2.
4. நில வளம், தால். 2.
5. முருகன், பிரமன் உரையாடல், சப். 3.
6. முருகன் ஒப்பனை. வாரானை. 1,
7. முருகன் விளையாட்டு, வாரானை. 4; சிறுபறை. 6.
8. சிற்றில் சிதைக்கும் காட்சிகள், சிற்றில். 1–10.
9. காவிரிச் சிறப்பு, சிறுபறை. 9, 10.
10. முருகன் விளையாட்டு, சிறுதேர் 4.
11. நில வளம், சிறுதேர். 5.
12. வாளைமீன் துள்ளல், சிறுதேர். 6.

## 6. ஸ்ரீ அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ்

1. பொன்னி நதிச் சிறப்பு, சிறுபறை. 1, 3, 5.
2. அஃறிணை உயிரும் வேதம் ஓதுதல், சிற்றில். 7,
3. மாளிகைச் சிறப்பு, சிற்றில். 6.

7. மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ்

1. செல்வ வளம், தால். 1.
2. இறைவியின் தோற்ற வருணனை, சப். 3; வாரானை. 1, 8.
3. இறைவியின் பாதச் சிறப்பு, வாரானை. 3.
4. ஐந்திணை வளம், நீராடல். 8.
5. அம்மானைக் காய்கள் வருணனை, அம்மானை. 1, 2, 3
6. இறைவி வருணனை (பாதாதி கேசம்) பொன். 10.

8. சேக்கிழார் பிள்ளைத்தமிழ்

1. தொண்டை நாட்டு வளம், காப்பு. 8
2. சேக்கிழார் வருணனை, செங். 8.
3. முத்துக்களை அன்னமுட்டை எனல், தால். 1
4. குன்றத்தூர் வளம், தால். 5; முத். 6.
5. செந்நெல் வளர்ச்சி, சிற்றில். 2.
6. வாளைமீன், சிற்றில். 8.
7. நதி வளம், சிறுபறை. 2.

II உயர்வு நவிற்சியாக அமைவன :

1. அகிலாண்ட நாயகி பிள்ளைத்தமிழ்

1. வயல் வளம்—எருமை மேய்ச்சல், பாயிரம். 12.
2. வயல் வளம், பாயிரம். 3, 6; காப்பு. 2; தால். 1, 3.
3. இறைவியின் அழகு, பாயிரம். 10.
4. மாடங்களின் உயர்வு, பாயிரம். 2, 9.
5. மதில் சிறப்பு, பாயிரம். 8; தால். 5.
6. கரும்புச் சாற்று வெள்ளம், தால். 2.
7. காவிரிச் சிறப்பு. சப். 10.
8. உமையொருபாகன், வாரானை. 3.
9. அம்மானைச் சிறப்பு, அம்மானை. 1, 6.
10. நில வளம், அம்மானை. 7, 8.

## 2. பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழ்

1. மதிலின் உயர்வு, பாயிரம். 4.
2. வாளைமீன் துள்ளல், தால் 4.
3. இறைவியின் மழலை, முத். 6.
4. இறைவியின் அணிகலன், முத். 7.
5. கலைமகள், திருமகள் உடனிருக்கும் காட்சி, வரானை. 4.
6. அம்மானைக் காட்சிகள், அம்மானை. 2, 3, 6.
7. சிறுவர்தம் உழுதொழில், அம்மானை. 10
8. கொள்ளிட நதி வருணனை. நீராடல். 1, 2, 3.
9. வாளைமீன் துள்ளல், நீராடல். 7, 8.

## 3. காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்

1. வாளைமீன் துள்ளலுக்கு அஞ்சி வளர்ந்த மரங்கள், பாயிரம் 10.
2. நகர் வளம், தால். 1
3. மேகமும், யானைப்பாகர்களும், தால் 4.
4. இறைவியின் அழகு, முத். 3.
5. வாளைமீன் துள்ளல், வாரானை, 6; அம்மானை, 4, 5; நீராடல். 7.
6. தேர்செல் வீதிச் சிறப்பு, அம்மானை. 3.
7. கமுகில் கட்டிய ஊஞ்சலால் கற்பகம் அசைதல், அம்மானை. 7.
8. பொன்னி வருணனை நீராடல். 3.
9. மருத வளம், நீராடல். 8.
10. பலாப்பழமும் கடுவனும், நீராடல். 10.

## 4 திருவெண்ணீற்றுமை பிள்ளைத் தமிழ்

1. வாளைமீன் துள்ளல், தால். 3; அம்மானை. 8.
2. நில வளம், தால். 4.
3. அம்மானைக் காய்கள் பற்றிய வருணனை, அம்மானை. 1, 3.

## 5. திருவிடைக்கழிமுருகர் பிள்ளைத்தமிழ்

1. செல்வ வளம், தால். 1.
2. நில வளம், தால். 3.; சிறுதேர். 7.

4. முருகன் விளையாட்டு, வாரானை. 3.
5. தேன் வெள்ளம், சிறுதேர். 9.

6. ஸ்ரீ அம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ்

1. தல விருட்சத்தின் சிறப்பு, தால். 4.
2. கதிரவன் உடல் வளைந்து செல்லும் பொழில்கள், முத். 10.

7. மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ்

1. மந்தியின் செயல், தால். 2.
2. மலர்த்தேன் கடல்போலத் தோன்றல், தால். 4.
3. பலா விழுதலின் விளைவு, தால். 5.
4. அம்மானை வருணனை, அம்மானை. 1, 2, 3.
5. இறைவி நீராடலின் விளைவுகள், நீராடல். 3.
6. வாளைமீன் துள்ளல், பொன். 5.

8. சேக்கிழார் பிள்ளைத்தமிழ்

1. குன்றையூர் அன்னத்தின் செயல், செங். 5.
2. தெய்வப் பசுவின் பால் வெள்ளம், செங். 10.
3. செல்வ வளம், தால். 3.
4. வாளைமீன் துள்ளல், முத். 7, 8.
5. மேதி மேய்ந்த கரும்புச்சாறு, முத். 9.
6. வாளைமீன், மேதி, கரும்புச்சாறு, முத். 10.
7. முத்துக் குவியல், வாரானை. 4.
8. பொழில் வளம், சிற்றில். 1.
9. நில வளம், சிற்றில். 3
10. வாழைக் குருத்து, சிற்றில். 6.
11. பாலியாற்றலை, சிறுபறை. 3.
12. பாக்குமரத் தேன்கூடுகள், சிறுபறை. 4.
13. வேள்விப் புகை, சிறுதேர். 6.
14. அன்னமும் தேன் மழையும், சிறுதேர். 7.

## பின்னிணைப்பு எண். 5

### I இறைவனின் இருபத்தைந்து வடிவங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | சந்திரசேகரர் | — | சந்திரனைத் தலையில் சூடியவர் |
| 2. | உமாசகாயர் | — | உமாதேவிக்கு அருளியவர் |
| 3. | இடபாருடர் | — | இடபவாகனத்தில் எழுந்தருளுபவர் |
| 4. | நடராசர் | — | தாண்டவம் புரியும் கோலம் |
| 5. | கல்யாண சுந்தரர் | — | உமாதேவியைத் திருமணம் செய்யும் கோலம் |
| 6. | பிக்ஷாடனர் | — | தாருகாவனத்து முனிவர்களின் செருக்கடக்க, பிச்சை ஏற்கும் கோலத்தில் எழுந்தருளியமை |
| 7. | காமாரி | — | மன்மதனை எரித்த கோலம் |
| 8. | காலாரி | — | காலனை உதைத்து அடக்கிய கோலம் |
| 9. | திரிபுராரி | — | திரிபுரத்தை அழித்த கோலம் |
| 10. | ஜலந்தரர் | — | சலந்தரனை வென்ற கோலம் |
| 11. | கஜாரி | — | கயாசுரனை அழித்த கோலம் |
| 12. | வீரபத்ரர் | — | தக்கனை அழித்த கோலம் |
| 13. | ஹரியர்த்த மூர்த்தி | — | திருமாலை ஒருபாகமாக உடையவர் |
| 14. | அர்த்தநாரி | — | தேவியைப் பாகமாக உடையவர் |
| 15. | கிராத மூர்த்தி | — | அருச்சுனனுக்காக வேடர்கோலம் கொண்டமை |
| 16. | கங்காளர் | — | எலும்பு மாலை அணிந்த திருக்கோலம் |
| 17. | சண்டேசானுக்ரகர் | — | சண்டீசனுக்கு அருள் செய்த கோலம் |
| 18. | நீலகண்டர் | — | நஞ்சுண்டு கறுத்த கண்டத்தை உடையவர் |
| 19. | சக்ரநாதா | — | திருமாலுக்குச்சக்கிராயுதத்தைக் கொடுத்த கோலம் |
| 20. | விக்னப்ரசாதர் | — | விக்னேஸ்வரனுக்கு அனுக்கிரகம் செய்தவர் |

21. சோமாஸ்கந்தர் — உமையோடும் கந்தனோடும் கூடிய திருக்கோலம்

22. ஏகபாத மூர்த்தி — சங்கார காலத்தில் ஆன்மாக்கள் சக்தியில் ஒடுங்க, சக்தி சிவத்தில் ஒடுங்கிய திருக்கோலம்

23. சுகாசனர் — சுகாசனத்திலிருந்து தேவிக்கு உபதேசம் செய்த திருக்கோலம்

24. தக்ஷிணாமூர்த்தி — சனகர் முதலாகிய நால்வருக்கு, ஆலின் கீழிருந்து அறமுரைத்த கோலம்

25. லிங்கோத்பவர் — லிங்கத்தில் தோன்றியருளிய திருக்கோலம்

ஆதாரம் : ப. அருணாசலம், சைவசமயம் (ஓர் அறிமுகம்) பக். 3-4.

## முப்பத்தாறு தத்துவங்கள்

சுத்த தத்துவம், அசுத்த தத்துவம், வித்யா தத்துவம் என்று மூவகைப்படும்.

1. சுத்த தத்துவம், (சிவதத்துவம்) : (ஐந்து)

   1. சிவம்
   2. சக்தி
   3. சாதாக்கியம்
   4. ஈசுரம்
   5. வித்தை

2. அசுத்த தத்துவம் : (இருபது)

   1. பூதங்கள் — 5
   2. தன்மாத்திரைகள் — 5
   3. ஞானேந்திரியங்கள் — 5
   4. கன்மேந்திரியங்கள் — 5

த்யா தத்துவம் : (ஏழு)

1. மாயை
2. காலம்
3. நியதி
4. கலை
5. வித்தை
6. அராகம்
7. புருடன்

ஆதாரம் : (ம. சா. அறிவுடைநம்பி, போதமும் சுபக்கமும், ப. 24).

# துணைநூற் பட்டியல்

## 1. நூல்கள்

### தமிழ்


அடிகளாசிரியர், (உ. ஆ.), சேக்கிழார் பிள்ளைத்தமிழ், பாரதி அச்சகம், குடந்தை.

அரங்கசாமி, ப., மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் வரலாறு, திருச்சிராப் பள்ளித்தமிழ்ச்சங்கம் அன்பளிப்பு, 1976.

அரவிந்தன், மு. வை., உரையாசிரியர்கள், ஷண்முகம்பிரஸ், சென்னை, 1977.

அருணாசலம், ப., சைவசமயம் (ஓர் அறிமுகம்), நாகர்கோவில், 1979.

அருணை வடிவேலு முதலியார், சி., சித்தாந்தத் தெளிவியல், தருமபுரம், 1968.

அறிவுடை நம்பி, ம.சா., போதமும் சுபக்கமும், வளவன் வெளியீடு, மதுரை, 1978.

ஆதிமூலஞ் செட்டியார், (ப. ஆ), காஞ்சிப்புராணம், கலாரத்நாகர வச்சுக் கூடம், சென்னை, 1910.

இராசமாணிக்கனார், மா., சைவ சமய வளர்ச்சி, ஔவை நூலகம், சென்னை, 1958.

——————, சேக்கிழார். சொர்ணம்மாள் நினைவுச்சொற் பொழிவுகள், அண்ணாமலைப்பல்கலைக் கழகம், 1969.

இராமசாமி நாயுடு, தமிழ் இலக்கியம், அண்ணா மலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர், 1954,

இராமசாமிப் புலவர், சு. அ., தமிழ்ப் புலவர் வரிசை, பகுதி–க, கழக வெளியீடு, 1964.

————————, தமிழ்ப் புலவர் வரிசை, மூன்றாம் புத்தகம், கழக வெளியீடு, 1951.

இராமநாத பிள்ளை, ப., (ப.ஆ.), திருவருட்பயன் வினாவெண்பா, கழக வெளியீடு, 1975.

————————, திருவுந்தியாரும் திருக்களிற்றுப் படியாரும், கழகவெளியீடு, 1978.

————————, சிவப்பிரகாசம் மூலமும் மதுரைச் சிவப்பிரகாசர் உரையும், கழக வெளியீடு, 1976.

————————, சிவஞான போதமும் சிவஞான முனிவர் அருளிச் செய்த சிற்றுரையும், கழக வெளியீடு, 1977.

————————, சிவஞானசித்தியார் பரபக்கம், கழக வெளியீடு, 1975,

————————, சிவஞானசித்தியார் சுபக்கம், கழக வெளியீடு, 1973.

————————, (உ.ஆ.), திருமந்திரம் மூவாயிரம் (முதல் பகுதி), கழக வெளியீடு, 1962.

இராமநாதன் செட்டியார், மீ. பொன்., (உ.ஆ.), அம்பிகாபதி கோவை, கழக வெளியீடு, 1963,

இராமலிங்கத் தம்பிரான், கொ., (உ. ஆ.), வச்சணந்திமாலை என்னும் வெண்பாப் பாட்டியலும் வரையறுத்த பாட்டியலும், கழக வெளியீடு, 1969,

————————, தண்டியலங்காரம்,

| | |
|---|---|
| தரன், டி.எஸ்., (ப. ஆ.), | குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழ், தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின் ஸரஸ்வதி மஹால் நூல் நிலையம், 1974. |
| ] ஐயர், எஸ். ஜி., .), | நவநீதப் பாட்டியல் மூலமும் உரையும், மகாமகோபாத்தியாய உ. வே. சா. நூல் நிலையம், 1961. |
| ]பிள்ளை, மு., | ஈழநாட்டின் தமிழ்ச்சுடர் மணிகள், தென்புலோலியூர், பாரி நிலையம் 1967. |
| ணசுந்தரனார், திரு. வி., | சைவத்தின் சமரசம், அரசு புக் டிப்போ, சென்னை, 1970. |
| ணசாமி, வே., | தமிழில் தலபுராண இலக்கியம், ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோவில், 1974. |
| ன், கோ., | பள்ளு இலக்கியம் ஒரு சமூகவியல் பார்வை, அன்னம் பிரைவேட் லிமிடெட், 1981. |
| சபதி, க., | இலக்கியமும் திறனாய்வும், சென்னை புக் ஹவுஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1981. |
| சபதி, க., யன், இ., | கவிதை நயம், பாட்டாளிகள் வெளியீடு, சென்னை, 1976. |
| சபிள்ளை, த., | ஆறுமுகநாவலர் சரித்திரம், வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை, 1955. |
| லையர், (ப.ஆ.), | இலக்கணவிளக்கம் பொருளதிகாரம் அணியியல், தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின் சரசுவதி மகால் நூல் நிலையம், 1973. |
| ந்தராச முதலியார், , (உ.ஆ.), | நம்பியகப்பொருள், கழகவெளிவீடு 1969. |

__________________, வீரசோழியம், கழக வெளியீடு, 1970.

சதாசிவ செட்டியார், (உ.ஆ.), சேக்கிழார் பிள்ளைத்தமிழ், கழக வெளியீடு, 1967.

சண்முகம் பிள்ளை, மு., சிற்றிலக்கிய வளர்ச்சி, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1981.

சத்தியமூர்த்தி, வெ. இராம., இலக்கியத்தில் படிமம், செந்தமிழ் அச்சகம், கோவை 1983.

சடகோபராமாநுஜாசாரியர், கிருஷ்ணமாசாரி சே., (ப.ஆ.), நன்னூல் (காண்டிகை உரை), Educational Publishers, சென்னை, 1958.

சாமிநாதையர், உ. வே., என் சரித்திரம், கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1950.

__________________, வித்துவான் தியாகராச செட்டியார், கலைமகள் காரியாலயம், சென்னை, 1951.

சாமிநாதையர், உ. வே., (ப.ஆ.), ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பிரபந்தத் திரட்டு, கமர்ஷியல் அச்சுக்கூடம், சென்னை, 1926.

__________________, ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் - முதல் பாகம், கேஸரி அச்சுக்கூடம், சென்னை, 1933.

__________________, ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் — இரண்டாம் பாகம், கேஸரி அச்சுக்கூடம், சென்னை, 1934.

———————, மகாவைத்தியநாதையர், கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1945.

சாமிமுத்து, ச., தமிழ் இலக்கிய வரலாறு, யுனைடெட் பப்ளிஷர்ஸ், திருச்சி - 2, 1962.

சாலினி இளந்திரையன், வாழ்க்கை வரலாற்று இலக்கியம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1974.

சாலை இளந்திரையன், தமிழில் சிறுகதை, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1966.

சிவத்தம்பி, கா., இலக்கியமும் கருத்துநிலையும், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1982.

சுத்தானந்த பாரதியார், திருமந்திர விளக்கம் (முதற் பகுதி), சன்மார்க்க விளக்கம், கழக வெளியீடு, 1973.

சுந்தரமூர்த்தி, கு., (ப. ஆ.), சீகாழிக்கோவை குறிப்புரையுடன், திருப்பனந்தாள், 1975.

சுப்பிரமணிய பிள்ளை, இ. மு., வள்ளுவர்இருபதாம்நூற்றாண்டுத் தமிழ், சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி, திருவள்ளுவர் ஆண்டு, 1992.

சுப்பிரமணியபிள்ளை, த., சிவஸ்தலமஞ்சரி, சென்னை மிமோரியல் அச்சுக்கூடம், 1905.

சுப்பிரமணியம் பிள்ளை, கா., மெய்கண்டாரும் சிவஞான போதமும், சைவசித்தாந்த மகா சமாஜம், சென்னை, 1932.

சுப்பிரமணியம், கா. நா., படித்திருக்கிறீர்களா?, புதுத்தமிழ் இலக்கிய நூல்கள், இரண்டாவது வரிசை, அமுத நிலையம்

பிரைவேட் லிமிடெட், சென்னை, 1958.

சுப்பிரமணியன், ச.வே., (ப.ஆ.), குவலயானந்தம் சந்திரலோகம், தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1979.

__________, இலக்கிய வகையும் வடிவும், தமிழ்ப்பதிப்பகம்,சென்னை,1984.

__________, கம்பன் இலக்கிய உத்திகள், மெய்யம்மை பதிப்பகம், காரைக்குடி, 1982.

__________, கம்பன் கற்பனை, தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1978.

__________, இளங்கோவின் இலக்கிய உத்திகள்,உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

சுப்புரெட்டியார், ந., கவிதையனுபவம், கழக வெளியீடு, 1961.

செயராமன், ந. வீ., சிற்றிலக்கியத் திறனாய்வு, இலக்கியப் பதிப்பகம், சென்னை, 1980.

சேக்கிழார், திருத்தொண்டர் மாக்கதை, கழகப் பொன்விழா வெளியீடு, 1970.

சேசையா, மா., நீதிபதி வேதநாயகர், திருவடிப் பதிப்பு, மதுரை, 1976.

சோமசுந்தரனார், பொ, வே., (உ.ஆ.), திருக்கோவையார் உரையும் விளக்கமும், கழக வெளியீடு, 1970.

ஞானமூர்த்தி, தா. ஏ., இலக்கியத் திறனாய்வியல், சிந்தாமணி அச்சகம், கோவை, 1980.

தனஞ்செயராச சிங்கம், ச., நாவலர் பணிகள், இந்துமாணவர் சங்கம், இலங்கைப் பல்கலைக் கழகம், பேராதனை, 1969.

திருக்கச்சி நம்பிதாஸர், கா. வெ., (ப. ஆ.), நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், வைசயந்தி அச்சுக்கூடம், சென்னை, 1913.

திருநாவுக்கரசு நாயனார், தேவாரத் திருப்பதிகங்கள், தருமபுர ஆதீனம், 1957.

தேவராசன், எம். ஏ., அருந்தமிழ் வளர்த்த ஐம்பெரும் புலவர்கள், விசாலாட்சி பதிப்பகம், சென்னை, 1955.

நக்கீரர், (உ. ஆ.), களவியல் என்ற இறையனாரகப் பொருள் உரையுடன், கழக வெளியீடு, 1953.

நச்சினார்க்கினியர், (உ. ஆ.), தொல்காப்பியம் பொருளதிகாரம், கழக வெளியீடு, 1971.

நடராசன், அ. லெ, வள்ளலார் வாழ்வும் வாக்கும், இராமலிங்கர் பணிமன்றம் வெளியீடு, சென்னை, 1974.

நடேசமுதலியார், அ., (உ. ஆ.), திருத்தவத்துறைப் பெருந்திருப் பிராட்டியார் பிள்ளைத்தமிழ், திருத்தவத்துறை ஸ்ரீசப்தரிஷிசுவரர்திருக்கோயில், லால்குடி, 1966.

நீதிவாணன், ஜெ., நடையியல், முல்லை வெளியீடு, மதுரை, 1979.

பாலசுப்பிரமணியன், இராம., மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை வாழ்வும் இலக்கியமும், மாப்பிள்ளைப் பதிப்பகம், சென்னை, தி.பி. 2007.

பாலூர் கண்ணப்ப முதலியார், (உ. ஆ.), சேக்கிழார் பிள்ளைத்தமிழ், ஸ்ரீ கந்தப்பெருமான் தேவஸ்தானம், திருப்போரூர், 1964.

பாஸ்கர தொண்டைமான், தொ.மு., வேங்கடம் முதல் குமரி வரை பொன்னியின் மடியிலே எஸ்.ஆர். சுப்பிரமணியபிள்ளை பப்ளிஷர்ஸ், திருநெல்வேலி, 1971.

புலவர் குழந்தை, தொடையதிகாரம், பாரி நிலையம், சென்னை, 1967.

புலியூர்க் கேசிகன், (உ.ஆ.), அகநானூறு, களிற்றியானைநிரை பாரி நிலையம், சென்னை, 1978.

பெரியகருப்பன், இராம, (தமிழண்ணல்), சங்க இலக்கிய ஒப்பீடு, முதற் பாகம்-இலக்கியக் கொள்கைகள், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1979.

பொன்னுசாமி, ச., (ப.ஆ.), ஆறுமுகநாவலர் பிரபந்தத் திரட்டு (முதற்பாகம்), வித்தியாநுபாலனயந்திரசாலை, சென்னை, 1954.

பேராசிரியர், (உ.ஆ.), தொல்காப்பியம்பொருளதிகாரம், கழக வெளியீடு, 1966.

மகாதேவ முதலியார், வா., பெரியபுராண ஆராய்ச்சி, கழக வெளியீடு, 1970.

மறைமலையடிகள், முற்காலப் பிற்காலத் தமிழ் புலவோர், கழகவெளியீடு, 1936.

மாணிக்கம், வ. சுப., தமிழ்க் காதல், பாரி நிலையம், சென்னை, 1962.

________________, தலைமையுரை, சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் (நான்காவது மாநாடு), கழக வெளியீடு, 1961.

மாணிக்கம், மு., தொல்காப்பியருக்குமுன் தமிழில் காவியங்கள், மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோயம்புத்தூர், 1976.

கள், கலைக்குயில் வெளியீடு, குடந்தை, 1983.

மீனாட்சிசுந்தரம் பிள்ளை, த ச., (தொ. ஆ), திருவாவடுதுறை ஆதீன வரலாறு, கும்பாபிஷேக வெளியீடு, ஸ்ரீவெங்கடேச்வர் அச்சகம், கும்பகோணம், 1950.

________, (உ—ஆ) ஸ்ரீ அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ், திருவாவடுதுறை ஆதீனம், 1961.

முத்து சண்முகன் & நிர்மலா மோகன், சிற்றிலக்கியங்களின் தோற்றமும் வகையும், முத்துப் பதிப்பகம், மதுரை, 1979.

முத்துராசன், கு., சிற்றிலக்கியச் சிந்தனைகள், தேன் தமிழ்ப் பதிப்பகம், சேலம், 1980.

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார், புலவர் பெருமான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, அன்பு நிலையம், இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா, 1944.

ராஜகோபாலாசாரியார், கே., இலக்கண விளக்கம் பொருளியல், ஸ்டார் பிரசுரம், சென்னை, 1962.

________, இலக்கண விளக்கம் 6 அணியியல் ஸ்டார் பிரசுரம், சென்னை, 1982.

வரதராசன் மு., இலக்கியத் திறன் பாரி நிலையம், சென்னை, 1965.

________, நெடுந்தொகைச் செல்வம், பாரி நிலையம், சென்னை, 1957.

________, திருக்குறள் தெளிவுரை, கழக வெளியீடு, 1969.

———————, நற்றிணைச் செல்வம், பாரி நிலையம், சென்னை, 1958.

விமலானந்தம், மது. ச., தமிழ் இலக்கிய வரலாறு, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1979.

வேங்கடசாமி, மயிலை, சீனி., 19-ஆம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், அழகப்பா புத்தக நிலையம், 1962.

வேங்கடராமன், சு., அகிலன் சிறுகதைகள் — ஒரு திறனாய்வு, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1977,

வேதநாயகம் பிள்ளை, ச., சர்வசமய சமரசக் கீர்த்தனை, தமிழக அரசு சங்கீத நாடக சங்கத்தின் பொருளுதவியால் வெளியிடப்பட்டது, 1970.

வேலுப்பிள்ளை. அ., தமிழிலக்கியத்தில் காலமும் கருத்தும், பாரி புத்தகப் பண்ணை, 1978.

வைத்தியநாதன், எச்., வழிபாடும் சமயமும், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1977.

வையாபுரிப்பிள்ளை, எஸ்., தமிழ்ச் சுடர்மணிகள், பாரி நிலையம், சென்னை, 1968.

சிவப்பதிகள் வரலாறு, கழக வெளியீடு, 1977.

சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் (இரண்டாவது மாநாடு), கழக வெளியீடு, 1959.

நானாற்பது, கழக வெளியீடு, 1956.


ஆங்கிலம்


Birjadish Prasad, A Background to the Study of English Literature, Macmillan and Co. Limited, Madras, 1964

| | |
|---|---|
| Brett, R. L., | Fancy and Imagination, Methuen and Co. Limited, 1969. |
| Hooper, A. G., | An Introduction to the Study of Languages and Literature, Longmans Green and Co Limited, London, 1961. |
| Hudson, W. H., | An Introduction to the Study of Literature, George G. Harrap and Co. Ltd., 1965. |
| Johnson, R. V., | Aestheticism, Methuen and Co. Ltd., 1969. |
| Lascelles Abercrombie, | Principles of Literary Criticism, Victor Gollan & Ltd., London, 1932. |
| Lucas, F.L., | Style, Cassell & Co. Ltd., London, 1955. |
| Murry, J.M., | The Problem of Style, Oxford University, London, 1972. |
| Peter Dixon, | Rhetoric, Methuen and Co. Ltd., 1971. |
| Rane Welleck and Austin warren | Theory of Literature, Penguin Books, Third Edition, Reprinted in Pelican Books, 1980. |
| Sridharam K. Guruswamy, | A Poet's Poet, Mahamahopadhyaya Dr. U.V. Swaminatha Iyer Library, Trivanmiyur, 1976. |
| Swami Vedachalam. | Ancient and Modern Tamil Poets, The T. M. Press, Pallavaram, 1939. |

## II. கட்டுரைகள்


கந்தசாமி, ஆ., — **திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை,** தமிழிலக்கியக் கொள்கை — 3, உலகத்தமிழ் ஆராய்ச்சிநிறுவனம் சென்னை, 1978

சாலை இளந்திரையன், — **வாழ்க்கை வரலாறு,** புதுத்தமிழ் முன்னோடிகள், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1969.

செல்வராசன், பு., — **மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை,** தமிழ்ப் புலவர் பெருமக்கள்-III, விந்தியா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1970.

பெருமாள், ஏ.என்., — **திருவிளையாடற்புராணம்,** தமிழிலக்கியக் கொள்கை—4, உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 1979.


## III. இதழ்கள்


அப்புவையங்கார் ஸ்வாமி, ரெ., — **கோவை,** செந்தமிழ்தொகுதி—33, நவம்பர்-டிசம்பர், 1935.

எப்சிபாய், ஆ., — **கோவை இலக்கணம்,** ஆய்வு மலர், தொகுதி - 1, கேரள பல்கலைக்கழகம், 1972.

இராமகிருட்டிணன். கு., — **பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் வருணனைத் திறம்,** செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 39, 1964-65.

இராமலிங்கம், டி. எஸ்., — **உவமையின் சிகரம்,** தமிழ்வட்டம் 2வது ஆண்டு மலர். 1969.

கனகசபாபதி, சி., — **புதுமை இலக்கியம் – சில சிந்தனைகள்,** எழுத்து மே,1969.

சாமிநாதையர், உ. வே., **பாலைப் பழம்**, சிவநேசன், பன்னிரண்டாம் ஆண்டுத் தொகுதி சிவநேசன் அச்சியந்திரசாலை, தென்குடித்திட்டை, 1939.

சிவகுமாரன், ச., **மடாலயங்களில்–சமுதாய நிலையங்களில் தமிழர் பண்பாடு**, தருமைகனகாபிஷேக விழா மலர், ஞானசம்பந்தம் அச்சகம், தருமபுரம், 1961.

சுப்பிரமணிய முதலியார், சி. கே., **சிவத்தலங்களின் திருப்பெயர் வரலாறும், சீகாழிப் பன்னிரு திருப்பெயர் வரலாறும்**, செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு-8,

விசுவநாத ஐயர், ரா., **மகாவித்துவானும் மகாமகோபாத்யாயரும்**, தமிழ்வட்டம், 2வது ஆண்டு மலர், 1969.

வேங்கடராம செட்டியார், செ., **சிற்றின்பத்துறையில் பேரின்ப நெறி**, சைவசித்தாந்த மகாசமாஜம் பொன்விழா, மலர், சாது அச்சுக்கூடம், சென்னை, 1955.

வேங்கடராமன், சு., **தலபுராணத்தோற்றம்**, செந்தமிழ், தொகுதி-78, பகுதி–1, மார்ச்சு 1984.

## IV. ஆய்வேடுகள்

### தமிழ்

அன்னக்கிளி, எ.: மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் வருணனைப் பகுப்பாய்வு, எம்.ஃபில், பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு, கேரளப் பல்கலைக்கழகம்,

ஆறுமுகம், ப., மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் புராண நூல்கள், பிஎச். டி. பட்டத்திற்காக அளிக்கப்பட்ட ஆய்வேடு, வெங்கடேசுவரன் பல்கலைக்கழகம், திருப்பதி, 1983.

ஊரப்பன், கோவை இலக்கியங்களின் வளர்ச்சியும் மதிப்பீடும் — சிறப்பாகத் தஞ்சைவாணன் கோவை, பிஎச். டி. ஆய்வேடு. சென்னைப் பல்கலைக்கழகம், 1983.

கோமதி, ரே. ரா., திருஞானசம்பந்தர் தேவாரமும் சைவ சித்தாந்தக் கருத்துக்களும், பிஎச். டி. ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 1983

சிங்காரவடிவேலன், ரெ.., சங்க இலக்கிய உவமைகள், பிஎச். டி. ஆய்வேடு, மதுரைப் பல்கலைக்கழகம், 1976.

மகாலிங்கம், வி. ஆர்., குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், எம். லிட். ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1956

வளவன், எஸ்.., பிள்ளைத்தமிழ் தோற்றமும் வளர்ச்சியும், எம். லிட், ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம்.

ஆங்கிலம்

Sathasivam, V., (Ceylon Government Research Scholar) Tamil Poetry of the Nineteenth Century, Thesis submitted for the M. Litt. Degree Annamalai University, 1948.

V. அகராதிகள்

இன்னாசி, சு., (ப. ஆ.) வீரமாமுனிவர் அருளிய சதுரகராதி, வீரமாமுனிவர் ஆய்வுக் கழகம், தூய சவேரியார் கல்லூரி, பாளையங்கோட்டை, 1979.

சிங்காரவேலு முதலியார், ஆ., அபிதான சிந்தாமணி, Asian Educational Services, New Delhi, 1982.

Encyclopedia Americana, volume 23 & 25, Americana Corporation, 1957.

Encyclopaedia Britanica, VIII & IX, Inc. Helen Hemingway Benton, Publisher, 1973-74.



*—*